

## நூல் விபர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பாரதத்தை உலுக்கிய வழக்குகள் |
| ஆசிரியர் பெயர் | : | தொண்டர் |
| முதற்பதிப்பு | : | 2006 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| மொழி | : | தமிழ் |
| நூல் அளவு | : | டிம்மி1x8 |
| நூல் கட்டுமானம் | : | சாதாரண கட்டு |
| தாள் | : | 60 G.S.M. வெள்ளைத் தாள் |
| மொத்த பக்கங்கள் | : | 191 |
| அச்சு | : | 12 PT |
| விலை ரு. | : | 72.00 |
| பதிப்பாளர் | : | இந்திரா பதிப்பகம் |
| ஒளி அச்சு | : | புவனா கிராஃபிக்ஸ், நாகை. |
| அச்சிட்டோர் | : | தாரா அச்சகம், நாகப்பட்டினம். |

## உள்ளே ...

# 1. திருநெல்வேலிச் சதி

வங்காள மாகாணத்தை வகுப்பு வெறி எழக்கூடிய வகையில் பிரிட்டிஷ் ஆட்சியாளர் இரண்டாகப் பிரித்தார்கள். இதன் மேல் அந்த ஆட்சியினர் மீது பாரத மக்கள் பகிரங்கமாகத் தமது அதிருப்தியைக் காட்டினார்கள். பாரீந்திரகுமார் கோஷ் என்ற வங்காளி இளைஞரின் தலைமையில் பல வங்காளி வாலிபர்கள் ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் பயங்கரமான புரட்சிகளிலும் சதிச் செயல்களிலும் ஈடுபட்டார்கள். 1898 ஏப்ரல் 30-ஆம் தேதி முஸாபர்புரில் வெடிகுண்டுகள் வெடித்து ஆங்கில அரசாங்கத்தைக் கலக்கியவர்கள் இவர்கள்தான்.

இந்தப் போரில் தமிழர்களும் பின்வாங்கவில்லை. கப்பலோட்டிய தமிழன் என்று பின்னாளில் கீர்த்தி பெற்ற தேசபக்தர் வ.உ.சிதம்பரம் பிள்ளையின் தலைமையில் சென்னை ராஜ்யத்தில் பல இளைஞர்கள் ஒன்று கூடிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கவிழ்க்கும் சதிகளில் ஈடுபட்டார்கள். மிகவும் சிறந்த பேச்சாளரான தேச பக்தர் சுப்பிரமணிய சிவா இந்த அரிய பணியில் சிதம்பர பிள்ளைக்கு வலது கரமாகத் திகழ்ந்தார்.

தூத்துக்குடியில் கை நிறைய வருமானம் பெற்று வந்த சிறந்த வழக்கறிஞர் சிதம்பர பிள்ளை, சுதேசிப் பொருள்களுக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்ற உயர்ந்த லட்சியத்தோடு அயல்நாட்டுப் பொருள்களை - குறிப்பாகப் பிரிட்டிஷ்காரரின் பொருள்களை அவர் பகிஷ்கரித்து வந்தார். பிரிட்டிஷாரின் கப்பல் கம்பெனிக்குப் போட்டியாக இந்த மாவீரர் சுதேசி ஸ்டீம் ஷிப்

கம்பெனி என்ற ஒரு கப்பல் கம்பெனியை நிறுவிப் பாரதத்துக்கும் இலங்கைக்கும் இடையே கடல் போக்குவரத்து ஏற்படுத்தி வியாபாரத்தை வளர்க்கலானார். மேலும், பிரிட்டிஷாரின் உடைமையான ஆலைகளில் தொழிலாளிகளை முடுக்கிவிட்டு வேலை நிறுத்தமும் செய்வித்தார். சிதம்பரம் பிள்ளையின் துணிச்சலையும், மக்களிடையே அவர் பெற்றிருந்த செல்வாக்கையும் உணர்ந்த அரசாங்கம் அவர் மீது கோபங்கொண்டது. பழி தீர்த்துக் கொள்ளத் தகுந்த ஒரு சந்தர்ப்பத்தையும் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது.

வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சி சம்பந்தமாக 1908-மார்ச் 12-இல் சிதம்பரம் பிள்ளையையும் சுப்பிரமணிய சிவாவையும் அரசாங்கம் கைது செய்தது. அதற்கு அடுத்த தினமே திருநெல்வேலி மக்கள் உள்ளங் கொதித்து வீறு கொண்டெழுந்து குழப்பம் உண்டாக்கினார்கள். அன்று திருநெல்வேலியில் நிகழ்ந்த குழப்பத்தையும் கலவரத்தையும் பின்னாளில் ரௌலத் கமிட்டி இப்படி வர்ணித்தது.

"திட்டமிட்டே அரசாங்கத்தின் உடைமைகளை நாசம் செய்ய வேண்டும் என்ற தீய எண்ணத்தோடு ஆத்திரங் கொண்டு இந்த சதிச் செயல்களில் மக்கள் ஈடுபட்டிருக் கிறார்கள். ஸப் ரெஜிஸ்டிராரின் காரியாலயத்தைத் தவிர திருநெல்வேலி நகரின் பிற சர்க்கார்க் கட்டிடங்கள் அனைத்தையும் பழுதுபடுத்திவிட்டார்கள். அந்தக் கட்டிடங்களில் இருந்த மரச் சாமான்களையும் தஸ்தாவேஜிகளையும் தீக்கிரையாக்கியிருக் கிறார்கள். பல கட்டிடங்கள் - குறிப்பாக, முனிஸிபல் காரியாலயம் மிகவும் சேதமாகியிருக்கின்றன.

இந்த பயங்கரக் கலவரத்துக்கும் குழப்பத்துக்கும் மூல காரணரான சிதம்பரம் பிள்ளையை ஒரேயடியாக நசுக்கி விடத் தீர்மானித்தது ஏகாதிபத்தியம். ஆகவே, அரசருக்கு எதிரர்கப் போரிட அவர் ஆயத்தமானதாகவும், பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு

எதிராகச் சதிச் செயலில் ஈடுபட்டிருந்ததாகவும் குற்றம் சாட்டி அவரை ஸெஷன்ஸ் கோர்ட்டில் அதிகாரிகள் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

நீதிபதி ஏ.எஃப்.பின்ஹேயின் முன் இந்த விசாரணை தொடங்கிய போது, வங்காளத்தில் அலிபுர்ச்சதி வழக்கும் தொடங்கியிருந்தது. அலிபுர்ச்சதி வழக்கில் அப்ரூவராக மாறிய நரேன் கோஸாயி தனது வாக்குமூலத்தில் தென்னிந்தியாவில் ‘பேசும்பர்’ என்ற பெயரைத் தாங்கிய தமிழர் ஒருவரின் தலைமையில் பல திட்டங்களுடன் பயங்கரச் சதிக் கூட்டம் ஒன்று உருவாகி வருவதாக ஓர் அரிய தகவலை வெளியிட்டு விட்டான். ஆயினும், இவன் குறிப்பிட்ட பேசும்பர் என்னும் நபரைப் போலீஸாரால் கண்டுபிடிக்க முடியாமல் போயிற்று. எனவே, சிதம்பரம் என்ற பெயரையே பேசும்பர் என்று நரேன் கோஸாயி தெரியாமலோ வேண்டுமென்றோ திரித்துக் கூறியிருக்க வேண்டும் என்று அனுமானித்து விட்டார்கள் என்றும், இந்த அனுமானத்தின் பேரில்தான் தேசபக்தர் சிதம்பரம் பிள்ளைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் பல இன்னல்களை விளைவித்தனர் என்றும் கருதுவோர் உண்டு.

அது எப்படியானாலும், ஜட்ஜ் இந்த வழக்கில் முக்கிய எதிரிகளான சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா இருவருக்கும் எண்பது ஆண்டுக் காலம் தீவாந்தர தண்டனை விதித்துவிட்டார். சிறிதும் ஈவிரக்கம் இல்லாத இந்த தண்டனையைக் கேட்டுப் பாரதம் முழுவதுமே அதிர்ச்சி அடைந்தது. பல பத்திரிகைகளும் நீதிபதி பின்ஹேயின் தீர்ப்பை வன்மையாகக் கண்டித்துப் பல தலையங்கங்கள் வரைந்தன. முக்கியமாக இந்தியரின் நிர்வாகத்துக்கு உட்பட்ட தமிழ்நாட்டுச் சுதேசமித்திரன், வங்க நாட்டு வங்காளி, அமிர்த பஜார் ஆகியவையும், ஆங்கிலேயரின் நிர்வாகத்துக்கு உட்பட்ட ஸ்டேட்ஸ்மன், ஸ்டாண்டார்ட், இங்க்லீஷ்மன் ஆகிய பத்திரிகைகளும் இந்தக் கொடுந் தண்டனையை வெறுத்து எழுதின.

பிள்ளை, சிவா இருவரும் அப்பீல் செய்து கொண்டார்கள்; கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத இந்தப் பயங்கரத் தண்டனையை மேல் கோர்ட்டு நீதிபதிகள் வெகுவாகக் குறைத்துப் பத்து ஆண்டுக் கடுங்காவல் தண்டனையாக மாற்றினார்கள். ஆனாலும், அந்தக் கடுங்காவல் தண்டனையில் இந்த இருவரும் பட்ட அவதிகளைச் சொல்ல முடியாது. இவர்களைச் சிறை அதிகாரிகள் சகிக்க முடியாத பல சித்திரவதைகளுக்கு உள்ளாக்கினார்கள்; இருவரையும் தடியால் அடித்துத் துன்புறுத்தி னார்கள். இது மட்டுமல்ல; கனத்த இரும்புச் சங்கிலியால் இவர்களைப் பிணைத்தும் வைத்திருந்தார்கள். நாள் ஒன்றுக்குத் தொடர்ச்சியாக எட்டு மணி நேரம் எண்ணெய் ஆட்டும் செக்கு இழுக்க இருவரையும் வலுக் கட்டாயப்படுத்தினார்கள்.

இந்தச் சமயந்தான் திருநெல்வேலியில் ஜில்லா கலெக்டரும் மாஜிஸ்ரேட்டுமாகப் பதவியேற்றார் ஆஷ் என்னும் ஐ.ஸி.எஸ்.காரரர். கல் நெஞ்சம் படைத்த ஆங்கிலேயர் இவர். காட்டுமிராண்டிச் சுதேசிகளின் பித்தலாட்டங்களுக்குச் சற்றும் இடங்கொடாத கடுமையான இரும்பு மனிதர் என்று இவரைப் பிரிட்டிஷ் ஆட்சியாளர் போற்றிப் புகழ்ந்தார்கள். அதற்கேற்றாற்போல் இவரும் இரும்புக் கரத்துடனேதான் திருநெல்வேலியில் நிர்வாகம் நடத்தி வந்தார். பொதுக்கூட்டங்களுக்குத் தடையுத்தரவு போட்டுத் தீவிரமாக மக்களை அமுக்கினார். பத்திரிகை களையும் கண் குத்திப் பாம்பு போல் உன்னிப்பாகக் கண்காணித்தார். வந்தேமாதரம் என்ற கோஷத்தை அறவே தடுத்தார்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதியான இந்த ஆஷ் துரையின் கெடுபிடியும் அடக்கு முறையும் தீவிரம் ஆக ஆகப் புரட்சி வீரர்கள் மேலும் வீறு கொண்டு எழுந்தார்கள். திருநெல்வேலியில் மறைந்திருந்த புரட்சி வீரர்கள் அங்கேயிருந்து

ரகசியமாகத் தங்கள் இருப்பிடத்தைப் பிரெஞ்சுப் பிரதேசமான புதுவைக்கு மாற்றிக் கொண்டு விட்டார்கள். மகாகவி பாரதியாரும் இவர்களில் ஒருவர். தமிழ்நாட்டில் தாம் இருந்த போது இந்தியா என்றொரு வாரப் பத்திரிகையைப் பாரதியார் நடத்தி வந்தார். ஆனால் அந்தப் பத்திரிகையின் உரிமையாளரான சீனிவாசாச்சாரியாரை ஆங்கில அரசாங்கம் கைது செய்து தண்டித்ததால், புதுவைக்குச் சென்று அங்கிருந்து தொடர்ந்து இந்தியாவைப் பாரதியார் வெளியிட்டு வந்தார்.

பாரதத்தை உலுக்கிய பல சதி வழக்குகளில் சம்பந்தப்பட்ட வீரர்களின் புரட்சிச் செயல்கள் இந்த சின்னஞ் சிறிய ஊரில்தான் மறைவாக உருவாகி வந்தன. அலிபுர்ச் சதி வழக்கில் சிக்கிப் பிறகு விடுதலையான மகான் அரவிந்த கோஷும் சில மாதத்துக்கெல்லாம் இதே புதுவைக்குத்தான் வந்து சேர்ந்தார். ஆயினும், நம் வ.வே.சு.ஐயர் அங்கே வந்து சேர்ந்த பின்பே, புரட்சிக்காரரர்கள் தீவிரமாகச் சதித் திட்டங்களை உருவாக்குவதில் ஈடுபட்டார்கள்.

பாரிஸ்டர் படிப்புக்காக லண்டனுக்கு வ.வே.சு.ஐயர் சென்றிருந்தார். ஆனால் அப்போது அங்கே அவருக்கு விநாயக் தாமோதர ஸாவர்க்காரது நட்புக் கிடைத்தது. உடனே அவர் தமது எண்ணத்தைக் கைவிட்டுவிட்டார். ஸாவர்க்கர் நிறுவிய அபிநவ பாரத மண்டலக் கிளைக் கழகத்தில் சேர்ந்தார். இந்தியா மாளிகை என்ற கட்டிடத்திலேதான் வீர ஸாவர்க்கரும், அவருடைய வலது கரமாகப் பணியாற்றிய வ.வே.சு.ஐயரும் தேச விடுதலைப் பற்றிய தங்கள் விவாதங்களைத் திறம்பட நடத்தி வந்தார்கள். லண்டனில் ஸாவர்க்கரைக் கைது செய்து இந்தியாவுக்கு அதிகாரிகள் கொண்டு வந்தவுடனே, பிரிட்டனை விட்டு ஐயர் வெளியேறிப் புதுவைக்கு வந்து சேர்ந்தார்.

1911-இல் பாரதத்தின் நிலைமை மிகவும் பயங்கரமாக இருந்தது. அதை ஓர் எரிமலைக்கு ஒப்பிடலாம். சுதந்திரம்

எங்களது பிறப்புரிமை என்று வீர முழக்கம் செய்த லோக மான்ய திலகரை மாண்டலேயில் அடைத்து அதிகாரிகள் மிகவும் துன்புறுத்தி வந்தார்கள். வேறு சில அருந் தலைவர்களும் பல கடுஞ் சிறைகளில் சொல்லொணாத சித்திரவதைக்கு ஆளாகி வந்தார்கள். லாகூரிலும் கல்கத்தாவிலும் ஆங்கில ஏகாதிபத்தியத்தைப் பகிரங்கமாக எதிர்த்துக் குழப்பங்களைப் புரட்சி வீரர் செய்து வந்தார்கள்.

இந்தச் சமயத்தில் எரிகிற தீயில் எண்ணெய் வார்ப்பது போல் பாரதத்தின் சக்கரவர்த்தியாகத் தம்மை முடிசூட்டிக் கொள்ளும் பொருட்டு ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் 1911-ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு விஜயம் செய்யப் போவதாகப் பிரகடனம் செய்தார். மன்னரின் விஜயத்தைப் பற்றிக் கேள்விப் பட்டதும், தமிழகத்துப் புரட்சி வீரர் கிளர்ச்சியுற்றார்கள் ; ஏகாதிபத்தியத்தின் மீது தமது பழியைத் தீர்த்துக் கொள்ள அதுவே தக்க தருணம் என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

திருநெல்வேலி ஜில்லாக் கலெக்டரான ஆஷ் 1911-ஜூன் 17-ஆம் தேதி மணியாச்சிச் சந்திப்பில் ஒரு ரெயில் பெட்டியில் ஏறிக் கொள்ள வந்தார் ; வெள்ளையர் பாணியில் உடை உடுத்தியிருந்த இந்திய இளைஞர் ஒருவர் அந்தச் சமயத்தில் ஆஷுக்கு எதிரே வந்து நின்று கொண்டு தமது கைத் துப்பாக்கியால் மூன்று முறை அவரைக் குறி வைத்துச் சுட்டார். குறி தவறாமல் ரவை பாய்ந்ததால், ஆஷ் துரை உடனே பிணமாகத் தரையில் சாய்ந்துவிட்டார். அவரைச் சுட்டு வீழ்த்திய அந்த வாலிபர் பிறகு அங்கே ஒரு கணமும் தாமதிக்கவில்லை; பிரயாணிகள் தங்கும் அறைக்கு விரைவாய்ச் சென்றார்; தம்மைத் தாமே சுட்டுத் தற்கொலை செய்து கொண்டுவிட்டார்.

கலெக்டர் ஆஷைச் சுட்டுக் கொன்ற அந்த இளைஞர் யார் என்று பின்னால் தெரிய வந்தது. திருவாங்கூர் ஸம்ஸ்தானக்

காட்டு இலாகாவில் குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்த ஒருவர் அவர் ; வாஞ்சி ஐயர் என்பது அவரது பெயர். மரித்த பின் அவருடைய உடைகளைப் பரிசோதனை செய்த போது, சுத்தமான தமிழில் அழகாக எழுதியிருந்த ஒரு கடிதத்தைப் போலீஸார் கண்டெடுத்தார்கள். அதில் இப்படி எழுதியிருந்தது.

ஆங்கிலேயரை விரட்டிவிட்டுச் சுய்ராஜ்யம் ஸ்தாபிக்க வேண்டுமென்று ஒவ்வோர் இந்தியனும் தீவிரமாக முயற்சி செய்கிறான் ; எம்மதமும் சம்மதமே என்ற உன்னதக் குறிக்கோளோடு ராமர், கிருஷ்ணர், சத்ரபதி சிவாஜி, குரு கோவிந்த சிங் ஆகிய மஹான்கள் இந்தப் புண்ணிய பூமியில் ஆட்சி செலுத்தியிருக்கிறார்கள். ஆனால் ஆங்கிலேயர்களோ ஐந்தாம் ஜார்ஜை-கேவலம் ஒரு மிலேச்சனை - இந்தப் புனித பார நாட்டின் அரியணையில் ஏற்றிச் சக்கரவர்த்தியாக முடிசூட்ட ஆயத்தம் செய்கிறார்கள்.

தமிழகத்தைச் சேர்ந்த சுமார் மூவாயிரம் இளைஞர்கள் ஒரு தீர்மானம் செய்தார்களாம் ; இந்திய மண்ணை ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் மிதித்தவுடனேயே அவரைக் கொன்றுவிடுவதென்று பிரதிக்ஞை செய்து கொண்டார்களாம். இந்தப் பிரதிக்ஞைக்குப் பிள்ளையார் சுழியாகவே - இந்தப் பிரதிக்ஞை செவ்வனே நிறைவேற ஊக்கமும் உரமும் மக்களிடையே உண்டாவதற்காகவே - கலெக்டர் ஆஷை அந்த இளைஞர்களுள் ஒருவரான வாஞ்சி சுட்டுக் கொன்றாராம்.

வாஞ்சியின் சடலத்தைப் போலீஸார் சோதனை போட்ட போது, சில பொருள்கள் கிடைத்தன. பாரிஸில் காமா அம்மையார் பதிப்பித்து வெளியிட்டு வந்த வந்தேமாதரம் என்ற பத்திரிகையிலிருந்து வெட்டி எடுத்த ஒரு பகுதியும் அவற்றுள் இருந்தது. காமா அம்மையார் வரைந்த ஒரு கட்டுரையே அது. அந்தக் கட்டுரையின் சில வரிகள் இவை ;

பொதுக் கூட்டத்திலோ, பங்களாவிலோ, புகைவண்டி நிலையத்திலோ, மாதா கோவிலிலோ, கண்காட்சிச் சாலையிலோ வேறெந்த இடத்திலோ எங்கேயானாலும் சரி, வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் சற்றும் தயங்காமல் - பின்வாங்காமல் - வெள்ளையனைக் கொன்றுவிட்டுத் தான் மறு வேலை பார்க்க வேண்டும். அதிலும் அரசாங்க ஆபீஸர்கள், தனி நபர்கள் என்ற பாகுபாடே பார்க்கக் கூடாது. வெள்ளையனா? சரி. உயிரை நமனுலகுக்கு அனுப்பி வைத்துவிடு. ஏதும் யோசியாதே, சற்றும் தயங்காதே. வணக்கத்துக்குரிய நாநா ஸாஹேப் இந்த வேதத்தை நன்கு உணர்ந்திருந்தார். இன்று நம் வங்க ஸகோதரர்களும் அதைப் புரிந்து கொண்டு விட்டார்கள். பாரத மக்கள் அனைவருமே இதை விரைவில் உணர்வார்களாக. அவர்களது முயற்சி வாழ்க. கரம் நீள்க.

அமைதிக்கும் சாந்தத்துக்கும் புகழ் பெற்ற தமிழகத்திலேயே நிகழ்ந்த கலெக்டர் ஆஷ் கொலையைக் கண்டு, ஆங்கில அரசாங்கம் அந்த நாட்களில் மிகவும் குழம்பியிருந்ததாம்.

இந்தப் படுகொலையின் காரணத்தைக் கண்டு பிடித்து இதில் சம்பந்தப்பட்டவர்களையெல்லாம் நசுக்கிவிட ஏ.எம்.ஜி.தாம்போ என்ற ஐ.ஸி.எஸ்.-காரரை ஸ்பெஷல் ஆபீஸராக நியமித்தார்கள். கண்ணியமான பல நண்பர்களின் இல்லங்களையும் கூடச் சோதனை போட்டார்கள். பல நிரபராதிகளைச் சந்தேகத்தின் பேரில் கைது செய்தார்கள். ஐயத்துக்கு இடமானவர்களையும் சாட்சிகளையும் மனிதப் பண்புக்கு ஒவ்வாத வகைகளின் மூலம் போலீசார் துன்புறுத்தினார்கள்.

ஆனால் ஐயரின் செய்கைக்குரிய காரணத்தைச் சற்றும் அச்சமின்றிப் பகிரங்கமாகவே புரட்சிக்காரர்கள் தெரிவித்தார்கள். தமது வந்தேமாதரம் ஜூலை இதழில் காமா

அம்மையார் இப்படி எழுதினார் : லண்டன் மாநகரின் தெருக்களில் எங்கள் அருமை ஹிந்துஸ்தானத்தின் துர்ப்பாக்கிய மக்களுள் சில அடிமைகள், மாக்களைப் போல் இங்கிலாந்து மன்னனுக்குத் தண்டனிட்டு ஸர்க்கஸ் கோமாளிகளாய் ஆங்கில ரஸிகர்களின் கேலிக்கு இடமாகி மானத்தை விலைக்கு விற்றுத் தாழ்மை அடைந்து வரும்போது, அதே தங்கள் அருமை நாட்டிலே வீரமும் தீரமும் கொண்ட இரண்டு இளஞ்சிங்கங்கள் திருநெல்வேலிப் பட்டணத்திலும் மைமன்ஸிங் நகரிலும் தாங்கள் புரிந்த பராக்கிரமச் செயலால், பாரதம் அயர்ந்திருக்கவில்லை ; விழித்துக் கொண்டுதான் இருக்கிறது என்ற மாபெரும் உண்மையை உலகுக்கு உணர்த்திவிட்டார்கள்.

கலெக்டர் ஆஷின் கொலை நடந்த இரண்டே நாட்களுக்குப் பின் ஜூன் 19-ம் தேதி மைமன்ஸிங் நகரில் இன்ஸ்பெக்டர் ராஜ்குமார் ராய் என்பவரை இன்னொரு புரட்சி வீரர் சுட்டுவிட்டார்.

காமா அம்மையாரின் கட்டுரையைப் படித்த பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஓர் ஊகம் பிறந்தது. இந்த கொலைகளுக்கெல்லாம் காரணம் புதுவையில் பதுங்கியிருந்த புரட்சிக்காரர்களே என்ற முடிவுக்கு அது வந்தது. ஆஷ் கொலையைப் பற்றித் தம்மையும் கேட்டு அதிகாரிகள் துன்புறுத்தியதாக ஸாவர்க்கர் கூறினார்.

முடிவாகப் பதின்மூன்று நபர்களைக் கைது செய்தார்கள். அவர்களின் விபரம் :

1. தஞ்சாவூர் நீலகண்ட பிரம்மசாரி; 2. அதயநல்லூர் சங்கர கிருஷ்ண ஐயர்; 3. தென்காசிச் சிதம்பரம் பிள்ளை ; 4. தூத்துக்குடிச் சுப்பையா பிள்ளை; 5. செங்கோட்டை ஜகந்நாத ஐயங்கார்; 6. செங்கோட்டை ஹரிஹர ஐயர்; 7. புனலூர் ராமசாமிப் பிள்ளை; 8. செங்கோட்டை மஹாதேவ ஐயர்; 9. செங்கோட்டை எஸ்.அருணாசலம் பிள்ளை; 10. செங்கோட்டை

அழகப்ப பிள்ளை; 11. எட்டயபுரம் வந்தேமாதரம் சுப்பிரமணியம்; 12. செங்கோட்டை பிச்சுமணி ஐயர்; 13. அதே ஊரைச் சேர்ந்த இன்னொருவர். ஆஷ் கொலைக்கு உடந்தையாயிருந்ததாகவும் வேறு பல ராஜத்துவேஷச் செயல்கள் புரிந்ததாகவும் இவர்கள் மீது குற்றம் சாட்டி வழக்கிட்டார்கள்.

இவர்களை விசாரணை செய்யப் பிரதம நீதிபதி, நீதிபதி ஸி.சங்கரன் நாயர், நீதிபதி அயிலிங், இந்த மூவரையும் கொண்ட ஸ்பெஷல் ட்ரிப்யூனல் என்ற விசேஷ நீதிக்குழு ஒன்றைச் சென்னை சர்க்கார் நியமித்தது. இந்த நீதிக்குழுவுக்கு உதவி செய்ய ஜூரர் குழாம் எதையும் நியமிக்கவில்லை.

இந்த வழக்கில் பிராஸிக்யூஷன் தரப்பார் சொன்னார்கள்: வ.வே.சு.ஐயரின் தலைமையில் புதுவையிலேயே இந்தச் சதித் திட்டங்கள் தயாராகியிருக்கின்றன. கலெக்டர் ஆஷின் கொலைக்குக் காரணம் புரட்சிக்காரர்களின் புதுவைத் தலைமை விடுதியே. கப்பலோட்டிய தமிழர் என்று புகழ் பெற்ற சிதம்பரம் பிள்ளையின் போதனையினாலேயே நீலகண்ட பிரம்மசாரியும் சங்கர கிருஷ்ண ஐயரும் புரட்சிக்காரர் ஆகிச் சதித் திட்டங்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். இருவரும் 1910-ஆம் ஆண்டில் சென்னை மாகாணம் முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். அந்நியன் ஆளுவதை எதிர்த்து அராஜகச் செயல்களில் ஈடுபட வேண்டும் என்று சொல்லித் துணிச்சலுள்ள பல இளைஞர்களைத் திரட்டினார்கள். இந்த இளைஞர்கள் பரங்கிகளைப் பாரதத்தை விட்டு விரட்டுவோம் ; பாரத நாட்டுக்குச் சுயராஜ்யம் பெறுவோம் என்று தங்கள் உதிரத்தில் தோய்த்த போர்க் கருவிகளின் மீது பிரதிக்ஞை செய்தார்கள்.

1910-ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் சங்கர கிருஷ்ண ஐயர் தம் மைத்துனரான வாஞ்சி ஐயரை நீலகண்ட பிரம்மசாரிக்கு அறிமுகம் செய்து வைத்தார். திருவாங்கூர் ஸமஸ்தானத்தில் காட்டு இலாகாவில் ஒரு குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்தவர்

வாஞ்சி என்ற இளைஞர். சுவாமி விவேகானந்தரின் எழுத்து வன்மையில் இவர் தமது உள்ளத்தைப் பறி கொடுத்தார். பிரம்மசாரியின் நட்பு வேறு சேர்ந்து கொண்டுவிடவே, வாஞ்சி ஒரு புரட்சிக்காரராக மாறிவிட்டார்.

1910-ஆம் ஆண்டு முடிவில் புதுவைக்கு வ.வே.சு.ஐயர் வந்து சேர்ந்தார் ; முதல் வேலையாக இளம் புரட்சி வீரர்களுக்கு ரிவால்வர் பயிற்சி அளிக்கத் தொடங்கினார். லோகமான்ய திலகரின் பக்தர் ஐயர். ஆகவே அந்நியரின் ஆட்சியை வீழ்த்திப் பாரத நாட்டில் சுதந்தரக் கொடியை நிலை நாட்ட உறுதி பூண்டார். அதில் எந்தச் சித்திரவதைக்கும் தயாராகி அஞ்சா நெஞ்சத்துடன் பலாத்காரத்தை மேற்கொள்ள வேண்டும் என்று தம் சீடர்களுக்குப் போதித்தார்.

1911 ஜனவரி 9-ஆம் தேதி வாஞ்சி மூன்று மாத ராஜ எடுத்துக் கொண்டு புதுவைக்கு வந்து சேர்ந்தார். அப்போது சங்கர கிருஷ்ண ஐயர், அவரை வ.வே.சு.ஐயருக்கும் அவருடைய நண்பர்களுக்கும் அறிமுகப்படுத்தி வைத்தார். வ.வெ.சு.ஐயரின் கட்டளைப்படி வாஞ்சிக்கு ரிவால்வர் பயிற்சி அளித்தார்கள்.

பிராஸிக்யூஷன் தரப்பில் சாட்சி கூறிய ஒரு நபர் தம்மிடம் வாஞ்சி ஒரு முறை, வெள்ளையரின் ஆட்சி நமது பாரதத்தைச் சீரழித்து வருகிறது. இது இனியும் நீடிக்குமானால், பாரதம் அமிழ்ந்தே போய்விடும். ஆகவே, இந்த ஏகாதிபத்தியத்துக்குக் கூடிய சீக்கிரம் முற்றுப்புள்ளி வைக்க வேண்டியது அவசியம். இங்கே உள்ள வெள்ளையர் அனைவரையும் தீர்த்துக் கட்டுவதுதான் அதற்கு வழி என்று புதுவையில் கூறியதாகத் தெரிவித்தார். தம்மிடம் வாஞ்சி மற்றொரு முறை, 1908-ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் கிளர்ந்த பயங்கரக் குழப்பங்களுக்கும் கலவரங்களுக்கும் காரண பூதமான கல்நெஞ்சம் படைத்த கலெக்டர் ஆஷை முதலிலே நமனுலகுக்கு அனுப்ப வேண்டும். இந்தக் காரியத்துக்குத்

தேவையான ஆயுதம் தக்க சமயத்தில் புதுவையிலிருந்து கிடைக்க வாய்ப்பு இருக்கிறது என்று கூறியதாகவும் நீதிமன்றத்தில் இந்த நபர் கூறினார்.

இந்த வழக்கிலே நீதிமன்றத்தில் சாட்சியமாய் ஆஜர் செய்த பொருள்கள் பல. பரங்கி ஒழிப்பு அச்சகம் (Feringhee Destroyer press) வெளியிட்டிருந்த இரண்டு சிறு புத்தகப் பிரதிகள் அவற்றுள் இடம் பெற்றிருந்தன. குற்றம் சாட்டப் பெற்ற நபர்களில் சிலருடைய இடங்களிலும் இந்தப் புத்தக பிரதிகள் கிடைத்தனவாம். இவற்றில் முதல் புத்தகமான ஆரியனுக்கு உபதேச மொழிகள் (A word of advice to Aryans) என்பதில் இருந்த சில வரிகள் இவை :

புண்ணிய பூமியாகிய நம் பாரத நாட்டில் பாதகங்கள் பல புரிந்து வரும் படுபாவிப் பரங்கியரை விரட்டிப் பாரத நாட்டுக்குச் சுயராஜ்யத்தை வாங்கித் தந்தே தீருவேன் என்று, ஆரியனே, சர்வ வல்லமையுள்ள ஆண்டவனின் சந்நிதியில் அவனது திருவுருவின் முன்னே ஆணையிட்டுக் கொள்வாயாக. புனித பாரத பூமியில் பரங்கியரின் கொடும் ஆட்சி இருக்கும் வரையில் நான் உயிருடன் வாழ்வதில் பயன் ஏதும் இல்லை மானம் இல்லாமல் வாழும் என் வாழ்வு வீணே என்று கருதுவேன் என்று, ஆரியனே, ஆண்டவனின் சந்நிதியில் சூளுரைப்பாயாக. பரங்கியரில் எவன் உன் திருக்கரத்தில் சிக்க நேர்ந்தாலும் தயை தாட்சிண்ணியமில்லாமல், தயக்கம் கொள்ளாமல், ஒரு நாயை அடிப்பது போல அடித்துவிடு. ஏன் வாய்ப்பு சாதகமாக அமைந்தால், கத்தியாலோ, தடியாலோ, கல்லாலோ, சர்வேசுவரன் உனக்கு மனமுவந்து அளித்திருக்கும் திருக்கரத்தாலேயோ அவனைக் கொன்றே விடு. தப்ப விட்டுவிடாதே.

இரண்டாவது புத்தகமான அபிநவ பாரத மண்டலத்தில் சேர்வதற்கான பிரதிக்ஞைகள் என்பதில் கண்ட

விவரங்களிலிருந்து, இந்த இரு புத்தகங்களும் புதுவையிலிருந்தே விநியோகமாயின என்பதும், வீர ஸாவர்க்கருக்கும் இந்த விஷயத்தில் சம்பந்தமிருக்கிற தென்றும் தெரிய வந்தன.

இந்தச் சதிகளின் விளைவாகத்தான் மணியாச்சிச் சந்திப்பில் கலெக்டர் ஆஷை வாஞ்சி சுட்டு வீழ்த்தினார் என்று கூறிப் பிராஸிக்யூஷன் தரப்பில் வழக்காடிய பிரபல வழக்கறிஞர் குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

எதிரிகள் அத்தனை பேரும் தாங்கள் நிரபராதிகள் என்று வாதித்தார்கள். கலெக்டர் ஆஷின் கொலையை இவர்களுடன் சம்பந்தப்படுத்த நேரடியான சாட்சியம் ஏதும் இல்லையாதலால், வெறும் அநுமான சாட்சியத்தைக் கொண்டு இவர்களைக் கொலைக்கு உடந்தையானவர்க ளென்று தீர்மானிப்பது நேர்மையற்ற செய்கை என்று எதிரிகளின் வக்கீல் தமது வாதத்தில் குறிப்பிட்டார்.

இறுதியாக விசேஷ நீதிக்குழு (Special Tribunal) தன் தீர்ப்பை வழங்கியது. கலெக்டர் ஆஷ் கொலை சம்பந்தப் பட்ட வரையில் எதிரிகள் நிரபராதிகள் என்றும் ஆஷின் கொலைக்கு இவர்கள் உடந்தையானவர் அல்ல என்றும் அது கூறிவிட்டது. ஆகவே, அழகப்ப பிள்ளை, பிச்சுமணி ஐயர், மற்றும் மூவர் ஆக ஐந்து பேர் விடுதலை பெற்றார்கள்.

ஆனால், நீலகண்ட பிரம்மசாரி, சங்கர கிருஷ்ண ஐயர், இன்னும் ஆறு நபர்கள் ஆகிய மீதி எதிரிகளெல்லாம் அரசாங்கத்துக்கு எதிராகச் சதிச் செயலில் ஈடுபட்ட குற்றவாளிகளே என்று ஐயத்துக்கு இடமில்லாமல் ருசுவாகிவிட்டதாகக் கூறி, அவர்களுக்கு அந்த நீதிக் குழு இரண்டு முதல் ஏழு ஆண்டு வரையில் வெவ்வேறு கால அளவுக்குக் கடுங்காவல் தண்டனை விதித்துவிட்டது.

விசேஷ நீதிக் குழுவின் தீர்ப்பை எதிர்த்துப் பிரதிவாதிகள் அப்பீல் செய்து கொண்டார்கள். ஆனால் அந்த அப்பீல் தள்ளுபடியாகிவிட்டது. ஆகவே, அவர்கள் தங்கள் தண்டனைக் காலத்தைப் பாரதத்தின் பல ஊர்களில் கடுஞ் சிறையில் கழித்தார்கள்.

இந்தப் புரட்சி வழக்கில் மிகவும் வியக்கத் தகுந்த அம்சம் என்னவென்றால், வெள்ளையனை விரட்ட வேண்டும், என்ற ஒரு குறிக்கோளோடு சதிச் செயலில் ஈடுபட்ட வீரர்கள் அனைவரும், தென்னிந்தியாவில் தொன்றுதொட்டு இருந்து வரும் சாதி சமய வேற்றுமைகளை மறந்துவிட்டுப் பணியாற்றியதுதான்.



# 2. ஆலிபுர்ச் சதி

ஆலிபுர்ச் சதி வழக்கில் பாபு அரவிந்த கோஷ் முக்கிய எதிரி. நீதிபதியாகப் பணியாற்றியவர் கேம்பிரிட்ஜ் கலாசாலையில் அரவிந்த கோஷுடன் சக மாணவராக இருந்தவர். இருவரும் ஒரே ஆண்டில் ஐ.ஸி.எஸ். பரீட்சைக்கு அமர்ந்தவர்கள். அரவிந்த கோஷின் சார்பில் ஆஜரான இளம் வழக்கறிஞர் பின்னாளில் தேசபந்து என்று புகழ் பெற்ற சித்தரஞ்சன்தாஸ்.

இந்த வழக்கில் அப்ரூவராக மாறிய ஒரு நபரைப் பலத்த காவலுக்கிடையில் கள்ளக் கடத்தல் துப்பாக்கியால் பலருக்கு முன்னே சிறைச்சாலையிலே வேறு இரண்டு புரட்சிக்காரர்கள் சுட்டுக் கொன்றுவிட்டார்கள். முஸாபர்புரில் குண்டு வீசிய இரண்டு இளைஞர்களில் ஒருவனைக் கைது செய்த போலீஸ் இன்ஸ்பெக்டரையும் இதேபோல் புரட்சிக்காரர்கள் சுட்டுக் கொன்றார்கள். சர்க்கார் தரப்பில் ஆஜரான ஒரு வழக்கறிஞரையும் போலீஸ் டெபுடி சூபரிண்டெண்டையும் இப்படியே புரட்சிக் காரர்கள் சுட்டு மாய்த்தார்கள்.

ஆலிபுர்ச் சதிக்குக் கர்ஸான் பிரபுவின் வங்கப் பிரிவினையே மூலம் என்று கூறலாம். மதவெறியைக் கிளப்பிவிடக் கூடிய வகையில் வங்க மாகாணத்தை

1905-இல் கர்ஸான் பிரபு இரண்டு பகுதிகளாகப் பிரித்ததை எதிர்த்து அங்கங்கே பல கிளர்ச்சிகள் உண்டாயின. சரணம் அடையாதவர் (Surrender-not) என்ற அடைமொழிக்கு உரியவரான தேசபக்தர் சுரேந்திரநாத் பானர்ஜியின் தலைமையில் ஒரு தீவிர இயக்கம் இதே சமயம் நிகழ்ந்தது. சுதந்திரம் எனது பிறப்புரிமை என்று கோஷம் இட்டு ஏகாதிபத்தியத்தை ஒரு கலக்குக் கலக்கிய லோகமான்ய திலகரும், ஆங்கிலப் பொருள்களைப் பகிஷ்கரித்து ஓர் இயக்கத்தை இதே சமயம் தொடங்கினார் ; அவருடன் ஸர் ஃபிரோஸ் ஷா மேத்தா என்ற காங்கிரஸ் தலைவரும் சேர்ந்து கொண்டார்.

ஏகாதிபத்தியத்தின் கெடுபிடியைப் பகிரங்கமாக எதிர்த்து மக்கள் அப்போதப்போது செய்து வந்த கிளர்ச்சிகளை விசாரித்து அரசாங்கத்துக்கு அறிவிக்கும்படி ஆங்கில அரசாங்கம் ஜஸ்டிஸ் எஸ்.ஏ. டி.ரௌலட் என்ற ஆங்கிலேயரின் தலைமையில் ஒரு கமிட்டியை நிறுவியது. இந்த ரௌலட்டுக்கு இந்தியர்கள், சுதேசிகள், என்றாலே ஓர் ஏளனம். இந்தியாவுக்குச் சுதந்தரமே ஒருநாளும் வழங்கக் கூடாது என்று ஒற்றைக் காலில் நின்ற மாஜி பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் துரையின் நெருங்கிய தோழர் இவர். ரௌலட் கமிட்டி சமர்ப்பித்த அபத்தமான ரிப்போர்ட்டை மகாத்மா காந்தி, லோகமான்ய திலகர் உள்படச் சகல தலைவர்களும் கண்டித்தார்கள் ; இந்தக் கண்டனத்தின் மூலமே பாரத அரசியலில் மகாத்மா முக்கியத்துவம் பெற்றார். இதற்கெல்லாம் மூல காரணம் சில ஆண்டுகளுக்கு முந்திய ஆலிபுர்ச் சதி போன்ற நிகழ்ச்சிகளே.

ஆங்கில அரசாங்க இலாகாவில் வைத்திய அதிகாரியாகப் பதவி வகித்து வந்த கே.டி.கோஷ் என்ற பிரபல வங்காளி டாக்டரின் புதல்வர்களுள் அரவிந்த

கோஷ், பாரீந்திரகுமார் கோஷ் ஆகிய இருவரும் அரசாங்கத்துக்கு எதிராக அந்த நாட்களில் அரசியலில் ஈடுபட்டிருந்தார்கள்.

பிள்ளைப் பிராயத்திலே இங்கிலாந்தில் கல்வி கற்பதற்காக அரவிந்தர் சென்றிருந்தார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றார். பிறகு ஐ.ஸி.எஸ். பரீட்சை எழுதி அதிலும் தேர்ச்சி அடைந்தார். ஆனால் அந்த காலத்தில் ஐ.ஸி.எஸ். பதவிக்கு இன்றியமையாத அம்சமாக இருந்த குதிரைச் சவாரியில் தவறிவிட்டார். எனவே, அவருக்கு ஐ.ஸி.எஸ். பட்டம் கிடைக்கவில்லை. பின்பு பாரதத்துக்கு அரவிந்தர் திரும்பினார். பரோடாவுக்குச் சென்று பிரபல பரோடா கல்லூரியின் முதல்வராகப் பதவி ஏற்றார்.

அரவிந்தரின் தம்பியான பாரீந்திரர் இங்கிலாந்திலே பிறந்தவர். ஆயினும், குழந்தைப் பருவத்திலேயே பாரத நாட்டுக்கு அவரை எடுத்து வந்து இங்கேதான் வளர்த்தார்கள். பாரீந்திரரும் தம் தமையனாரான அரவிந்தருடன் பரோடாவிலேயே முதலில் வசித்து வந்தார். வங்கப் பிரிவினைக்குப் பிறகு கல்கத்தாவுக்குச் சென்று யுகாந்தர் என்ற பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார்.

இதன்பின் அரவிந்தரும் தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டுப் பரோடாவிலிருந்து வெளியேறிக் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். அவரும் தம்பியைப் போலவே வந்தேமாதரம் என்ற இன்னொரு புரட்சிப் பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார். இந்த இருவருடைய பத்திரிகைகளுள் ஒவ்வொன்றிலும் ஏறக்குறையப் பத்தாயிரம் பிரதிகள் வரைக்கும் விற்பனை ஆயின. அந்த நாளில் இது மகத்தான வெற்றி. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கெடுபிடிகளைப் பற்றி அச்சம்

இல்லாமல் இரு பத்திரிகைகளும் கட்டுரைகள் வெளியிட்டு மக்களைத் தட்டியெழுப்பின. இதைக் கண்டு அரண்ட அரசாங்கம் தீவிரமாக அடக்கு முறையைக் கையாண்டது. வங்காளிகளுக்கு மிகவும் முக்கியமான துர்க்கை பூஜை பிரசங்கங்கள் உள்படச் சகலவிதமான பொதுக் கூட்டங்களுக்கும் துப்பாக்கி முனையில் பலத்த தடை விதித்தது.

1908-ஆம் ஆண்டு நெருங்கும் போது பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஒரே நடுக்கந்தான். 1857-ஆம் ஆண்டுச் சிப்பாய்க் கலகம் என்ற முதல் சுதந்தர முழக்கத்தின் ஐம்பதாவது ஆண்டு விழாவை விமரிசையாகக் கொண்டாடுவது என்று புரட்சிக்காரர் திட்டம் இட்டிருந்ததை எப்படியோ அரசாங்கம் அறிந்தது. இந்த விழாவின் போது என்ன என்ன கலவரங்கள் நிகழுமோ என்று அஞ்சியது. எனவே, விழாவுக்கு முன்பே தீவிர நடவடிக்கைகள் எடுத்துப் புரட்சிக்காரர்களைத் தீர்த்துக் கட்டிவிட வேண்டும் என்று அது தீர்மானித்தது.

அரசாங்கத்தின் ஊகம் தவறில்லை என்பது போல், 1908-ஆம் ஆண்டிலே சில பயங்கரக் கலவரங்கள் விளைந்துவிட்டன. 1907 நவம்பரில் வங்காளத்தின் லெஃப்டினெண்ட் கவர்னரான ஃபிரேஸர் என்பவரைக் கொலை செய்ய இரண்டு முயற்சிகள் நடந்தன. மேதினீபுர் ஜில்லாவிலுள்ள நாராயண்கஞ்ஜ் என்ற ஊருக்கு இந்த ஆங்கிலேயர் டிசம்பர் 6-ஆம் தேதி ரெயிலில் பிரயாணம் செய்தார். அப்போது நாசவேலை மூலம் இவரது ரெயில் வண்டியையே புரட்சிக்காரர்கள் கவிழ்த்தார்கள். ஆயினும், ஃப்ரேஸர் உயிர் தப்பிவிட்டார்.

இந்த நாராயண்கஞ்ஜ் ரெயில் பாதையில் நடந்த நாச வேலை பற்றிப் புலன் விசாரணை நடத்திய போலீஸ்

அதிகாரிகளுக்கு ரகசியமான சில தகவல்கள் கிடைத்தன. நாட்டில் அப்போதப்போது தலைகாட்டிய புரட்சிச் செயல்களில் கோஷ் சகோதரர்களுக்கு முக்கியமான பங்கு உண்டு என்பதை அவை காட்டின.

ஏப்ரல் 30-ஆம் தேதி முஸாஃபர்புரில் மிஸஸ் கென்னடி, மிஸ் கென்னடி என்ற இரண்டு ஆங்கிலப் பெண்கள் பிரயாணம் செய்த ஒரு வண்டி மீது இரண்டு வெடிகுண்டுகளை சில புரட்சிக்காரர்கள் வீசிவிட்டார்கள். அந்தப் பெண்கள் இதனால் இறந்து போனார்கள். கிங்ஸ்ஃபோர்டு என்ற ஐ.ஸி.எஸ். அதிகாரியின் வீட்டுக்கு எதிரே இந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

கிங்ஸ்ஃபோர்டு முதலில் கல்கத்தாவில் பிரதம மாஜிஸ்டிரேட்டாகப் பணியாற்றி வந்த போது, ஸந்த்யா, நவசக்தி, யுகாந்தர், வந்தேமாதரம் ஆகிய நான்கு பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கும் கடுமையான தண்டனை விதித்தார். பதினைந்தே பிராயமாகியிருந்த சுசீல்குமார் ஸேன் என்ற சிறுவனுக்கு, வயதுக்கு ஒன்று என்று கணக்கிட்டு வெற்று உடலில் பதினைந்து சவுக்கடியும் ஒருமுறை கொடுக்கச் செய்தார். நெஞ்சில் ஈரமில்லாத இந்த ஆங்கிலப் பிசாசை நமனுலகுக்கு அனுப்பியே தீர்வது என்று கங்கணங் கட்டிக் கொண்டு முஸாஃபர்புருக்குப் புரட்சிக்காரர்கள் சென்றிருந்தார்கள். இவரைக் கொல்லச் செய்த முயற்சிதான் தவறி, அந்த இரண்டு பெண்களின் மரணத்தில் முடிந்தது.

இந்த முஸாஃபர்புர்க் கொலை நிகழ்ந்த மறுநாளே குதிராம் போஸ் என்ற கல்லூரி மாணவனை அதிகாரிகள் கைது செய்தார்கள். சட்டென்று ஒருவிதமாய் விசாரணை நடத்தி விரைவிலே அவனைத் தூக்கிலும் ஏற்றிவிட்டார்கள்.

அவனுடைய சகாவான சக்தி என்ற ப்ரஃபுல்ல சக்கரவர்த்தி மட்டும் போலீஸாரின் கைகளில் சிக்காமல் தன்னைத் தானே துப்பாக்கியால் சுட்டுக் கொண்டு மாண்டுவிட்டான்.

ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறைக்கு ஒரு சவால் போல் முஸாஃப்பர்புர்க் குண்டு வீச்சு அமைந்தது. இந்த நிகழ்ச்சிக்கு இரண்டே மாதங்கள் இருக்கும் போதுதான் தூத்துக்குடியிலும் திருநெல்வேலியிலும் கிளர்ச்சிகள், நடந்து, சர்க்கார்க் கட்டிடங்களில் பல நாசமாயின. அரசாங்கமும் கடுமையான நடவடிக்கைகளைக் கையாண்டு அந்தக் கிளர்ச்சிகளை ஒடுக்கி, வெற்றிப் பெருமையில் இறுமாந்திருந்தது.

முஸாஃப்பர்புர்க் குண்டு வீச்சால் மீண்டும் ஆத்திரம் கொண்ட அரசாங்கம் மேலும் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டது ; கோஷ் சகோதரர்களின் ஜாகை உள்படப் பல பேருடைய வீடுகளைச் சந்தேகத்தின் மேல் சோதனையிட்டது. கல்கத்தாவின் முராரிபுகுர் ரஸ்தா 32-ஆம் நம்பர் வீட்டில் அந்தச் சமயம் கோஷ் சகோதரர்கள் இருந்தார்கள். அந்த வீட்டிலிருந்து துப்பாக்கிகள், ரிவால்வர்கள், வெடிகுண்டுகள், உடலில் பட்டால் குரூபியாக்கும் அமிலங்கள் இவைகளையும், புரட்சிகரமான சில இலக்கியங்களையும் போலீசார் கைப்பற்றினார்கள். பாரீந்திரகுமார் உள்படப் பதின்மூன்று இளைஞர்களை உடனே ஸ்தலத்திலேயே போலீசார் கைது செய்தார்கள்.

அந்தச் சமயம் கிரே தெருவில் 48-ஆம் நம்பர் வீட்டில் இருந்த அரவிந்த கோஷையும் கைது செய்தார்கள். ஆகக் கூடி மொத்தம் 34 பேரைக் கைது செய்து எல், பிர்லே என்ற பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்டின் முன்பு ஆஜர் செய்தார்கள். வெடிகுண்டுகள் செய்யும் ஹேமசந்திரதாஸ்,

சுயமாகவே அந்த வித்தையைக் கற்றுத் தேர்ச்சியடைந்த உல்லாஸ்கர்தத், பானர்ஜி, ஹ்ருஷீகேச் என்ற பட்டதாரி, விபூதி பூஷண் சர்க்கார் ஆகியவர்கள் அந்த 34 பேரில் அடங்கியவர்கள். கைதான அனைவருமே 16 முதல் 30 வரை வயதுள்ள இளம் பிராயத்தினர்.

கைதானவுடனேயே பாரீந்திரகுமார் தம் சகாக்களிடம், புலன் விசாரணை செய்யும் போலீஸ் அதிகாரிகள் கேட்டால், சகல விருத்தாந்தங்களையும் ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லிவிடுங்கள் என்று கூறியிருந்தார். எனவே, இன்ஸ்பெக்டர் ராமஸதய் முகர்ஜியிடம் அவர்கள் அனைவரும் வாய்மூலமும் எழுத்து மூலமும் சகல விவரங்களையும் அப்பட்டமாகத் தெரிவித்துவிட்டார்கள். பரோடாவிலிருந்து தாம் கல்கத்தாவுக்கு வந்தது முதல் நிகழ்ந்த சங்கதியையெல்லாம் பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் பிர்லேயிடம் பாரீந்திரரும் கூறிவிட்டார்.

அவர் சொன்னார் ; நான் வங்காளத்துக்கு வந்ததற்கே முக்கிய காரணம், உறங்கிக் கிடக்கும் மக்களிடம் சுதந்திரத்தின் மேன்மையைப் பிரசாரம் செய்விக்கும் லட்சியந்தான். இதற்காக நான் ஒவ்வொரு ஜில்லாவாகப் பயணம் செய்து வந்தேன். இந்த லட்சியத்துக்கு உதவக் கூடும் என்ற எண்ணத்தோடுதான் அவிநாச பட்டாசார்ஜி, பூபேந்திரநாத் தத் (ஸ்வாமி விவேகானந்தரின் சகோதரர்) இந்த இருவருடைய கூட்டுறவோடும் யுகாந்தர் என்ற புரட்சிப் பத்திரிகையைத் தொடங்கி நடத்தினேன். நாங்கள் அனைவரும் ஒரு பயங்கரப் புரட்சி செய்தே தீர்வது என்று முடிவு செய்து அதற்கான திட்டங்களை வகுப்பதிலேயே ஸதா ஸர்வ காலமும் குறியாக இருந்தோம். நாங்கள் வகுத்த திட்டத்தைச் செவ்வனே செயலாற்ற வேண்டி அதற்குரிய போர்க் கருவிகளையும் கணிசமாகச் சேகரித்து வந்தோம்.

இன்று வரையில் நான் என் பங்காக 11 ரிவால்வர்கள், 4 துப்பாக்கிகள், 1 இரட்டைக் குழல் துப்பாக்கி இவற்றைச் சேகரித்திருக்கிறேன்.

பாரீந்தர் தமது வாக்குமூலத்தை முடித்ததும், அவரைப் போலவே உபேந்திரநாத் பானர்ஜியும் ஒளிவு மறைவு இல்லாமல் தம் செய்கைகளுக்கு விளக்கம் கூறினார்.

இளைஞர்களுக்கு இன்றைய பாரதத்தின் அடிமை நிலையையும் அடிமை வாழ்வின் அவலத்தையும் உணர்த்துவதும், உறங்கிக் கிடக்கும் அவர்களுடைய சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பி வீறு கொண்டு எழச் செய்வதுமே எனது முக்கியமான பணி. ஆகவே, பாரத நாடு சுதந்தரம் பெற உள்ள ஒரே வழி பலாத்காரத்தில் ஈடுபட்டுப் புரட்சி செய்வதே என்று நான் அடிக்கடி சங்கநாதம் செய்து வந்தேன். எனது கனவு நனவாக ரகசியச் சங்கங்களே உதவும் என்று நம்பி, அத்தகைய பலவற்றை நிறுவினேன். அவற்றின் உதவியால் போர்க்கருவிகளைச் சேகரித்துக் கொண்டு வந்தேன். தருணம் பார்த்துப் பலாத்காரத்தில் இறங்கி, ஆங்கில ஆட்சியை வீழ்த்தி அதனிடத்தில் சுதந்தர தேவியை அமர்த்திவிட வேண்டும் என்பதே எங்கள் திட்டம்.

ஹ்ருஷீகேச் காஞ்சிலால் என்ற வாலிபர், நான் உத்வேகம் பெற்றுப் புரட்சிக்காரனாக மாறியதே யுகாந்தர் பத்திரிகையினால்தான். பாரதம் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுச் சுதந்தரம் அடைவதற்கான புனிதப் பணியில் நானும் என் பங்கைச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தேன். நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டு உழைத்து வரும் கழகமோ, சங்கமோ கல்கத்தாவில் எங்கேயாவது இருக்கிறதா என்று விசாரித்தறிவதற்காக யுகாந்தர் காரியாலயத்துக்குச் சென்றேன். அங்கே உபேந்திரநாத்தைச் சந்தித்து விவரம் அறிந்தேன். அதற்கடுத்த

தினமே சத்ராவுக்குச் சென்று கல்வி இலாகாவில் ஓர் ஆசிரியன் பதவி தேடினேன். கல்விப் போதனை மூலம் இளம் உள்ளங்களில் ஆங்கிலேயரிடம் வெறுப்பை உண்டாக்கி வளர்த்துச் சுதந்தரக் கனலை மூட்டிவிட வேண்டும் என்பதே இதில் என் உத்தேசம். நான் விரும்பியது போலவே பத்ரேசுவரா ஆங்கில உயர்நிலைப் பள்ளியில் ஓர் ஆசிரியனாகப் பணியாற்ற வாய்ப்பும் கிடைத்தது என்றார்.

ஆனால், அரவிந்தரோ தம் செய்கைகளுக்கு ஏதும் விளக்கம் கூறவில்லை ; தம்மீது அதிகாரிகள் சுமத்திய குற்றம் அனைத்தையும் மறுத்தார் ; தாம் நிரபராதி என்று கூறினார்.

பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் மொத்தம் 222 சாட்சிகளை விசாரித்த பின்பு ஆகஸ்ட் 19-ஆம் தேதி அத்தனை எதிரிகளையும் ஆலிபுர் ஸெஷன்ஸ் கோர்ட்டின் விசாரணைக்கு அனுப்பி வைத்தார். எதிரிகளுள் ஒருவன் நரேந்திரகோஸ்வாமி. போலீசாரின் சித்திரவதை தாளாமல் அப்ரூவராக அவன் மாறினான். அவனுடைய உடல்நிலை மோசமாயிருந்ததால், சிறை ஆஸ்பத்திரியிலேயே பலத்த பந்தோபஸ்துடன் அவனை வைத்திருந்தார்கள். அவனது வாக்குமூலத்தின் பேரில் மேலும் ஒன்பது பேரைக் கைது செய்து பிர்லேயின்மூன் விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள். அவர்களையும் முடிவில் ஸெஷன்ஸ் விசாரணைக்கு ஸெப்டெம்பர் 14-ஆம் தேதி அவர் அனுப்பினார். இந்தச் சமயந்தான் கல்கத்தா பிரஸிடென்ஸி சிறையில் பயங்கரமான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அந்தச் சிறை ஆஸ்பத்திரியின் ஒரு வார்டில் நரேந்திரன் பந்தோபஸ்தாயிருந்தான். கனையாலால், ஸத்யேந்திரநாத் போஸ் என்ற இரண்டு வாலிபர்களும் ஸெப்டெம்பர் 1-ஆம் தேதி நோயாளிகளைப் போல் பாசாங்கு செய்து எப்படியோ அதிகாரிகளை ஏமாற்றி அதே சிறை ஆஸ்பத்திரிக்குள் போய்ச்

சேர்ந்தார்கள். வார்டர்களிடம் இந்த இருவரும் எங்கள் செய்கைகளுக்காக மிகவும் வருந்துகிறோம். எங்கள் சகாவான நரேனைப் போல் நாங்களும் அப்ரூவராகி அரசாங்கத்தின் சார்பில் சாட்சி கூறத் தீர்மானித்து விட்டோம். ஆகவே, நரேனைச் சந்தித்து இது பற்றிப் பேச மிகவும் ஆவலாயிருக்கிறோம் என்று சொல்லி அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டினார்கள்.

இவர்களது பேச்சைக் கேள்விப்பட்ட நரேன்கோஸ்வாமி இதை நம்பிவிட்டான் ; இவர்களைச் சந்திக்க வந்தான். அவன் வந்ததுதான் தாமதம் ; இருவரும் தங்கள் வசம் மறைத்து வைத்திருந்த கள்ளக் கடத்தல் கைத்துப்பாக்கியால் டுமீல், டுமீல் என்று இருமுறை அவனைக் குறிபார்த்துச் சுட்டார்கள். ஓசைக் கேட்டுப் பலர் ஓடி வந்து இந்த இரு வாலிபர்களையும் பிடித்துக் கொண்டார்கள். என்றாலும், இவர்களுடைய மனோரதம் ஈடேறிவிட்டது ; நரேன் கோஸ்வாமி இதற்குள் செத்துச் சவமாய்க் கிடந்தான்.

இந்த நிகழ்ச்சி பற்றி வந்தேமாதரம் இப்படி எழுதியது :

நரேந்திரனைக் கனையா கொன்றுவிட்டான் ; எதிரி விரித்த வலையில் விழுந்து தன் உயிர்த் தோழர்களைக் காட்டிக் கொடுமக்க விழைந்த நரேனைப் போன்ற தேசத் துரோகிகளின் கதி இந்த விதந்தான் முடியும். இதில் யாருக்கும் ஐயம் வேண்டாம். கனையாவின் முதல் குண்டு நரேன் மீது பாய்ந்த உடனேயே, அந்த ஓசையின் எதிரொலியில் நாம் கேட்டது இது, உஷார். உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கும் துரோகிகளின் கதி இதுவே.

ஸ்வாதீன் பாரத் என்ற பத்திரிகை ஒரு தலையங்கமே தீட்டியிருந்தது. துடை நடுங்கியான நரேந்திரனின்

கோழைத்தனத்தைக் கண்டு பாரத வீரர்களின் நெஞ்சுரத்தை ஆங்கில ஏகாதிபத்தியம் தவறாக எடை போட்டு இறுமாந்துவிட்டது. குறுகிய மனப்பான்மை படைத்த இந்திய அரசாங்கம், விரைவிலே பாரதம் முழுவதிலும் தன் அடக்குமுறையைப் பிரயோகித்து அங்கங்கே சுதந்தரக் கிளர்ச்சிகளை அடக்கி ஒடுக்கிவிடலாமென்று மனப்பால் குடித்தது. ஆனால், அது வெறும் பகல் கனவாகவே முடிந்துவிட்டது. நம் பாரத நாட்டில் வீரத்துக்கும் பஞ்சம் வந்துவிடவில்லை என்பதைப் பகிரங்கமாக நிரூபித்துக் காட்டிவிட்டான், வீரன் கனையாலால். கற்பனையில் கூட நினைத்துப் பார்க்க முடியாத வகையில் ஆலிபுர்ச் சிறையே குலுங்கும் வண்ணம் - ஜால வித்தைக்காரன் தன் மந்திரக் கோலை ஆட்டி ரசிகர்களைப் பிரமிக்க வைப்பது போல் - துணிச்சலுடன் தந்திரமாய்க் கடத்தி வந்த துப்பாக்கியை நிமிர்த்திச் சுட்டான் இந்த வீர மகன்; சிறையிலே இரும்புக் கிராதி போட்ட வார்டில் பலத்த காவலுக்கிடையே பத்திரமாக இருந்த மித்திரத் துரோகியான நயவஞ்சகக் கோஸ்வாமியின் களங்கமான ரத்தத்தைச் சிந்திப் பழி தீர்த்துக் கொண்டான். அடக்குமுறையில் அபார நம்பிக்கை கொண்டு இறுமாந்திருந்த ஏகாதிபத்தியம், புண்ணிய பாரத பூமியில் - முக்கியமாக வங்காளத்தில் - எழுந்துள்ள சுதந்தரக் கிளர்ச்சி வெற்று உணர்ச்சிப் பிரவாகம் அல்ல, சத்திய பலத்துடன் நடந்து வரும் ஒரு சுதந்தர வேள்வியே என்று இப்போதுதான் உணரத் தலைப்பட்டிருக்கிறது.

பிரஸிடென்ஸி சிறையில் கனையாலாலும் ஸத்யனும் எப்படி ரிவால்வர்களைக் கடத்திச் சென்றார்கள் என்ற மர்மம் இன்று வரையிலும் யாருக்கும் விளங்காத ஒரு புதிராகவே இருந்து வருகிறது. அந்த இரு வீரர்களும் மரண தண்டனைக்கு உள்ளாகி இருவரின் உடல்களும் தகனமான

போது, அந்த அஸ்தியைப் பலர் பயபக்தியுடன் எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டு அஞ்சலி செலுத்தினார்கள்.

நரேன் கோஸ்வாமியைக் கொலை செய்ததற்காகக் கனையாலால், ஸத்யன் இந்த இருவர் மீதும் நடந்த வழக்கில், பிராஸிக்யூஷன் தரப்பில் ஆசுதோஷ் விச்வாஸ் என்ற பிரபல வழக்கறிஞர் ஆஜரானார். இவர் ஆங்கிலேயர்களின் தோழர் மட்டும் அல்ல ; ஆங்கில மோகமும் தலைக்கேறியவர். பாரத நாடு சுதந்தரம் அடையவே கூடாது என்று தீவிர அபிப்ராயம் கொண்ட இந்தியர் இவர் ; சுதேசிகளை (சுதந்தரக் கிளர்ச்சிக்காரர்களை) வெறுத்தவர். தமது வாக்கு வன்மையால் கனையாலால், ஸத்யன் இருவருக்கும் மரண தண்டனை வாங்கித் தந்த புண்ணியத்தை இவர் தேடிக் கொண்டார். ஆனால் அதன் பலன் கைமேல் கிடைத்து விட்டது. இந்த வழக்கு முடிந்து வெற்றிப் புன்னகையோடு போலீஸ் கோர்ட்டை விட்டு இவர் வெளி வந்தாரோ இல்லையோ, டுமீல் என்று ஒரு வேட்டுக் கிளம்பி இவரது மார்பில் பாய்ந்துவிட்டது. ஒரு வாலிபனின் துப்பாக்கியிலிருந்து பாய்ந்த வேட்டு. இவரைச் சுட்டு வீழ்த்திய வாலிபன் உடனே பிடிபட்டு விசாரணைக்கு ஆளாகித் தூக்குமேடை ஏறினான்.

இதோடு போகவில்லை. முஸாஃபர்புரில் வெடிகுண்டு வீச்சுக்குப் பின்பு ப்ரஃபுல்ல சக்கியை, மோகம்பா ரெயில்வே நிலையத்தில் கைது செய்ய இன்ஸ்பெக்டர் நந்தலால் பானர்ஜி என்பவர் முயற்சி செய்தார். ஆனால், அவரது கையில் சிக்காமல் சக்கி தன்னைத் தானே ரிவால்வரால் சுட்டுக் கொண்டுவிட்டான்.

குற்றவாளியைப் பிடித்துப் பெருமை அடைய முடியவில்லையே என்ற ஆதங்கத்தில் ஆத்திரத்தோடு அந்த இன்ஸ்பெக்டர் தம் கால் ஜோடுகளால் அந்த வீர

இளைஞனின் சடலத்தை உதைத்தார். புரட்சிக்காரர்களின் காதுக்கு இது எட்டியது. அவ்வளவுதான். கல்கத்தா ஸெர்ப்பன்டைன் சாலையில் நந்தலால் பானர்ஜியை எவரோ சிலர் பின்தொடர்ந்து வந்து ஒரு திருப்பத்தில் பதுங்கியபடி அவரைச் சுட்டுக் கொன்று ஓடிவிட்டார்கள். இந்த நாள் வரையில் அவர்கள் யார் என்று எவருக்குமே தெரியவில்லை.

இந்தச் சதி வழக்கில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகளின் மேல்பார்வையை ஷாம்சுல் ஆலம் என்ற போலீஸ் டெபுடி சூப்பரிண்டெண்டிடம் ஒப்படைத்திருந்தார்கள். சிறையில் இருந்த புரட்சிக்காரர்களை அவர்களுடைய உறவினர்களான பெண்கள் வந்து சந்தித்துத் தேற்றினார்கள். அந்தப் பெண்களிடம் இந்த டெபுடி சூப்பரிண்டெண்ட் கேவலமாக நடந்து கொண்டார். அதன் பலனை இவரும் உடனே அனுபவிக்கத் தவறவில்லை. இந்த வழக்கின் அப்பீல் விசாரணை நடந்து கொண்டிருந்த போது புரட்சி வீரர்களின் உறவினன் ஒருவன் இந்த மனிதரை மேல் கோர்ட்டு வாயிலிலேயே பகிரங்கமாகச் சுட்டுக் கொன்றுவிட்டு போலீஸாரிடம் சரணடைந்தான். பதினெட்டு வயதான அந்த வாலிபனின் பெயர் வீரேந்திர தத்த குப்தன். மரண தண்டனை பெற்று அவன் மாண்டான்.

இந்த வழக்கு விசாரணைக்கு வரச் சில தினங்களுக்கு முன்புதான் தமிழகத்து வீரர்களான வ.உ.சிதம்பரம் பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும் எண்பது ஆண்டுத் தீவாந்தர தண்டனை அடைந்து பின்பு அது எட்டு ஆண்டுக் கடுங்காவல் தண்டனையாக மாற்றப் பெற்றுச் சிறை புகுந்தார்கள்.

தாம் நடத்தி வந்த மராட்டா என்ற பத்திரிகையில் அரசாங்கத்துக்கு எதிரான ஒரு கட்டுரை எழுதிய

குற்றத்துக்காக லோகமான்ய திலகரும் இதே சமயத்தில் ஆறு ஆண்டுத் தீவாந்தர தண்டனைக்குள்ளானார்.

லண்டன் மாநகரில் பாரத யுவர்கள் பலர் ஒன்று கூடி, வீர ஸாவர்க்கர், அவருடைய வலது கரமாகத் திகழ்ந்த வ.வே.சு.ஐயர் இவர்களின் தலைமையில் அந்தோ. தியாகிகளே (Oh ye Martyrs) என்ற தலைப்பில் ஒரு நோட்டீஸ் வெளியிட்டு முதல் சுதந்தரப் போரான சிப்பாய்க் கிளர்ச்சியின் 50-ஆம் ஆண்டு விழாவை இதே சமயந்தான் சிறப்பாகக் கொண்டாடினார்கள். பாரத நாட்டிலும் அந்த நோட்டீஸின் சில பிரதிகள் விநியோகமாயின.

ஏகாதிபத்தியத்தின் ஆணவத்தைச் சம்மட்டி கொண்டு அடித்தது போன்ற ஒரு சம்பவம் - இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் சிகரமாக அமைந்த ஒரு சம்பவம் - நடந்ததும் இதே சமயத்தில்தான்.

ஜெர்மனியில் ஸ்டட்கார்ட் என்ற இடத்தில் பல ஐரோப்பியர்கள் ஒரு பொதுக் கூட்டத்திலே குழுமியிருந்தார்கள். பாரத அரசிளங்குமரி என்ற அன்புப் பெயர் பூண்ட வீர மாதாவான காமா அம்மையார் அந்தக் கூட்டத்திலே, பலத்த கரகோஷத்துக்கிடையே, இதோ பாருங்கள் ; இதுதான் சுதந்தர பாரத நாட்டின் மூவர்ணக் கொடி. யூனியன் ஜாக் கொடியை இந்திய அரசின் கொடி மரத்திலிருந்து இறக்கிவிட்டு, இந்தக் புனிதக் கொடியே சுதந்தர பாரதத்தில் விண்ணில் ஏறிப் பட்டொளி வீசிப் பறக்கப் போகிற நன்னாள் அதிக தூரத்தில் இல்லை. சுதந்தரக் கொடி பிறந்துவிட்டது அன்னை பாரத தேவியின் அடிமைத் தளையை அறுக்கும் திருப்பணியில் உயிரைத் துரும்பெனத் தியாகம் செய்த வீரப் புதல்வர்களின் பவித்திரமான ரத்தத்திலே இந்தக் கொடியின் பிறப்பு

உறுதிப்பட்டுவிட்டது. அன்பர்களே. தோழர்களே. சகோதரர்களே. சுதந்தர பாரதத்தின் இந்தக் கொடிக்கு அஞ்சலி செய்யும்படி உங்களைப் பணிவோடு நான் கேட்டுக் கொள்கிறேன் என்று முழங்கினார் ; தாம் சித்திரித்திருந்த மூவர்ணக் கொடியை அப்படியே கம்பத்தில் ஏற்றினார். காமா அம்மையார் அன்று சித்திரித்திருந்த சுதந்தரக் கொடியே நமது இன்றைய மூவர்ண தேசிய கொடியின் மூலம். இதே மூன்று வர்ணங்கள்தான் காமா அம்மையாரின் கொடியிலும் இருந்தன. ஆனால் அசோக சக்கரத்துக்குப் பதிலாக ஏழு தாமரை பூக்கள், சூரியன், சந்திரன் இவையெல்லாம் மேலும் கீழுமாக அதை அலங்கரித்தன. நடுவில் வந்தேமாதரம் என்ற வசனம் பொறித்திருந்தது. அந்த வீரப் பெண்மணி சித்திரித்த கொடியில் பல மாறுதல்களைச் செய்தாலும் அவருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் நம் பாரத அரசாங்கம், இன்றும் அதே மூவர்ணங்களைக் கையாண்டதைப் போற்ற வேண்டியது அவசியம்.

இனி அரவிந்தர் மீதும் அவருடைய கூட்டாளிகள் மீதும் வந்த வழக்கைக் கவனிப்போம். 1908 அக்டோபர் 19-ஆம் தேதி விசாரணை தொடங்கியது. பிரதம நீதிபதியாக அமர்ந்தவர் ஸி.பி.பீச்க்ராஃப்ட் என்னும் ஐ.ஸி.எஸ். அதிகாரி. கேம்ப்ரிட்ஜ் கலாசாலையில் அரவிந்தரின் சக மாணவராக இருந்தவர். அப்போது கிரேக்க மொழியில் புலி என்று புகழ் பெற்றிருந்த பீச்க்ராஃப்டையும் வென்று முதன்மையில் நின்றவர் அரவிந்தர். பீச்க்ராஃப்டுக்குத் துணையாக இரண்டு இந்திய நீதிபதிகளும் அமர்ந்தார்கள். தன் தரப்பில் வாதாடப் பிரசித்தி பெற்ற வழக்கறிஞரான எர்ட்லி நார்ட்டனைப் பிரத்தியேகமாக அரசாங்கம் தருவித்தது.

பி.சக்கரவர்த்தி, கே.என்.சௌதுரி என்ற இரண்டு பிரபல வழக்கறிஞர்கள் தொடக்கத்தில் அரவிந்தரின் சார்பில் வாதாடினார்கள். ஆனால் தாமாகவே வறுமையை வலுவில் வாரி அணைத்துக் கொண்ட அரவிந்தரால் இவர்களுக்கு உரிய ஊதியத்தை வழங்க இயலாமல் போகவே, இருவரும் தொடர்ந்து வாதாட மறுத்துவிட்டார்கள். இதனால் நிலைமை எக்கச்சக்கமாகிவிடுமோ என்று எதிரிகள் அஞ்சினார்கள். இந்தச் சமயத்தில் சித்தரஞ்சன் தாஸ் (பின்னாளில் தேச பந்து தாஸ்) என்ற இளம் வழக்கறிஞர் தாமாகவே அரவிந்தருக்காகக் கட்டணம் ஏதும் பெறாமல் வாதாட முன்வந்தார்.

பல நாளைக்கப்புறம் தாம் எழுதிய ஒரு புத்தகத்தில் சித்தரஞ்சனை அரவிந்தர் இப்படிப் புகழ்ந்திருக்கிறார் : இருண்ட இருளிலே தோன்றும் ஒளிக்கீற்றைப் போல் அவன் வந்தான். எனக்காக - என்னைக் காப்பாற்றுவதற்காகவே - அந்த இளைஞன் இரண்டு மாத காலம் சற்றும் கண் அயராமல் இரவு பகல் பாராது உழைத்தான். தனக்கு வருவாய் தரக்கூடிய பிற வழக்குகளைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அந்தத் தியாக சிரோமணி மறுத்துவிட்டான். அந்த உத்தமன் யார் தெரியுமா? தேசபந்து சித்தரஞ்சன் தாஸ்தான். முதல்முதல் அவனைக் கண்டவுடனேயே என் உள்மனம் கூறியது : அரவிந்தா. வெற்றி உனதே.

அரவிந்தர் இந்த விதம் குறிப்பிட்ட தேசபந்து என்ற பட்டம் சித்தரஞ்சனுக்கு நிலைத்துவிட்டது.

எதிரிகள் மீது சர்க்கார் தரப்பினர் சாட்டிய குற்றங்கள் இவை :

1. மாட்சிமை தங்கிய மன்னர் பிரானுக்கு எதிராகப் போராட ஆயுதம் தயாரித்துச் சதி வேலைகளில் ஈடுபட்டது.

2. மன்னர் பிரானுக்கு எதிராக அவருடைய பிரதிநிதிகள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து போர் தொடுத்தது.

3. மன்னர் பிரானின் அரசுரிமையைப் பலவந்தமாகப் பறித்து அவரது ஆட்சியைக் கவிழ்க்க முயற்சி செய்தது.

4. அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்காகப் பாரதமெங்கும் - குறிப்பாக வங்காளத்தில் - லைஸென்ஸ் இல்லாமல் போர்க் கருவிகள் சேகரித்தது.

5.யுகாந்தர், வந்தேமாதரம் ஆகிய இரண்டு பத்திரிகைகளிலும் ஆட்சேபகரமான கட்டுரைகள் எழுதி ராஜத்து வேஷக் குற்றம் புரிந்தது.

6. லெஃப்டினெண்ட் - கவர்னரான ஸர் ஆண்ட்ரூ ஃப்ரேஸரைக் கொலை செய்யும் நோக்கத்தோடு அவருடைய ரெயில் வண்டியைக் கவிழ்த்தது.

7. சந்திரநாகூர் நகர மேயரின் வீட்டில் வெடி குண்டுகளை வீசியது.

8. ஜில்லா மாஜிஸ்டிரேட்டான ஆலன் துரை மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தது.

9. கிங்ஸ்ஃபோர்டு துரையைக் கொலை செய்வதற்காகக் குதிராம் போஸ், ப்ரபுல்ல சக்கி இருவரையும் முஸாஃபர்புருக்கு அனுப்பியது.

வழக்கறிஞர் எர்ட்லி நார்ட்டன் தமது வாதத்தின் போது பாரீந்திர குமாரின் நேர்மையை வெகுவாகப் புகழ்ந்தார். ஆனால் இந்தச் சதிகளுக்கெல்லாம் திட்டம் வகுத்தவர் அரவிந்தரே என்று கூறினார். இந்த வழக்கில் எப்படியாவது அரவிந்தரைச் சிறைக்குள் தள்ளிவிட வேண்டும் என்பதே சர்க்காரின் நோக்கமாயிருந்தது. தமது

தீர்ப்பின் போது பிரதம நீதிபதி பீச்க்ராஃப்டே இதைப் பற்றிச் சற்று அதிருப்தியோடு குறிப்பிட்டார்.

அரவிந்தரின் சொற்பொழிவுகள், கட்டுரைகள், கடிதங்கள், பிற எதிரிகளின் வாக்குமூலங்கள், அப்ரூவர் கோஸ்வாமியின் வாக்குமூலம் இவையெல்லாம் பாதகமாக அமைந்தன.

மொத்தம் 12- நாட்கள் இந்த வழக்கு நடந்தது. இரு தரப்பிலுமாக 209 பேர் சாட்சியம் சொன்னார்கள். சுமார் நாலாயிரம் காகிதச் சான்றுகளும் லைசென்ஸ் இல்லாத போர்க் கருவிகள் சுமார் ஐநூறும் கோர்ட்டில் தாக்கலாயின.

அரவிந்தருக்குப் பாரீந்திரர் எழுதியதாகக் கருதிய ஒரு கடிதத்தை அரவிந்தரின் வீட்டிலிருந்து போலீசார் கைப்பற்றியிருந்தார்கள். இந்தக் கடிதமே முக்கியமாக அரவிந்தருக்குப் பாதகமாகவும் பிராஸிக்யூஷனுக்குச் சாதகமாகவும் அமைந்தது. மிட்டாய்க் கடிதம் (Sweet letter) என்று இதைக் குறிப்பிட்டார்க்ள்.

மிட்டாய் கடிதத்தின் வாசகம் இதுதான் :

அன்பார்ந்த சகோதரா,

நல்ல தருணம் வந்துவிட்டது. இயன்ற வரையில் முயன்று அவர்கள் நமது விவாதத்தில் பங்கு கொள்ளச் செய்வாயாக, நெருக்கடியைச் சமாளிக்கும் பொருட்டுப் பாரதமெங்கும் மிட்டாய்கள் தேவைப்படுகின்றன. விரைவில் உன் பதிலை எதிர்பார்க்கிறேன்.

"உன் அன்புள்ள
"பாரீந்திரகுமார் கோஷ்
"வங்காள விடுதி.
"27-12-1907."

ஸூரத்தில் காங்கிரஸ் கூட்டம் ஒழுங்கீனமாகச் சிதறிய சமயத்தில் அந்தக் கடிதத்தை அரவிந்தருக்குப் பாரீந்திரர் எழுதியதாகத் தெரிய வந்தது. பிராஸிக்யூஷன் தரப்பினர், இது ஒரு மர்மக் கடிதம். இதில் மிட்டாய் என்று குறித்திருப்பது உண்மையில் போர்க் கருவிகளையே. அரவிந்தர் ஒரு ரகசியப் புரட்சிக் கூட்டத்தின் அங்கத்தினர். அது மட்டுமல்ல: அதன் செய்கைகளுக்குத் திட்டமிட்டுத் தந்த தலைவரும் அவரே. அதை இந்தக் கடிதம் ஐயத்துக்கு இடம் இல்லாதபடி காட்டுகிறது என்று வாதித்தார்கள்.

எதிரி தரப்பிலோ சித்தரஞ்சன் தாஸ் இப்படி வாதித்தார் : இந்தக் கடிதமே ஒரு கள்ளத் தஸ்தாவேஜு. பிராஸிக்யூஷன் தரப்பில் சாட்சியம் கூறினானே சரத் தாஸ், அவன் ஏற்கனவே இரண்டு முறை கள்ளத் தஸ்தாவேஜு தயாரித்த குற்றத்துக்காகத் தண்டனை பெற்றவன் என்பதை அனைவரும் அறிவீர்கள். கள்ளக் கையெழுத்து வித்தையில் அவன் கை தேர்ந்தவன் என்று நிரூபணம் ஆகியிருக்கிறது. அப்படிப்பட்டவன் ஏன் இந்த முறையும் அந்தச் செய்கையில் ஈடுபட்டிருக்க முடியாது?... கற்றறிந்த என் நண்பர் (சர்க்கார் தரப்பு வக்கீல்) தமது வாதத்தில் குறிப்பிட்டது போல் அரவிந்தர், பாரீந்திரர் ஆகிய இரண்டு சகோதரர்களையும் சதிகாரர்கள் என்றே நாம் வைத்துக் கொள்வோம். அப்படியானால், இருவரும் ஒருவரையொருவர் நேரே சந்தித்துப் பேசக் கூடிய வாய்ப்பு ஏராளமாக இருக்கும் போது, இந்த மாதிரி ஒரு கடிதம் - அதுவும் பயங்கரச் சதிச்செயல்களைப் பற்றி விவரிக்கும் ஒரு கடிதம் - எழுதிக் கொள்வானேன்? அப்படி எழுதிக் கொள்வது அபத்தமான செய்கையில்லையா? அவ்வளவு ரகசியமாகத் திட்டம் வகுப்பவர்கள் இந்த மாதிரி ஓர் அபத்தமான செய்கையில் ஈடுபடுவார்களா?

மற்றொரு விஷயத்தைக் கேளுங்கள் : பாரீந்திரர் தம் மூன்றாவது தமையனாரான அரவிந்தரை ஸேஜ்தா (மூன்றாவது அண்ணா) என்றே எப்போதும் அழைப்பார் என்று அனைவரும் ஒப்புக் கொள்கிறீர்கள். பின்னே கடிதத்தில் மட்டும் ஏன் அன்பார்ந்த சகோதரா என்று எழுத வேண்டும்?...

மேலும், ஒரு சகோதரன் மற்றொரு சகோதரனுக்குக் கடிதம் எழுதும் போது, எங்கேயாவது மூன்றாம் மனிதனைப் போல் தன் முழுப் பெயரையும் கையொப்பம் இடுவதுண்டா? இந்தக் கடிதத்தில் பாரீந்திரகுமார் கோஷ் என்று கையொப்பம் இட்டிருப்பதே இது கள்ளப் படைப்பு என்பதைக் காட்டுகிறது. இரண்டு சகோதரர்களும் மேல் நாட்டிலே பழகியவர்கள் ; ஆகவே மேனாட்டுப் பாணியிலேயே கடிதம் எழுதிக் கொண்டார்கள் என்று பிராஸிக்யூஷன் தரப்பினர் சொல்கிறார்கள். ஆனால் பாரீந்திரர் ஒரு வயதுக் குழந்தையாக இருந்த போதே இந்தியாவுக்கு வந்துவிட்டார். நான் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்புதான் இங்கிலாந்தை விட்டு வெளியேறினேன். அங்கே நான் இருந்த வரையில் இங்கிலாந்தில் ஆங்கிலேயர்கள் தம் சகோதர சகோதரிகளுக்குக் கடிதம் எழுதும் போது, முழுப்பெயரையும் எழுதிக் கண்டதில்லை. பதினைந்து ஆண்டுகளில் ஒருவேளை நாகரிகம் முற்றி இந்த வழக்கம் மாறிவிட்டதோ என்னவோ?... இதைப் பற்றி என் ஆங்கிலேய நண்பர்களை விசாரித்துவிடுகிறேன்... ஹூம் ... அவ்வளவு தூரம் போவானேன்? மதிப்புக்கு உரிய நீதிபதி அவர்களே ஓர் ஆங்கிலேயர்தான். அவரே தம் நாட்டு மக்களின் வழக்கத்தைக் கோர்ட்டில் கூறுவாரானால் ஐயம் தெளிந்துவிடும். அவர் இப்படி நமது ஐயத்தைத் தெளிவிப்பார் என்றே நம்புகிறேன்.?

இங்கே நீதிபதி பீச்க்ராஃப்ட் சொன்னார். என் உடன்பிறந்த சகோதரனுக்குக் கடிதம் எழுதினால் ஒரு காலும் என் முழுப் பெயரையும் கையொப்பம் இடமாட்டேன். குறைந்த பட்சம் என் குடும்பப் பட்டப் பெயரை யாவது (Surname) விட்டுவிடுவேன்.

சித்தரஞ்சன் தமது வாதத்தைத் தொடர்ந்தார். இந்த மிட்டாய்க் கடிதம், பம்பாய் மாகாணத்தில் பல இடங்களில் பயணம் செய்த பின்பே கல்கத்தாவுக்குத் திரும்பி வந்திருப்பதாக நிதர்சனமாய்த் தெரிகிறது. அங்கே இது இரண்டு மாதங்கள் வரையில் ஸ்காட்ஸ் லேன் என்ற சந்தில் 23-ஆம் நம்பர் வீட்டில் கிடந்ததாகவும் நம்ப தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன. என்றாலும் இதைக் கிரே ஸ்ட்ரீட் 48-ஆம் நம்பர் வீட்டில் (அரவிந்தரது இல்லத்தில்) கண்டெடுத்ததாகப் போலீஸார் கூறுகிறார்கள்... இதற்குப் பிரத்யட்ச சாட்சி ஏதும் இல்லை. ஆகவே, கோர்ட்டார் இந்தக் கடிதத்துக்கு ஒரு மதிப்பும் வைக்கலாகாது. இது அரவிந்தருக்குப் பாரீந்திரர் எழுதியதாகத் தோன்றவில்லை. கோஷ் சகோதரர்கள் மொத்தம் ஐந்து பேர். அரவிந்தர் மூன்றாமவர் ; பாரீந்திரர் எல்லாருக்கும் இளையவர். அரவிந்தரைப் பாரீந்திரர் ஸேஜ் தா என்று அழைத்து வந்ததாகவும் அறிகிறோம். எனவே, அவரே இந்தக் கடிதத்தை எழுதியதாக வைத்துக் கொண்டாலும், இதை அரவிந்தருக்கு எழுதியதாக ஒரு போதும் கொள்ள முடியாது. மேலும் பாரீந்திரரை உறவினர்களும் நண்பர்களும் பாரீ என்றே அழைத்து வந்ததாக வேறு தெரிவதால், அவர் இந்தக் கடிதத்தில் கண்டபடி தம் முழுப் பெயரையும் ஒப்பம் இட்டிருக்கக் கூடும் என்று எண்ண ஆதாரமே இல்லை என்று கூறினார். தொடர்ந்து மிட்டாய்க் கடிதம் ஒரு கள்ளக் கையெழுத்துப் படைப்பு என்றே முடிவாயிற்று.

இது பிராஸிக்யூஷனுக்கு ஒரு பேரிடியாகத் தோன்றினாலும், எர்ட்லி நார்ட்டன் முன்வைத்த காலைப் பின் வைப்பவராக இல்லை. அரவிந்தரை மாட்ட வைக்க அவர் வேறு வழிகளைக் கையாண்டார். அதற்கேற்ப 1905-ஆம் ஆண்டு தம்முடைய மனைவிக்கு அரவிந்தர் எழுதியிருந்த ஒரு கடிதத்தைக் கோர்ட்டில் தாக்கல் செய்து தமது கட்சிக்குப் பலம் தேடினார். அந்தக் கடிதத்தின் விவரம் இது ;

*... தற்சமயம் எனக்கு என் சொந்தப் பணி என்று எதுவும் கிடையாது. நான் இப்போதெல்லாம் அவனது திருப்பணியிலேயே ஸதா ஸர்வ காலமும் ஈடுபட்டிருக்கிறேன். என் உள்ளத்தில் ஒரு புரட்சியே உண்டாகி யிருக்கிறது. அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்பதைப் பரிபூர்ணமாக நம்புகிறேன். ஆகவே, அவன் என்ன ஆக்ஞை இடுகிறானோ அதையே சிரமேற்கொண்டு நான் ஆற்றி வருகிறேன்.*

*என் இச்சை, சிந்தை, தீர்மானம் என்று பிரத்தியேகமாக ஒன்றுமே இல்லை. எல்லாம் வல்ல அந்த இறைவன் உன்னிடமும் கருணை காட்டுவான். அவனைப் பரிபூர்ணமாக நம்பு. அவனிடம் உன்னை ஒப்படைத்துவிட்டு நிச்சிந்தையாக இரு. அவன் உனக்கும் சீரான பாதையையே வகுத்துத் தருவான்.*

*நீ என் ஸஹதர்மிணி. என் பணியில் உதவுவாய் என்றே நம்புகிறேன். இந்தப் புனித பூமி நீடூழி வாழ இன்று பிரம்ம தேஜஸ் இந்த நாட்டுக்கு மிக மிகத் தேவை .....*

இந்தக் கடிதத்தின் மூலம் அரவிந்தர் தம்முடைய மனைவியையும் புரட்சியில் பங்கு கொள்ளத் தூண்டியதாகப் பிராஸிக்யூஷன் தரப்பினர்

வாதாடினார்கள். தமது கடிதத்தில் புரட்சி என்று அரவிந்தர் குறிப்பிட்டிருந்த ஒரே சொல்லைக் கொண்டு தங்கள் வாதத்தைப் பலப்படுத்த முயன்றார்கள்.

ஆனால் சித்தரஞ்சனோ இந்தக் கடிதத்தில் கண்டிருந்த ஸஹதர்மிணி, பிரம்ம தேஜஸ் ஆகிய இரண்டு வடமொழிப் பதங்களையே முக்கியமாய் நோக்க வேண்டும் என்றார். அரவிந்தர் பிரயோகித்த புரட்சி என்ற சொல் சதிச் செயலைக் குறிக்கவில்லை ; லௌகீக வாழ்க்கையை உதறித் தள்ளிவிட்டு, வேதாந்த விசாரத்தில் சென்று கொண்டிருந்த அவரது உள்ளத்தையே குறிக்கிறது என்று கூறினார். பின்னாளில் அரவிந்தர் உண்மையாகவே இல்லறத்தை விட்டுத் துறவு பூண்டார்.

இறுதியில் சித்தரஞ்சனே வெற்றி பெற்றார். தமது வாதத்தின் போது சித்தரஞ்சன், சுதந்தரத்தின் பெருமையைப் பாமர மக்களுக்கு உணர்த்துவது சட்டப்படி குற்றமானால், அரவிந்தர் குற்றவாளி என்று கொள்ளலாம். ஆனால் அது தவறான செய்கையா என்பதைத் தயக்கம் இல்லாமல் கூறுங்கள் என்ற போது கோர்ட்டிலே எழுந்த, இல்லை. இல்லை. என்ற கோஷம் வானைப் பிளந்தது.

முடிவில் பிரதம நீதிபதியும், துணை நீதிபதிகளும் ஒரே முகமாக அரவிந்தரை, நிரபராதி என்று கூறிவிட்டார்கள். அவருடன் மற்றும் பதினாறு எதிரிகள் விடுதலை அடைந்தார்கள். மிஞ்சிய பன்னிரண்டு எதிரிகள் மட்டும் தண்டனை அடைந்தார்கள்.

குற்றவாளிகள் என்று பாரீந்திரர், உல்லாஸ்கர் ஆகிய இருவரையும் நீதிபதிகள் தீர்மானித்து, அவர்களுக்கு மரண தண்டனை வழங்கினார்கள். மற்றவர்களுக்கு வெவ்வேறு கால அளவுக்குத் தீவாந்தர தண்டனை விதித்தார்கள்.

நீதிபதிகள் விதித்த தண்டனைகளை எதிரிகள் எதிர்த்து அப்பீல் செய்து கொண்டார்கள். இந்த முறையும் பாரீந்திரரின் சார்பில் வழக்காடச் சித்தரஞ்சனே முன்வந்தார். அவரது வாக்கு வன்மையால் மரண தண்டனையிலிருந்து பாரீந்திரர் தப்பிப் பிழைத்தார்.

அப்பீல் கோர்ட்டின் பிரதம நீதிபதியான ஸர் லாரென்ஸ் ஜெங்கின்ஸ், துணை நீதிபதி காண்டப் இருவரும் எதிரிகளின் குற்றங்களை மறுக்கவில்லை. ஆனாலும் அவர்களுக்குக் கீழ்க் கோர்ட்டார் விதித்த தண்டனையை வெகுவாகக் குறைத்துவிட்டார்கள்.

பாரீந்திரர், உல்லாஸ்கர், ஹேமசந்திர தாஸ் ஆகிய மூவரும் ஆயுட்காலத் தீவாந்தர தண்டனை அடைந்தார்கள். பிற குற்றவாளிகளின் தீவாந்தரத் தண்டனைகளிலே கால அளவு குறைந்தது.

தாம் குற்றவாளி அல்ல என்று தீர்மானமான உடனேயே பிரிட்டிஷ் இந்தியாவை விட்டு அரவிந்தர் வெளியேறினார் ; பிரெஞ்சுப் பகுதியான புதுவையில் போய்ச் சரண் புகுந்தார். அங்கே அவர் குடியேறிய சில காலத்துக்குள் அரசியலை மட்டுமல்ல, உலகையே துறந்த ஞானி ஆகிவிட்டார். இது தேசபந்து சித்தரஞ்சனின் தீர்க்க தரிசனத்தை மெய்ப்பித்துவிட்டது.

பாரீந்திரர், உல்லாஸ்கர், ஹேமசந்திர தாஸ், உபேந்திரநாத் உள்படச் சகல குற்றவாளிகளும் அந்தமான் சிறைக்கூடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே அவர்கள் அடைந்த இன்னல்களை வரையறுத்துச் சொல்ல வார்த்தைகளே இல்லை ; உள்ளத்தை உருக்கும் இரண்டொரு சம்பவங்களைக் கொண்டே, இந்திய வீரப் புதல்வர்கள் அனுபவித்த துன்பங்களை அனுமானம் செய்து கொள்ளலாம்.

அதிகாரிகள் செய்த சித்திரவதை தாளாமல் உல்லாஸ்கர் உள்பட மூன்று இளைஞர்கள் சித்தப்பிரமைக்கு ஆளாகிவிட்டார்கள். பயங்கரப் பைத்தியமாகிவிட்ட உல்லாஸ்கர் சென்னைக் கீழ்ப்பாக்கம் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் பல வருஷங்கள் கழித்தார். இறுதி வரையில் அவருடைய பைத்தியம் தெளியவே இல்லை. இந்துபூஷண் என்பவரும் வேறொரு வாலிபரும் துன்பம் பொறுக்க முடியாமல் போர்ட் பிளேர் சிறையில் தற்கொலை செய்து கொண்டார்கள்.

இப்படியாக, அவமதிப்பைப் பொறுக்காமல் பழிக்குப் பழியாக பல கொலைகள், பல உயிர்த் தியாகங்கள், பல காலச் சிறைவாசங்கள் இவையெல்லாம் அடங்கிய பிரசித்தமான வீர வரலாறுதான் ஆலிபுர்ச் சதி.



# 3. சாவர்க்கர் புரட்சி

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு எதிராகச் சதிச் செயலில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டி நடந்த பல சதி வழக்குகளில் 1910-ஆம் ஆண்டில் நடந்த நாஸிக் சதி வழக்கும் ஒன்றாகும். இந்த வழக்கில் விநாயக் தாமோதர சாவர்க்கர் முக்கிய எதிரி.

விநாயக் தாமோதர் சாவர்க்கர் ஒரு மாணவராக இருந்த போதே நாசிக் சதி துவங்கியது என்பது பிராசிக்யூஷன் தரப்பினரின் அபிப்ராயம். புனா ஃபெர்கூஸன் காலேஜில் கல்வி பயின்று பி.ஏ. பட்டம் பெற்ற பின்பு, ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா என்னும் தேச பக்தர் ஒருவரிடம் உபகாரச் சம்பளம் பெற்றுப் பிரிட்டனில் கல்வி பயில 1906-இல் சாவர்க்கர் சென்றார்.

பின்னாளில் பெருங்கிளர்ச்சியைத் தோற்றுவித்த ரௌலத் ரிபோர்ட்டில் சாவர்க்கரைப் பற்றி ஒரு விவரம் வருகிறது. அவர் கல்வி பயிலப் பிரிட்டனுக்குப் பயணமாகு முன்பே, மகாத்மா ஸ்ரீ அகம்ய குரு பரமஹம்சருடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார் என்பதே அந்த விவரம். 1905-இல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கொடுமைகளைப் பற்றி அச்சமின்றிப் பகிரங்கமாகப் பிரசாரங்கள் செய்து வந்தவர் அந்த மகாத்மா.

1906-இல் புனா கல்லூரி மாணவர்கள் தமக்குள் ஒரு குழு அமைத்துக் கொண்டு அதன் சார்பில் ஏக மனசாக சாவர்க்கரையே தலைவராகத் தேர்ந்தெடுத்து, மகாத்மா அகம்ய குருவைச் சந்தித்து வர அனுப்பினார்கள். சாவர்க்கரும் அப்படியே பிப்ரவரி 23-ஆம் தேதி அவரைச் சந்தித்து அளவளாவி அவருக்குத் தம்மால் இயன்ற வரையில் உதவுவதாக வாக்களித்து, அதைச் செயலாற்றும் முறையில் ஒன்பது நபர்கள் கொண்ட ஒரு கமிட்டியை உடனே நிறுவினார்.

ஆனால் சாவர்க்கர் மேல் படிப்புக்காகப் பிரிட்டனுக்குச் சென்ற பின்பு, அந்தக் கமிட்டி சிதறிவிட்டது. விநாயக் சாவர்க்கரின் மூத்த சகோதரரும் பாபா ஸாஹேப் என்ற அன்புப் பெயர் பெற்றவருமான கணேஷ் சாவர்க்கர் நிறுவிய அபிநவ பாரத மண்டலத்தில் சில மாணவர் மட்டும் அங்கத்தினராகச் சேர்ந்தார்கள். அகம்ய குருவைச் சந்தித்து அளவளாவுமுன்பே, சாவர்க்கர் சகோதரர்கள் தேச விடுதலைக்காகத் தம் சகாக்களைக் கூட்டிக் கொண்டு மித்ரமேஸா என்றொரு சங்கத்தைத் துவக்கியிருந்தார்கள். இந்தச் சங்கம் முதலில் அரசியல் நடவடிக்கை எதையும் கைக்கொள்ளவில்லை. இதில் கலந்து கொண்டவர்களுக்குத் தண்டால், பஸ்கி போன்ற பயில்வான் வித்தைகளும் தேகாப்பியாசப் பயிற்களுமே அளிக்கப் பெற்றன. இந்த மித்ர மேல சங்கமே பின்னால் அரசியல் வாடையுடன் அபிநவ பாரத மண்டலமாகப் பரிணமித்தது.

விநாயக் சாவர்க்கர் லண்டன் மண்ணை மிதித்த போது, பாரத அன்னையின் தவப் புதல்வர்களில் பாரத நாட்டு விடுதலைக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த சிலரை அங்கே கண்டு களிப்புற்றார். அவர்களுள் மிக முக்கியமானவர்கள் பாயி பரமானந்தர், லாலா ஹர்தயால், வீரேந்திரநாத் சட்டோபாத்தியாயர் (கவியரசி ஸரோஜினி தேவியின் சகோதரர்), வ.வே.சு.ஐயர் ஆகியவர். இவர்களைத் தவிர

இந்தியன் ஸோஷியாலோஜிஸ்ட் என்ற பத்திரிகை வாயிலாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கொடுமைகளைப் பற்றி அனல் கக்கி வந்த ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா என்பவரும் அங்கே இருந்தார். அந்தச் சமயம் பாரிஸ் நகரில் இருந்த காமா அம்மையாரும் இளம் ரத்தம் ஓடும் பல தேச பக்தர்களுக்கு உற்சாகமூட்டிப் புரட்சிகரச் செயல்களில் ஈடுபடும்படி அடிக்கடி அவர்களைத் தூண்டி வந்தார்.

லண்டனில் அபிநவ பாரத மண்டலத்தின் ஒரு கிளைக் கழகம் விநாயக் சாவர்க்கரைப் பிரதான பாத்திரமாகவும், வ.வே.சு.ஐயரை அவருடைய வலது கரமாகவும் கொண்டு அமைந்தது. இந்தப் புரட்சிக்காரர்கள் தங்களுடைய விவாதங்களை இந்தியா மாளிகை என்ற கட்டிடத்தில் நடத்தி வந்தார்கள்.

இந்த நாட்களிலேதான் சரித்திரப் பிரசித்தியான வங்கப் பிரிவினை நடந்தது. அதை லோகமான்ய திலகர், விபின்சந்திரபால், லாலா லஜபதிராய் ஆகிய தலைவர்கள் ஆட்சேபித்துப் பலமாகக் கிளர்ச்சி செய்தார்கள் ; தங்களுடைய வெறுப்பைச் செயலில் காட்டுவதற்காக ஆங்கில நாட்டுப் பொருள்களைப் பகிஷ்காரமும் செய்தார்கள்.

இதே நாட்களில்தான் பாரீந்திரகுமார் கோஷ் என்ற இளைஞரின் தலைமையில் பல இளந் தேசபக்தர்கள் ருஷியப் புரட்சியைக் கண்ணுற்று உத்வேகம் பெற்றார்கள் ; அதே முறையைப் பாரத நாட்டில் மேற்கொள்ள உறுதி பூண்டார்கள்; அதையொட்டிப் பயங்கரப் புரட்சிச் செயல்கள் மூலம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழித்துக் கட்டத் தீர்மானித்துத் தீவிர முயற்சியில் இறங்கினார்கள். இந்தக் கூட்டத்தினரில் ஒருவரான ஹேமசந்திர தாஸ் என்பவர் வெடிகுண்டு செய்யும் முறையைக் கற்றறிய ஐரோப்பாவுக்குப் பயணமானார்.

விரைவிலேயே இந்த வித்தையில் கைதேறியவர்களாக 1908 ஏப்ரல் 30-ஆம் தேதி முஸாபர்புரில் குதிராம் போஸ், பிரஃபுல்ல சக்கி என்ற இரண்டு வாலிபர்கள் சில பிரிட்டிஷ் ஏஜெண்டுகள் மீது குண்டு வீசியும், துப்பாக்கியால் சுட்டும் அவர்களைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டார்கள்.

இதைக் கண்டு வெகுண்டு எழுந்த பிரிட்டிஷ் அரசாங்கம் உடனே அரவிந்த கோஷ், பாரீந்திரகுமார் கோஷ், உல்லாஸ்கர் தத் உள்படப் பலரைக் கைது செய்தது. கைதானவர்களில் ஒருவனான நரேன் கோஸாயின் அப்ரூவராக மாறினான் ; வெடிகுண்டுகள் இந்தியப் புரட்சிக்காரருக்கு எப்படிக் கிடைத்தன என்ற ரகசியத்தைப் போலீஸாருக்கு அவன் வெளியிட்டுவிட்டான். அதன் விளைவாக, அபிநவ பாரத மண்டலத்தின் ஓர் அங்கத்தினரான சேனாபதி பாபத் என்பவரைக் கைது செய்யத் தீவிர முயற்சி செய்தார்கள். அப்போது அவர் இந்தியாவுக்கு வந்திருந்தார். சேனாபதி பாபத்துக்கும் ஜுகாந்தர் கூட்டத்துப் பயங்கரச் சதிகாரர்களுக்கும் தொடர்பு உண்டு என்று நரேன் கோஸாயின் மூலம் போலீஸார் அறிந்திருந்தார்கள். ஆனால் போலீஸார் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டுச் சேனாபதி பாபத் பல வருஷ காலம் தலைமறைவாகத் திரிந்தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்பு லண்டன் இந்தியா மாளிகையில் நடைபெற்று வந்த விவாதங்களை உளவறியப் பிரிட்டிஷ் அரசாங்கம் முயற்சி செய்தது. ஆனால் அங்கே இருந்தவர்கள் தமக்குள் இந்திய மொழிகளிலேயே உரையாடி வந்ததால், பிரிட்டிஷ் ஒற்றர்களால் ஒன்றும் அறிந்து கொள்ள இயலவில்லை. எனவே, பம்பாய் ஹை-கோர்ட்டில் துபாஷாகப் பணியாற்றி வந்த கீர்த்திகர் என்பவனைப் பல் வைத்தியம் படிப்பவனைப் போல் லண்டனுக்கு அனுப்பி, இந்தியா மாளிகையிலேயே தங்கச் செய்தார்கள். கழுகுக் கண்

படைத்திருந்த நம் வ.வே.சு.ஐயர் மட்டும் இந்த ஆளைச் சந்தேகக் கண்ணோடுதான் நோக்கினார். ஐயரும், டாக்டர் தி.சே.சௌ.ராஜனும், ஒரு நாள் திடீரென்று இவனுடைய அறையில் பலவந்தமாக நுழைந்தார்கள் ; பம்பாய் ரகசியப் போலீஸுக்கு இவன் வரைந்திருந்த கடிதங்களைக் கைப்பற்றினார்கள். ஐயரின் கெடுபிடியில் நடுநடுங்கிப் போன கீர்த்திகர் தான் உளவனே என்ற உண்மையைக் கக்கிவிட்டான். என்றாலும், இந்த விவரம் சாவர்க்கருக்குத் தெரிந்த போது, கீர்த்திகர் தொடர்ந்து தம்முடன் இந்தியா மாளிகையில் இருப்பதை அவர் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் தங்களிடம் காட்டிவிட்டே அவன் எந்தக் கடிதத்தையும் வெளியே அனுப்ப வேண்டும் என்ற நிபந்தனையை மட்டும் அவனுக்கு விதித்தார்கள்.

இந்தியா மாளிகையில் அபிநவ பாரத மண்டலம் நடத்தி வந்த பணிகளைப் பற்றி அறிந்த இந்திய அரசாங்கம் மிகவும் குழம்பித் தவித்தது. சிப்பாய்க் கலகம் என்று ஆங்கிலேயர் குறிப்பிட்ட 1857-இல் நடந்த முதல் சுதந்திர முழக்கத்தின் 50-ஆம் ஆண்டு விழாவை 1908 மே மாதம் இந்தியா மாளிகையினர் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அவர்கள் வெளியிட்ட அந்தோ, தியாகிகளே (Oh! Ye Martyrs) என்ற தலைப்பு கொண்ட நோட்டீஸுகள் எப்படியோ பாரத நாட்டுக்கு வந்து மக்களிடையே விநியோகமாயின. இதற்கிடையே சாவர்க்கர் எழுதிய மகத்தான புரட்சி (Great Revolt) என்ற புத்தகமும் வெளியாகிவிட்டது. பின்பு கேட்க வேண்டுமா? நாட்டில் மக்களிடையே சுதந்தர உணர்ச்சி பீறிட்டெழுந்ததன் பயனாக மூண்ட கலவரத்தை ஒடுக்கப் பிரிட்டிஷ் அரசாங்கம் அடக்குமுறைகளைக் கையாண்டது.

1909-இல் லகு அபிநவ பாரத்மேளா என்ற கவிதைக் கொத்தைப் பிரசுரித்ததற்காக விநாயக் சாவர்க்கரின்

அண்ணாவான கணேஷ் சாவர்க்கரைக் கைது செய்தார்கள். தமது புத்தகத்தின் மூலம் ராஜத்துவேஷப் பிரசாரம் செய்ததாக அவர் மீது அவர்கள் குற்றம் சாட்டி வழக்குத் தொடர்ந்தார்கள். பாபா ஸாஹேப் என்ற கணேஷ் சாவர்க்கருக்கு 1909 ஜூன் 9-ஆம் தேதி நீதிபதி தீவாந்தர தண்டனை விதித்தார். இந்த விஷயம் லண்டனில் இருந்த விநாயக் சாவர்க்கருக்குத் தந்தி மூலம் உடனே எட்டியது.

விஷயம் அறிந்த நண்பர்கள் மிகவும் கலங்கினார்கள். பொறிஇயல் கல்லூரி ஒன்றில் படித்து வந்த பஞ்சாபி மாணவனான மதன்லால் திங்க்ரா என்பவன் லண்டனில் இந்தியா மாளிகையில் இருந்த ஒருவன். பாபா ஸாஹேப்புக்கு இழைக்கப் பெற்ற கொடுமைக்குப் பழிக்குப் பழி வாங்க அவன் துடித்தான். 1909 ஜூலை 1-ஆம் தேதி லண்டன் இம்பீரியல் இன்ஸ்டிட்யூட் கூடத்தில் நிகழ்ந்த சொற்பொழிவு ஒன்றுக்குச் சென்றான். அந்தக் கூட்டத்துக்கு தலைமை வகித்த கர்னல் ஸர் வில்லியம் கர்ஸான் வில்லி என்ற ஆங்கிலக் கனவானையும் (அவர் இந்திய அரசாங்கத்தில் பெரிய பதவி வகித்து வந்தவர்), அவரைக் காக்க முயன்ற ஆங்கிலோ பார்ஸி கனவானான டாக்டர் கவாஸ் லாலாகாகா என்பவரையும் கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொன்றான். உடனே மதன்லால் திங்க்ராவைப் போலீஸார் கைது செய்தார்கள். அவனிடமிருந்து இரண்டு கைத்துப்பாக்கிகள், ஒரு சிறிய கத்தி, ஓர் ஈட்டி இவற்றைக் கைப்பற்றினார்கள். மதன்லால் திங்க்ராவைப் பிரிக்ஸ்டன் சிறையில் காவலில் வைத்தார்கள்.

திங்க்ராவின் செய்கை லண்டன் மாநகரையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. தங்களை மன்னிக்க வேண்டும் என்று கோரித் திங்க்ராவின் தந்தையும் சகோதரனும் மார்லி பிரபுவுக்கு ஒரு மனு எழுதினார்கள் : திங்க்ராவின் உறவுக்கும் எள்ளும் தண்ணீரும் தெளித்துவிட்டார்கள்.

திங்க்ராவின் வழக்கு விசாரணை, வெஸ்ட்மின்ஸ்டர் கோர்ட்டில் நடந்தது. சற்றும் தடுமாற்றமில்லாமல் கம்பீரமாகத் திங்க்ரா, தேச பக்தியுள்ள பாரத நாட்டு இளைஞர்கள் மீது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பிரயோகிக்கும் கொடுமைகளுக்குப் பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்துடன்தான் அன்று அந்த ஆங்கிலேயனின் ரத்தத்தைச் சிந்தி என் வெறியைச் சற்றே தணித்துக் கொண்டேன் என்று கூறினான்.

திங்க்ராவின் அஞ்சா நெஞ்சத்தையும், கம்பீரத் தோற்றத்தையும் கண்டு ஆனானப்பட்ட மாஜி பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சிலே வியப்பில் ஆழ்ந்து போற்றினாராம். வீரர் திலகமான இளைஞன் திங்க்ராவுக்கு மரண தண்டனை விதித்துவிட்டார்கள்.

கர்ஸான் வில்லியன் கொலையோடு அபிநவ பாரத மண்டல அங்கத்தினர்கள் திருப்தி அடைந்து விடுவதாக இல்லை. பாபா ஸாஹேபுக்குத் தண்டனை வழங்கக் காரணமாயிருந்த அதிகாரிகளில் ஒருவனையாவது சுட்டுத் தள்ளத் துடித்தார்கள். பாபா ஸாஹேபை செஷன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பி வைத்த நாஸிக் நகர ஜில்லா கலெக்டரான ஏ.எம்.டி.ஜாக்ஸன், ஐ.சி.எஸ்., என்ற ஆங்கிலேயர் அவர்களுடைய இலக்கில் விழுந்துவிட்டார்.

ஜில்லா கலெக்டர் ஏ.எம்.டி.ஜாக்ஸனைக் கொல்லத் தீர்மானித்ததும், அந்தப் பணியைச் செய்ய இளைஞனான ஆனந்த கண்ணாரே என்பவனை அபிநவ பாரத மண்டலம் தேர்ந்தெடுத்தது. ஔரங்காபாதிலே தன் சிறிய தகப்பனாருடன் தங்கியிருந்து உள்ளூர்ச் சித்திரப் பள்ளிக்கூடம் ஒன்றில் ஆனந்த கண்ணாரே பயின்று வந்தான். ஏறக்குறைய பதினெட்டுப் பிராயமாகியிருந்த சுந்தர ரூபனான இந்த இளைஞன் அஞ்சாநெஞ்சம் படைத்தவன்.

புகழ் பெற்ற மராட்டி மொழி நாடகமான சாரதாவைப் பார்க்க நாஸிக் விஜயானந்த தியேட்டருக்கு கலெக்டர் ஜாக்ஸன்

வரும்போது தக்க தருணம் பார்த்து மறைந்திருந்து அவரைச் சுட்டுக் கொன்றுவிடுவது என்று திட்ட மிட்டார்கள். திட்டப்படியே 1909 டிசம்பர் 23-ஆம் தேதி ஆனந்த கண்ணரே பலமுறை துப்பாக்கியால் சுட்டு ஜாக்ஸனைக் கொலை செய்துவிட்டான். பின்பு தன்னையே சுட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொள்ள அவன் முயன்ற போது, போலீஸார் வந்து பிடித்துப் பலவந்தமாகத் தடுத்துவிட்டார்கள்.

ஜாக்ஸனைக் கொன்று அரசருக்கு எதிராக மக்களைத் தூண்டிவிட்டுக் கலகம் செய்ய முயன்றதற்காக ஆனந்த கண்ணாரே உள்பட ஏழு இளைஞர்களைக் கைது செய்தார்கள். பம்பாய் ஹை-கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார்கள்.

இந்த வழக்கில் ஐரோப்பிய நீதிபதிகள் உள்படப் பல உள்ளூர்ப் பிரமுகர்களும் விசாரணையின் போது தீவிர அக்கறை காட்டினார்கள். அவர்களுள் ஜயகர், சர் வாலன்டைன் சிரால் ஆகிய இருவரும் பின்னாளில் எழுதிய தங்கள் புத்தகங்களில் ஆனந்த கண்ணாரேயின் தீரத்தையும், விசாரணையின்போது அவன் காட்டிய நிதானத்தையும் வெகுவாகப் புகழ்ந்திருக்கிறார்கள். ஓர் ஆங்கில நீதிபதி, என்ன பரிதாபம். இவ்வளவு அழகும் வீரமும் கொண்ட இந்த இளைஞனை மரண தண்டனைக்குள்ளாக்க நேர்ந்து விட்டதே என்று மனம் நெகிழ்ந்து கூறினாராம்.

ஆனந்த கண்ணாரே, கார்வே, தேஷ்பாண்டே என்ற மூவருக்கும் தூக்குத் தண்டனை விதித்தார்கள். இந்தத் தண்டனையை 1910 ஏப்ரல் 9-ல் நிறைவேற்றிவிட்டார்கள். மீதிக் குற்றவாளிகளுக்கு வெவ்வேறு கால அளவுக்கு கடுங்காவல் தண்டனை விதித்தார்கள். தூக்குத் தண்டனையை நிறைவேற்ற வேண்டிய நாளில் காலையில் ஆனந்த கண்ணாரேயின் அறைக்குள் அதிகாரிகள் நுழைந்த போது அவன் அங்கே எந்தவிதக் கவலையும் இல்லாமல் நிச்சலமான முகத்துடன் ஆழ்ந்த

நித்திரையில் இருக்கக் கண்டார்களாம். அவர்களே அவனைத் தட்டி எழுப்பினார்களாம்.

ஜாக்ஸனின் கொலை வழக்கில் புலன் விசாரணை நடந்த போது, பம்பாய்ப் போலீஸாருக்கு ஒரு விஷயம் தெரியவந்தது; இந்தியாவில் நடந்த பயங்கர நிகழ்ச்சிகளுக் கெல்லாம் லண்டன் இந்தியா மாளிகையில் இருந்த விநாயக் சாவர்க்கரின் தலைமையே மூலம் என்று அவர்கள் அறிந்தார்கள். சதுர்ப்புஜ அமீன் என்பவனிடம் இருபது துப்பாக்கிகளை விநாயக் சாவர்க்கர் கொடுத்தாராம். அவற்றை இந்தியாவுக்கு அவன் கடத்தி வந்தானாம். அவற்றுள் ஒன்றுதான் ஆனந்த கண்ணாரேயிடம் கைப்பற்றியது. இந்த முக்கியமான தகவல் போலீஸாருக்குக் கிடைத்துவிட்டது.

சதுர்ப்புஜ அமீன் இந்தியா மாளிகையில் ஒரு பரிசாரகனாகப் பணியாற்றி வந்தான். 1909 மார்ச் மாதத்தில் அவன் இந்தியாவுக்கு வந்தபோது, சுங்க அதிகாரிகளை எப்படியோ ஏமாற்றித் தனது சாமான்களுள் இவற்றைத் தந்திரமாக ஒளித்து வைத்துக் கடத்தி வந்துவிட்டான். உடனே போலீஸார் சதுர்ப்புஜ அமீனைக் கைது செய்து மூன்றாம் தரத்து மரியாதைகள் மூலம் அவனைத் தம் வழிக்குக் கொண்டு வந்துவிட்டார்கள். அவர்கள் செய்த சித்திரவதையைத் தாங்க இயலாமல் போன சதுர்ப்புஜ அமீன் அப்ரூவராக மாறினான் ; சாவர்க்கருடன் இந்தியாவில் தொடர்பு வைத்துக் கொண்டிருந்த தேசபக்தர்களைப் பற்றிய முக்கியமான தகவல்களை வெளியிட்டுவிட்டான்.

அவற்றின் உதவியால் தீவிர மனித வேட்டையில் இறங்கிய பம்பாய்ப் போலீஸார் ஏறக்குறைய ஐம்பது பேரைக் கைது செய்தார்கள். போலீஸாரின் ஈவிரக்கமற்ற பயங்கரச் சித்திரவதைக்குப் பலர் வளைந்து கொடுக்கவில்லை. ஆயினும், காஷிநாத் அங்குஷ்கர், தத்தாரேய ஜோஷி, குல்கர்னி என்ற மூவர்

மட்டும் அப்ரூவர்களாக மாறித் தம் தலைவருக்குத் துரோகம் இழைக்க இணங்கிவிட்டார்கள்.

இவர்களுடைய வாக்குமூலத்தை ஆதரவாகக் கொண்டு மகாராஷ்டிர அபிநவ பாரத்தின் மீது ஒரு வழக்கைப் போலீஸார் பதிவு செய்தார்கள். ஆனால் அவர்களுடைய குறிக்கோள் எல்லாம் எப்படியாவது விநாயக் சாவர்க்கரைத் தங்கள் வலையில் சிக்க வைத்துப் பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே. அது அவ்வளவு எளிய காரியமாக இல்லை ; ஏனென்றால், குறிப்பிட்ட சம்பவங்கள் நிகழ்ந்த போது, சாவர்க்கர் லண்டனில் இருந்தார். எனவே, சம்பவம் நடந்த இடத்தில் தாம் இல்லாததால் அதில் தமக்குச் சம்பந்தம் இல்லை என்று அவர் வாதாட முடியும்.

ஆயினும் மற்றொரு பயங்கர சம்பவம் நிகழ்ந்துவிட்டது. 1909 நவம்பரில் அகமதாபாத்துக்கு வைஸிராய் மிண்டோ பிரபு பயணமானார். அவரும் அவருடைய மனைவியும் வண்டியில் செல்லும் போது கூட்டத்திலிருந்து யாரோ அந்த வண்டி மீது சில வெடிகுண்டுகளை வீசி எறிந்தார்கள். அவற்றைப் பரீட்சை செய்ய ஓர் ஆள் முயன்ற போது ஒரு குண்டு அந்த ஆள் மீதே வெடித்துவிட்டது. இதன் பயனாக உடனே ஸாவர்க்கரைக் கைது செய்யும்படி லண்டன் போலீஸாருக்குப் பம்பாய்ப் போலீஸார் ஒரு வாரண்ட் அனுப்பிவிட்டார்கள்.

ஆனால் அந்தச் சமயம் சாவர்க்கர் பாரிஸுக்குச் சென்றிருந்தார். தாதாபாய் நௌரோஜியின் பேத்தியான குமாரி பரீன் கப்தனுடன் சாவர்க்கர் 1910 மார்ச் 13-ல் லண்டன் விக்டோரியா ஸ்டேஷனை அடைந்தவுடனே லண்டன் போலீஸ் அதிகாரிகள் அவரைச் சூழ்ந்து கைது செய்துவிட்டார்கள். அவர் மீது பின்னால் நான்கு குற்றங்களைச் சாட்டினார்கள்.

1. பிரிட்டிஷ் அரசுக்கு அல்லது அரசரின் பிரதிநிதியான இந்திய வைஸிராய்க்கு எதிராகக் கலகம் விளைவித்துப்

போரிடவோ, கலகக்காரர்களுக்கு உதவி செய்யவோ முயன்று உதவியது.

2. கலெக்டர் ஏ.எம்.டி.ஜாக்ஸனைக் கொலை செய்வதற்குத் திட்டமிட்டு, அதற்காகப் போர்க்கருவிகளை (லைசென்ஸ் இல்லாமல்) ரகசியமாகத் தயாரித்து அனுப்பியது.

3. இந்தியாவிலிருந்த கலகக்காரர்களுக்கு லண்டனிலிருந்து அப்போதப்போது துப்பாக்கி, வெடிகுண்டு, ஆட்சேபகரமான பயங்கரப் போர்க் கருவிகளைக் கள்ளத்தனமாக அனுப்பி வந்தது.

4. மக்கள் வீறு கொண்டு எழும் வகையில் ஆட்சேபகரமான, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எதிரான பிரசங்கங்களை இந்தியாவில் 1906 ஜனவரி முதல் மார்ச் வரையிலும், லண்டனில் 1908-1909-லும் செய்தது.

சாவர்க்கரைக் கைது செய்த பிரிட்டிஷ் போலீஸார் அவரை ஜாமீனில் விடுவிக்க மறுத்துவிட்டு பிரிக்ஸ்டன் ஜெயிலுக்கு அனுப்பிவிட்டார்கள்.

சாவர்க்கர் மீது வழக்கை இந்தியாவில் நடத்துவதா அல்லது லண்டனில் நடத்துவதா என்பதைப் பற்றி சர்ச்சை நடைபெற்றது என்றாலும், வழக்கை முதலில் லண்டனில் தான் நடத்தினார்கள். ஸர் ரூஃபஸ் ஐஸாக் (பின்னாளில் ரீடிங் பிரபு), எஸ்.ஏ.டி.ரௌலத் (இவர் பின்னாளில் தமது அபத்தமயமான ரௌலத் ரிபோர்ட்டால் பலத்த அபக்கியாதி அடைந்தவர்) இருவரும் சர்க்கார் தரப்பில் வழக்காடினார்கள். வந்தேமாதரம் கீதத்தைப் பாடுவதே ராஜத் துவேஷக் குற்றம் என்று அழுத்தந்திருத்தமாக ரூஃபஸ் தமது வாதத்தில் குறிப்பிட்டார். ஆனால் சீமைப் பிரதம நீதிபதி இந்த வாதத்தை ஒப்புக் கொள்ளவில்லை ; ஒரு நாட்டு மக்கள் தங்கள் தாய்நாட்டு விடுதலையைப் பற்றித் தங்களுக்குள் விவாதிப்பதோ, தங்கள்

நாட்டைப் புகழ்ந்து பாடுவதோ ராஜத் துவேஷம் ஆகாது என்று கூறிவிட்டார். நீதிபதியின் இந்த வாதம் பிரிட்டிஷ் சர்க்காருக்கு ஏமாற்றம் அளித்தது. எனவே, குறிப்பிட்ட சம்பவங்கள் நிகழ்ந்த போது சாவர்க்கர் லண்டனில் இருந்தாலும் அவை இந்திய நாடு சம்பந்தப்பட்டவையே என்று காரணம் சொல்லி வழக்கை இந்தியாவிலேயே நடத்துவது என்று ஏகமனதாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தீர்மானித்தார்கள். இது வெறும் கண்துடைப்பே. ஆகவே, சாவர்க்கரின் வக்கீல் சமர்ப்பித்த அப்பீலையும், சாவர்க்கர் தமது வழக்கை இங்கிலாந்திலேயே நடத்த வேண்டும் என்று செய்து கொண்ட விண்ணப்பத்தையும் அரசாங்கம் நிராகரித்துவிட்டது.

லண்டனில் சாவர்க்கர் கைதானார் என்று கேள்விப்பட்டதுமே, ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் அவருடைய புரட்சி நண்பர்கள் எப்பாடு பட்டாவது அவரைப் போலீஸ் பிடியிலிருந்து தப்புவிக்கத் தீவிரமாக முயன்றார்கள். சாவர்க்கரைக் கோர்ட்டுக்கும் சிறைச் சாலைக்கும் வழக்கமாகச் சுமந்து சென்ற பிளாக் மரியா என்ற போலீஸ் வானை வழிமறித்து அவரைக் கடத்திச் செல்லப் புரட்சி வீரர்கள் திட்டமிட்டிருந்தது எப்படியோ வெளியாகிவிடவே, போலீஸார் உஷாராகிப் பாதுகாப்பை மேலும் பலப்படுத்தினார்கள். மற்றொரு முறை சிறைச் சாலையிலிருந்து சாவர்க்கரைக் கடத்தும் முயற்சியும் வியர்த்தமாயிற்று.

இந்த முயற்சிகளையெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கம் நன்றாக அறிந்திருந்ததால், சாவர்க்கரைக் கப்பலில் பிற பிரயாணிகளைப் போல் கலே வழியாக இந்தியாவுக்கு அழைத்து வராமல், நேரே லண்டனிலிருந்து மார்ஸெய்ல்ஸ் வழியாகப் பம்பாய்க்கு எஸ்.எஸ்.மோரியா என்ற கப்பலில் அழைத்து வரத் தீர்மானித்தது.

கலே நகரில் இந்தியப் புரட்சி வீரர் பலர் தலைமறைவாகப் பதுங்கியிருந்ததால், சாவர்க்கர் எப்படியாவது தப்பிவிடக் கூடும் என்று பிரிட்டிஷ் சர்க்கார் ஊகித்தது.

இறுதியாகத் தம்மை இந்தியாவுக்கு வழக்கு விசாரணைக்கு அனுப்பிவிடுவது நிச்சயமானதும் சாவர்க்கருக்குத் தமது முடிவைப் பற்றித் தெரிந்துவிட்டது. ஆகவே, தம் சகாக்களிடம் பிரியாவிடை பெற்றுக் கொள்ள விரும்பினார் ; கொந்தளிக்கும் தம் உள்ளத்தின் எண்ண அலைகளை எழுத்தோவியமாக வடித்து அவர்களுக்கு அனுப்பினார். நெஞ்சைத் தொடும் அந்தக் கடிதத்தின் சில வரிகள் இவை :

கற்பனையில் வடித்த அமர நாடகங்களில் எல்லாப் பாத்திரங்களும் - இறந்துவிட்டவரும், வாழ்பவரும் - ஒருங்கே ஒருசில காட்சிகளில் ஒன்று கூடுவதை நாம் பார்த்திருக்கிறோம். அதுபோலவே, நண்பர்களே, அந்த மாதிரி எண்ணிக்கையில் அடங்காத பாத்திரங்களான நாம் - உலக அரங்கிலே நாடகம் ஆடும் பாத்திரங்களான் நாம் - சரித்திரம் என்னும் காட்சியிலே, மக்கள் என்னும் பார்வையாளர்கள் முன்னிலையிலே, ரஸிகர் குழாமிடத்திலே, ஒருமுறையாவது நிச்சயம் சந்திப்போம். மக்களான ரஸிகர் குழாம் அந்த வேளையில் தங்கள் உணர்ச்சிகளை வெளியிடுவதை மக்களின் எதிரொலிகளி லிருந்தும், நதிகளின் நீரோட்டத்திலிருந்தும் நிச்சயம் கண்டு களிப்போம்... வருகிறேன். அந்தோ. என் அருமை தோழர்களே, நான் விடைபெற்றுக் கொள்கிறேன். விடை தாருங்கள்.

இந்தத் தாழ்மையான மனிதப் பிறவியின் அஸ்தி எங்கே இடம் பெறுமோ அறியேன் ... ஆனால், கண்ணீரால் கழுவப் பெற்ற அந்தமான் தீவிலோ ... புனிதமே உருவான கங்கையின் பிரவாகத்திலோ ... எங்கே இருந்தாலும் நிச்சயம் ஒருநாள் - பாரத அன்னையின் அடிமைத்தளை அகன்று விழும் புனித தினத்தன்று - இந்த நீறுபூத்த நெருப்பான அஸ்தியிலிருந்தும் அக்கினிச்

சுவாலை கொழுந்து விட்டு எரிந்து ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் புனித ராமராஜ்யத்தின் கீர்த்தியைக் கொண்டாடும். பாரத அன்னையைப் பீடித்திருக்கும் சைத்தான் எங்கேயிருந்து வந்ததோ அங்கே நிச்சயம் திரும்பிச் சென்றுவிடும் காலம் நெருங்கிவிட்டது. அதோ என் கண் முன்னே நான் காண்பது என்ன? ... அன்னை பாரத தேவி - பவித்திர தேவி - வெற்றிப் புன்னகையோடு நிற்கிறாள் போல் தெரிகிறதே. தாய்க்காக, பாரதத் தாய்க்காகப் பலியான வீரர்களே, யோகிகளே, சாதுக்களே, எழுங்கள். கண்ணாரக் கண்டு மகிழுங்கள். நீங்கள் நடத்திய போரில் வெற்றி கண்டுவிட்டீர்கள். பகைவனை வென்று தாயின் விலங்குக்ளை அறுத்துவிட்டீர்கள்.

வருகிறேன். அந்தோ. என் அருமைத் தோழர்களே, நான் விடைபெற்றுக் கொள்கிறேன். விடை தாருங்கள்.

1910 ஜூலை 1-ஆம் தேதி சாவர்க்கரை ஏற்றிக் கொண்டு எஸ்.எஸ்.மோரியா லண்டன் துறைமுகத்திலிருந்து பயணம் ஆயிற்று. சாவர்க்கரைப் பல ஆங்கில போலீஸ் அதிகாரிகள் துப்பாக்கி முனையில் பலமாகக் காவல் காத்தார்கள்.

கப்பலில் சாவர்க்கரை நன்றாகவே நடத்தினார்கள். என்றாலும், அவருடைய சிந்தனையெல்லாம், இந்தக் கழுகுக் கண் பைசாசங்களின் பிடிக்கு எப்படி டிமிக்கி, கொடுத்துத் தப்புவது என்பதே.

மார்ர்ஸெய்ஸ் நகரில் சொற்ப நேரமே கப்பல் நிற்கும் போது தாம் தப்பித்துக் கொண்டுவிட முன்கூட்டியே தந்திரமாகத் திட்டமிட்டிருப்பதைப் பற்றி, வ.வே.சு.ஐயருக்கும் காமா அம்மையாருக்கும் சாவர்க்கர் தகவல் அனுப்பியிருந்தார். மார்ஸெய்ஸ் நகரை அடையச் சில மணி நேரத்துக்கு முன்னால் ஒருமுறை கப்பலின் ஆட்டத்தினால் தவறி விழுந்துவிட்டது போல் பாவனை செய்து கப்பலின் போர்ட் ஹோலை மானசிகமாக அறிந்து கொண்டார். (கப்பல் கட்டியிருக்கும்

மரத்தில் அங்கங்கே காற்றுக்காகச் சிறுசிறு துவாரங்கள் இருக்கும். அவற்றைப் போர்ட் ஹோல் என்பார்கள்.) பிரிட்டிஷ் அரசாங்கமும் முன்னெச்சரிக்கை யாகவே பிரெஞ்சு அரசாங்கத்துக்கு, எஸ்.எஸ்.மோரியாவில் ஒரு பயங்கரக் கைதியை இந்தியாவுக்குக் கொண்டு செல்கிறோம். மார்ஸெய்ஸ் துறைமுகத்தில் தப்பித்துக் கொள்ள அவன் முயலலாம். ஆகவே, பிரெஞ்சுப் போலீஸும் உஷாராக இருக்க வேண்டும் என்று செய்தி அனுப்பியிருந்தது.

ஜூலை 8-ஆம் தேதி காலையில் சாவர்க்கர் தம் காவல்காரனிடம் தம்மைக் கப்பலில் கழிவிடத்துக்கு அழைத்துச் செல்லக் கேட்டுக் கொண்டார். 7 மணிக்கு ஓர் ஆங்கில அதிகாரி அவரை அங்கே அழைத்துச் சென்றதும், சாவர்க்கர் தாம் தமது துவாலையை மறந்துவிட்டதாகவும், அதைத் தயை செய்து எடுத்துத் தரும்படியும் பணிவோடு கேட்டுக் கொள்ளவே, அந்த அதிகாரி சாவர்க்கரை ஓர் இந்தியப் போலீஸ் அதிகாரியின் கண்காணிப்பில் விட்டுவிட்டுத் துவாலையை எடுத்து வர சென்றார். சாவர்க்கர் உடனே கழிவிடத்துக்குச் சென்று கதவைச் சார்த்தி உட்புறம் தாழிட்டுக் கொண்டார். அந்த இந்தியப் போலீஸ் அதிகாரி ஐயத்துடன் சாவித் துவாரத்தின் வழியே உட்புறம் நோக்கினார். அப்போது போர்ட் ஹோல் மூலம் கைதி சாவர்க்கர் வெளியேறித் தப்ப முயற்சி செய்வதைக் கண்டார். அந்தக் கணமே பலத்த கூக்குரலிட்டுப் பிரயாணிகளைக் கூட்டுவதற்குப் பதிலாக மதியீனமாய்க் கதவை உடைப்பதில் ஈடுபட்டுவிட்டார். ஆனால், கதவை உடைத்துக் கொண்டு உள்ளே அவர் நுழைவதற்குள் சாவர்க்கர் தப்பிவிட்டார்.

முப்பத்தாறு அங்குலம் மார்புச் சுற்றளவு (ஏறக்குறையப் பதினெட்டு அங்குலம் குறுக்களவு) கொண்ட சாவர்க்கர் பன்னிரெண்டு அங்குலம் விட்டம் (Diameter) உடைய சிறிய வட்ட வடிவமான போர்ட் ஹோல் வழியாக உடலைப் பல

இடங்களில் சிராய்த்துக் கொண்டும் புண்ணாக்கிக் கொண்டும் வெளியேறிக் கடலில் குதித்து நீந்திச் சென்று பிரெஞ்சு நாட்டுக் கடற்கரை மண்ணை அடைந்த போது இரண்டு ஆங்கில உளவர்கள் தம்மைப் பின்தொடர்வதைக் கண்டார்.

பாவம். உடல் வாதனையையும் பொருட்படுத்தாமல் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு சுமார் ஐநூறு கஜம் ஓடிய சாவர்க்கரைப் பிரெஞ்சுப் போலீஸ் காவல் அதிகாரி ஒருவர் பிடித்துவிட்டார். இதற்குள் பிரிட்டிஷ் போலீஸ் காரர்களும் வந்து சேரவே, சாவர்க்கரை அவர்கள் மிகவும் கீழ்த்தரமான முறையில் கழுத்தில் கையை வைத்துப் பிடித்து நெட்டித் தள்ளிக் கொண்டு ஏளனமாகப் பேசியபடி கப்பலுக்கு அழைத்துச் சென்றார்கள்.

சாவர்க்கர் துரதிர்ஷ்டம் பிடித்தவர் என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால், சில நிமிஷ நேரம் தாமதமாக வர நேர்ந்த வ.வே.சு.ஐயரும், காமா அம்மையாரும் சாவர்க்கர் பிடிபட்டுவிட்டதைக் கண்ணாரக் கண்டு வெதும்பினார்கள். காமா அம்மையார் அங்கேயே மனம் வெடித்துக் கண்ணீர் பெருக்கிவிட்டார். பாம்பின் வாய்க்குள் தேரை போயாயிற்று? இனி தப்ப முடியுமா?

சாவர்க்கரைக் கப்பலுக்கு மீண்டும் அழைத்துச் சென்றதும் அவரிடம் போலீஸார் கடுமையாக நடந்து கொண்டார்கள். முன்பு அவருக்கு மனமுவந்து அளித்திருந்த சில சலுகைகளை ஈவிரக்கம் இல்லாமல் மறுத்து விட்டார்கள்.

மார்க்ஸெய்ல்ஸ் நகரில் சாவர்க்கர் தப்பியதும் மீண்டும் பிடிபட்டதும் பற்றி டெய்லி மெயில் பத்திரிகையின் பாரிஸ் பதிப்புக்கு உடனே செய்தி எட்டி அதில் பிரசுரம் ஆயிற்று. புகழ் பெற்ற கார்ல்மார்க்ஸின் பேரன் பதிப்பித்த ஸோஷலிஸ்ட் பத்திரிகையான லூ மினட் (Lhumanite) என்ற பத்திரிகைக்கும்

சாவர்க்கரின் முயற்சிகளைப் பற்றி விவரமாக டெலிஃபோன் மூலம் வ.வே.சு.ஐயர் அறிவித்தார். சூட்டோடு சூடாகக் காமா அம்மையார், வ.வே.சு.ஐயர், ஷியாம்ஜீ கிருஷ்ண வர்மா, மற்றும் பல இந்தியப் புரட்சி வீரர்கள் இவர்களெல்லாம் பிரெஞ்சு சோஷலிஸ்ட் தலைவரும் மார்செய்ல்ஸ் நகர மேயருமான எம்.ஜாரங் என்பவரைப் பேட்டி கண்டார்கள்.

ஜூலை 12-ம் தேதி லூ மினட் எழுதியது ; ஓர் அரசியல் அகதி (Refugee) எந்த நாட்டுக்குள் தப்பி ஓட முயன்றானோ அந்த நாட்டு மண்ணை அவன் மிதித்துவிட்டால், அந்த நாட்டுச் சர்க்காரின் அனுமதி இல்லாமல், சட்டத்தை மதிக்காமல் தன் சொந்தப் பொறுப்பில் பேர்லீஸ் காவலன் ஒருவன் மற்றொரு நாட்டு அரசாங்க அதிகாரிகளிடம் அந்த அகதியை ஒப்படைப்பது மிகமிக நேர்மையற்ற தவறான செய்கையாகும்.

இதைத் தவிர, லெக்லேர் (L'Eclaire), லே டேம் (Le Temps) லே மாடின் (Le matin) ஆகிய பிரபல பிரெஞ்சுப் பத்திரிகைகளும் மார்செய்ல்ஸ் போலீஸ் இலாகாவை வன்மையாகக் கண்டித்தன. ஜெர்மனி உள்பட பல ஐரோப்பிய நாடுகளும் இது சம்பந்தமாகப் பிரிட்டிஷ் சர்க்காரைக் குறை கூறின. இறுதியாக, சாவர்க்கர் மீது இந்தியாவில் நடக்க இருக்கும் வழக்கைத் தள்ளிப் போட்டு அவரைப் பிரெஞ்சு அரசாங்கத்திடம் ஒப்படைப்பதே முறை : அதுதான் சரி என்று பல நாடுகள் ஒன்று கூடிப் பிரிட்டிஷ் சர்க்காரைப் பணித்தன.

நிலைமை இப்படிக் குழப்பமாக இருந்ததால், நாட்டில் பிரிட்டிஷ் அரசாங்கம் சாவர்க்கர் மீது தொடர்ந்த வழக்கு விசாரணையைத் தள்ளிப் போடக் கூடும் என்று இந்தியப் பத்திரிகைகள் கூறிய ஹேஷ்யங்கள் அனைத்தும் பொய்த்துவிட்டன. இந்தக் குழப்பத்தையெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கம் லட்சியம் செய்ததாகவே தெரியவில்லை.

சாவர்க்கரை இந்தியாவுக்குக் கொண்டு வந்தவுடனேயே காலதாமதம் இல்லாமல் பம்பாய் ஹை-கோர்ட்டில் செப்டெம்பர் 30-ஆம் தேதி அவர் மீது வழக்கு விசாரணை நடைபெற்றது.

சாவர்க்கரைப் பிரெஞ்சு அரசாங்கத்திடம் ஒப்படைத்தே தீர வேண்டும் என்று ஹாலந்து நாட்டுத் தலைநகரமான ஹேக் நகரில் கூடிய சகல ஐரோப்பிய நாட்டுப் பிரதிநிதிகளும் தீர்மானித்து அந்தத் தீர்மானத்தை அமலாக்க முயன்றார்கள். ஆனால், அதற்குள் இந்தியாவில் சாவர்க்கரின் வழக்கு விசாரணை முடிவுற்றது ; அவருக்கு ஐம்பது வருஷ காலம் தீவாந்தர தண்டனையும் அளித்துவிட்டார்கள்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கெடுபிடியை மீறிப் பிரெஞ்சு அரசாங்கமோ மற்ற ஐரோப்பிய நாடுகளோ ஏதும் செய்ய இயலவில்லை. இறுதியாக 1911 பிப்ரவரி ஹேக் சர்வதேசக் கோர்ட்டுக்கு வேறு வழி இல்லாமல் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்துவிட்டது.

ஆனால், இந்த நியாயமற்ற தீர்ப்பைப் பிரிட்டிஷ் பத்திரிகைகளே வன்மையாகக் கண்டித்து எழுதின. இந்தத் தீர்ப்பை எதிர்த்துப் பிரெஞ்சு நாட்டுப் பிரதம மந்திரி எம்.பிரியண்ட் மூன்றே தினங்களில் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். ருஷிய நாட்டிலும் பல எதிர்ப்புகள் பகிரங்கமாக நடைபெற்றன. ஆனால் இவற்றால் பலன் ஏதும் கிடைக்கவில்லை. சாவர்க்கர் மீது இந்தியாவில் நடந்த வழக்கு நியாயமானது என்ற எண்ணமே மொத்தத்தில் பரவிவிட்டது.

சாவர்க்கரை டோங்கலிச் சிறையில் கடுங்காவலில் அதிகாரிகள் வைத்தார்கள். அவரது மூக்குக் கண்ணாடி உள்பட ஸ்தாவரச் சொத்துப் பத்துக்கள் அனைத்தையும் அரசாங்கம் பறிமுதல் செய்துவிட்டது. இரண்டு குற்றங்களுக்காகத் தனித்தனி இருபத்தைந்து ஆண்டுகள் வீதம் ஒன்றன் பின்

ஒன்றாகச் சிறையில் சாவர்க்கர் கழிக்க வேண்டும் என்று நீதிபதி தீர்ப்பளித்துவிட்டார்.

சாவர்க்கர் மீது இரண்டு வழக்குகள் தொடர்ந்தார்கள். முதல் வழக்கில் அவரும் அவருடன் முப்பத்தாறு நபர்களும் ஒன்று கூடி மன்னர் பிரானுக்கு எதிராக யுத்தம் செய்ய ஆயத்தமானதாகக் குற்றம் சாட்டப்பட்டார்கள். இரண்டாவது வழக்கில், நாஸிக் கலெக்டர் ஜாக்ஸனைக் கொலை செய்யத் திட்டமிட்டதாகச் சாவர்க்கர் மீது குற்றம் சுமத்தினார்கள்.

பாரதத்தை உலுக்கிய சதி வழக்குகளில் ஒன்றான இந்த வழக்கின் விசாரணை 1910 அக்டோபர் 6-ஆம் தேதி தொடங்கியது. முதலில் சாவர்க்கர் தாம் பிரெஞ்சு நாட்டு மண்ணில் இருந்த போது சட்டத்துக்குப் புறம்பான வகையில் (Fugitive offender's Act-1881) பிரிட்டிஷ் அரசாங்கம் தம்மைக் கைது செய்ததாகவும், மேலும் தம்மைப் பற்றி விவாதம் தி ஹேக் நகரில் சர்வதேசப் பிரதிநிதிகள் இடையே நடைபெற்று வருவதாகவும், தம்மீது அந்தச் சமயம் வழக்கு விசாரணை நடத்த அரசாங்கத்துக்கு உரிமையே இல்லை என்றும் வாதித்தார். ஆனால் அவருடைய நியாயமான வாதங்களைக் கோர்ட்டு நிர்த்தாட்சிண்ணியமாக ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது.

சாவர்க்கரின் சார்பில் வாதாட ஜோஸஃப் பாப்டிஸ்டா என்னும் பிரபல வழக்கறிஞரைக் காமா அம்மையார் அமர்த்தியிருந்தார். இந்த வழக்கில் அப்ரூவராக மாறிய காசிநாத் அங்குஷ்கர், தத்தாத்ரேய ஜோஷி, குல்கர்னி, சதுர்ப்புஜ அமீன் ஆகிய நால்வரும் .விரிவாகச் சாவர்க்கரின் சதித் திட்டங்களை வெளியிட்ட புண்ணியத்தைத் தேடிக் கொண்டார்கள். இறுதியாகப் பிரதம நீதிபதி ஸர் பேஸில் ஸ்காட், மற்ற நீதிபதிகள் ஸர்.என்.ஜி.சந்தவர்க்கர், ஜஸ்டிஸ் ஹீட்டன் இந்த மூவரும் சாவர்க்கர் ஐயத்துக்கு இடமில்லாமல் குற்றவாளி என்று நிரூபணமாகிவிட்டதாகக் கூறித் தங்கள் பயங்கரமான தீர்ப்பை

வெளியிட்டார்கள். மற்ற 36 நபர்களில், 11 நபர்களைக் குற்றவாளிகள் என்று நிரூபிக்கப் போதுமான ருசுக்கள் இல்லை என்று விடுதலை செய்தார்கள். மிஞ்சிய 25 நபர்களுக்கு வெவ்வேறு கால அளவுக்குச் சிறைத் தண்டனை விதித்தார்கள்.

தீர்ப்பை நீதிபதிகள் வழங்கியதும், வீரர் திலகமான சாவர்க்கர் சற்றும் தடுமாறாமல் கம்பீரமாக, தாய்நாட்டு விடுதலைக்கு நான் பாடுபட்டதற்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எனக்கு அளித்த பரிசாகவே நினைத்து, மிகவும் மகிழ்ச்சியுடனேயே இந்தத் தண்டனையை ஏற்றுக் கொள்கிறேன். ஏன் தெரியுமா? பாரத மக்கள் பலர் அரும்பாடுபட்டுப் பல இன்னல்களுக்குள்ளான பின்னால்தான் எங்களுடைய அருமைத் தாய்நாடு சுதந்தரம் அடையும் என்று நான் பரிபூர்ணமாக நம்புகிறேன் என்று கூறினார்.

நீதிபதிகள் தீர்ப்பை அளித்ததும் ஒரு பிரிட்டிஷ் அதிகாரி, ஏளனமாகச் சாவர்க்கரை நோக்கி, தோழனே, அப்பனே, கவலைப்படாதே. நிச்சயம் 1960-ஆம் ஆண்டு உன் தண்டனைக் காலம் முடிந்ததும் பிரிட்டிஷ் அரசாங்கம் உன்னை விடுவித்துவிடும். அதற்குப் பின் உன் தாய்நாட்டு விடுதலைக்கான வீரச் செயல்களில் நீ ஈடுபடலாம் என்று கூறினான். அப்போது சற்றும் கலக்கம் இல்லாமல் சாவர்க்கரும் அதே ஏளனப் புன்னகையுடன் அவனை நோக்கி, தோழனே, கனவு காண்கிறாயா? பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன சாசுவதம் என்றா நினைக்கிறாய்? இன்னும் ஐம்பது ஆண்டுகள் வரையில் அது பாரத நாட்டில் நிலைக்கப் போகிறதா? என்று கூறினார். அவருடைய தீர்க்க தரிசனம் எவ்வளவு வியப்புக்கு உரியது.

சாவர்க்கரை அந்தமான் தீவுக்கு அரசாங்கம் அனுப்பிப் பழி தீர்த்துக் கொண்டது. அங்கே தாம்பட்ட கொடுமைகளை தம் சுயசரிதையில் விவரமாக அவர் எழுதியிருக்கிறார். அந்தமான் தீவில் எண்ணெய் ஆலைகளில் செக்கு இழுக்கவும், அவரை

நிர்ப்பந்தித்தார்கள் ; தடியால் அடித்தார்கள். பத்தாண்டுக் காலம் நரகத்தில் பல கொடுமைகளை இழைத்த பின்பு சாவர்க்கரை இந்தியாவுக்குக் கொண்டு வந்தார்கள்.

இந்தியாவில் பல ஊர்களில் கடுஞ் சிறைகளில் பல தரப்பட்ட தமது தண்டனைக் காலத்தை அவர் கழித்தார். இவ்வளவுக்கும் பிறகே விடுதலை அடைந்தார்.



# 4. பகத்சிங்கும் இரு தோழரும்

1931-ஆம் ஆண்டு மார்ச் 22-ஆம் தேதியன்று லாகூர் மத்தியச் சிறையின் தூக்குக் கயிற்றிலே தொங்கி மூன்று வீர வாலிபர்கள் மாண்டார்கள். பாரத சுதந்தரப் போராட்டத்தில் அழியா இடம் பெற்றுவிட்டு, என்றென்றும் மறக்க முடியாத நினைத்தாலே உள்ளம் துடிக்க வைத்த - அந்த மூன்று வீரப் புதல்வர்களும் பகத்சிங், சிவராம் ராஜகுரு, சுகதேவ் இவர்களே. அருமைத் தாய்நாட்டின் அடிமைத் தளையை அறுத்து வீசப் புரட்சியில் ஈடுபட்ட மாபெருங் குற்றத்துக்காகவே அந்த நாளைய ஏகாதிபத்தியம் ஈவிரக்கம் இல்லாமல் இந்த வீரக் குழந்தைகளைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டது. ஏகாதிபத்தியத்தின் அட்டூழியத்துக்குப் பகத்சிங்கின் வீரமரணம் ஓரளவில் எல்லைக் கோடாகவே அமைந்தது என்று சொல்லலாம். ஏனென்றால், பகத்சிங்கையும் மிஞ்சிய பாரதப் புரட்சி வீரர்களுக்குக் கூட மரண தண்டனை விதிக்க ஏகாதிபத்தியம் அதன் பின்பு முயலவேயில்லை.

பகத்சிங் பெற்ற தண்டனைக்காகக் கராச்சிக் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் மகாத்மா காந்திக்கே மாணவர்கள் கறுப்புக் கொடி காட்டிக் கறுப்பு மலர் தந்து அவரை வரவேற்றுத் தங்களுடைய அதிருப்தியைப் பகிரங்கமாக வெளியிட்டார்கள்.

வீரன் பகத்சிங்குக்கு மாணவரிடையே அவ்வளவு செல்வாக்கு உண்டாகியிருந்தது. பாவம். காந்திஜி எவ்வளவோ முயற்சி செய்து பகத்சிங்கையும் அவருடைய தோழர்களையும் மரண தண்டனையிலிருந்து மீட்கத்தான் பார்த்தார். ஆயினும் பகத்சிங் ஒழியவே வேண்டும் என்று ஏற்கனவே தீர்மானித்திருந்த ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதிகள் ஒப்புக்காக ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி இறுதியில் தங்கள் மனோரதப்படி நடத்திவிட்டார்கள். ஆனால் உணர்ச்சி வசப்பட்ட வாலிபர்களோ மகாத்மா காந்தியையே குறை கூறினார்கள். மாந்தருக்குள் ஒரு தெய்வமான அந்தப் பெருமான் அதை ஏற்றுக் கொண்டார்.

பகத்சிங் கூட்டத்தினரின் சதித் திட்டங்கள் உருவாவதற்கு மூல காரணம் எது? பாரதம் வீறு கொண்டு எழுந்து எதிர்த்த ஸைமன் கமிஷனேதான். ஏழு ஆங்கிலேயர் அடங்கிய ஸைமன் கமிஷனை அந்த நாளில் இயங்கிய பாரத அரசியல் கட்சிகளுள் எதுவும் ஆதரிக்கவில்லை. 1927 டிசம்பர் மாதம் சென்னையில் டாக்டர் எம்.ஏ.அன்ஸாரி அவர்களின் தலைமையில் காங்கிரஸ் மகாசபை கூடி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. ஸைமன் கமிஷனைத் தீவிரமாகப் பஹிஷ்கரிப்பது என்பதுதான் அந்தத் தீர்மானம்.

ஸர் ஜான் ஸைமனின் தலைமையில் பம்பாயில் 1928 பிப்ரவரி 3-ஆம் தேதி அந்தக் கமிஷனின் குழுவினர் கால் வைத்த போது, நாடெங்கும் ஹர்த்தால் நடைபெற்றது. அந்தக் குழுவினர் எங்கே சென்றாலும், மூலை முடுக்கிலெல்லாங் கூட மக்கள் பெருவாரியாக நின்று கொண்டு, ஸைமன். திரும்பிப் போ (Go Back, Simon) என்று கோஷித்து ஆரவாரம் செய்தார்கள்.

அக்டோபர் 30-ஆம் தேதி ஸைமன் குழுவினர் லாகூருக்கு விஜயம் செய்தார்கள். அங்கே எதிர்ப்புக்கான ஆர்ப்பாட்டங்களை ஏற்கனவே பஞ்சாப் சிம்மம் லாலா லஜபதி

ராய் உருவாக்கியிருந்ததால் ஸைமன் குழுவினர் திக்கு முக்காடிப் போய்விட்டார்கள். போதாததற்கு அலாஹாபாத் என்னும் பிரயாகையிலிருந்து தேச பக்தர் மதன் மோஹன் மாளவியா வேறே ஆர்ப்பாட்டத்தில் பங்கு கொள்ள லாகூருக்கு வந்திருந்தார். அப்புறம் கேட்க வேண்டுமா?

ஏகாதிபத்தியம் தனது நடைமுறை இயல்புக்கேற்ற விதம் போலீஸ் படையைச் செயலில் ஈடுபடுத்தத் தீர்மானித்தது. அப்போது பஞ்சாபில் - குறிப்பாக லாகூரில் போலீஸ் படை அதிகாரிகள் மூன்று பேரும் வெள்ளைக்காரர்களாகவே இருந்தார்கள். ஜில்லா சூப்பரிண்டெண் டெண்டாக ஸ்காட் என்பவரும், அஸிஸ்டெண்ட் சூப்பரிண்டெண்டெண்டாக ஸாண்டர்ஸ் என்பவரும், டெபுடி சூப்பரிண்டெண்டெண்டாக மாரிஸ் என்பவரும் போலீஸ் படையில் பணியாற்றி வந்தார்கள். இவர்கள் மூன்று பேருமே கடுகளவும் ஈவு இரக்கம் என்பதே இல்லாத கல்நெஞ்சர்கள். இவர்களில் குறிப்பாக மாரிஸ் என்னும் அதிகாரி தம்மை ஜாலியன் வாலாபாக்கில் துப்பாக்கிப் பிரயோகம் செய்த ஜெனரல் டயராகவே பாவித்துக் கொண்டு, பஞ்ச நதி பாயும் இந்தப் பூமியில் மீண்டும் ரத்தத்தால் ஹோலி விளையாட இந்த முட்டாள் ஜனங்கள் விரும்புவதைக் கண்டு எனக்கு வியப்பாக இருக்கிறது என்று மமதையோடு கூறினாராம்.

அக்டோபர் மாதம் 30-ஆம் தேதியன்று கறுப்புக் கொடிகள் தாங்கிய பல்லாயிரம் மக்கள் லாகூர்த் தெருக்களில், ஸைமன். திரும்பிப் போ. ஸைமன் திரும்பிப் போ என்று கோஷமிட்டு ஆர்ப்பரித்தார்கள். இந்தக் கூட்டத்தினரை லாலா லஜபதி ராயும், பண்டித மதன்மோஹன் மாளவியாவும் தலைமை தாங்கி நடத்திச் சென்றார்கள்.

அப்போது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. லாலா லஜ்பத் ராய்க்கு முன்பின் அறிமுகமில்லாத ஒரு நபர் வந்தார். ஸைமன் திரும்பிப் போ என்று வெள்ளைச் சாக்பீஸினால் எழுதியிருந்த

ஒரு கறுப்புக் குடையை லஜ்பத் ராயிடம் கொடுத்துவிட்டு மறைந்தார். இதன் மர்மம் பின்னால்தான் வெளியாயிற்று. லாலா லஜ்பத் ராயை அடையாளம் காட்ட ஏகாதிபத்தியத்தின் அநுதாபிகள் செய்த பண்பற்ற செய்கையே அது.

அதிகாரிகளான ஸ்காட்டும் ஸாண்டர்ஸும் போலீஸ் உதவியால் இந்த ஆர்ப்பாட்டத்தைத் தடுத்து நிறுத்தப் பெரிதும் முயன்றார்கள். தடியடிப் பிரயோகமும் பலமாய் நடைபெற்றது. பாவம். லாலா லஜ்பத்ராயை ஈவிரக்கம் இல்லாமல் தடியால் அடித்துத் தாக்கினார்கள். ரத்தக்களரி ஆகிவிட்ட அந்த பஞ்சாப் சிம்மத்தை அப்படியே அன்பர்கள் ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்றார்கள். அப்போதும் அந்த மாபெரும் வீரர் சற்றும் மனங்கலங்காமல், என் மீது விழுந்த ஒவ்வோர் அடியும் பாரதத்தில் ஏகாதிபத்தியத்தின் சவப் பெட்டியில் அடித்துள்ள ஒவ்வோர் ஆணியே ஆகும் என்று கம்பீரமாய்ச் சொன்னார்.

இதற்குச் சில தினங்களுக்குப் பின் லஜ்பத்ராய் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தில் பங்கு கொள்ள டில்லிக்கு வந்தார். தமது மார்பில் போலீஸார் தாக்கிய போது உண்டாகியிருந்த ஆழமான காயத்தை நண்பர்களுக்கு அந்தச் சமயம் அவர் காட்டினார். மூன்று அங்குல நீளமும், ஓர் அங்குல ஆழமும் பதிந்திருந்த அந்த காயத்தைச் சென்னை ஹிந்துப் பத்திரிகையும் கல்கத்தா ஃபார்வோர்டு பத்திரிகையும் போட்டோ எடுத்துப் பிரசுரித்தன.

இதற்குப் பின் 1928 நவம்பர் 17-ஆம் தேதி லாலா லஜ்பத்ராய் இறந்துவிட்டார். அவருக்கு அப்போது வயது 62 தான் ஆகியிருந்தது. போலீஸ் தடியடிப் பிரயோகத்தால் ஏற்பட்ட காயங்களின் பலனாகத்தான் அந்த மகாபுருஷர் அவ்வளவு சீக்கிரம் மரணமடைந்தார் என்பது அப்பழுக்கற்ற உண்மை.

லஜ்பத்ராயின் மரணம் மகாத்மா காந்தியையே மனங்கலங்க வைத்தது. தாம் நடத்தி வந்த யங் இந்தியா பத்திரிகையில் காந்திஜி, லாலாஜி மறைந்தார். லாலாஜி வாழ்க. என்ற தலைப்பில் ஒரு தலையங்கமே தீட்டிவிட்டார்.

லஜ்பத்ராயின் துரித மரணத்தைப் பற்றி மத்திய அரசாங்கச் சட்டசபையில் (Central Legislative Assembly) காரசாரமான விவாதங்கள் நிகழ்ந்தன. ஏகாதிபத்தியத்தின் மூர்க்கத்தனத்தை முகமூடியிட்டு மறைக்க முயன்ற ஜேம்ஸ் சிரேரார் என்னும் ஆங்கில அதிகாரி, லஜ்பத்ராயை அடையாளம் தெரியாமல் தவறுதலாகப் போலீஸார் தாக்கிவிட்டார்கள் என்று கூறினார். உடனே ஸ்ரீ எஸ்.சீனிவாஸ ஐயங்கார், லாலா லஜ்பத் ராயை ஒரு மனிதனுக்கு அடையாளம் தெரியவில்லையென்றால், அவன் பஞ்சாபில் போலீஸ் இலாகாவில் இருக்கவே தகுதியில்லாதவன் என்று சுடச்சுடப் பதில் அளித்தார்.

அந்தச் சமயம் காலஞ்சென்ற தேசபந்து சித்தரஞ்சன் தாஸின் மனைவி வாஸந்தி தேவியார் ஆவேசமாக ஒரு சொற்பொழிவிலே இப்படிக் கூறினார் ; பாரத நாட்டில் வீர இளைஞர்கள் இன்னமும் உயிருடன் இருக்கிறார்களா? அப்படியானால் ஏன் அவர்கள் இன்னமும் லஜ்பத்ராய் போன்ற சிறந்த தேசபக்தருக்கு இழைக்கப் பெற்ற அநீதியைக் கண்டும் சும்மா இருக்கிறார்கள். இந்த அவமானத்தைச் சகித்துக் கொள்ளும் அளவுக்கு மான உணர்ச்சியற்றவர்களா இந்த நாட்டு மக்கள்? வீர வாலிபர்களே. உங்கள் உடலில் ஓடும் ரத்தத்தில் தன்மான உணர்ச்சி லவலேசமாவது இருக்குமானால், இன்று நமது அருமை நாட்டின் மாபெருந் தலைவர் ஒருவருக்கு இழைக்கப் பெற்ற அநீதிக்குப் பழி வாங்கியே தீரவேண்டும். அந்த பழிக்குப் பழியை வெற்று வாய்ப் பேச்சுக்களில் அல்ல, செய்கையில் நான் எதிர்பார்க்கிறேன்.

வாஸந்தி தேவியாரின் சவால் நிகழ்ந்து முப்பதே நாட்களுக்குள் அதற்கு விடை அவர் எதிர்பார்த்தபடியே செய்கையாகக் கிடைத்துவிட்டது. டிசம்பர் 17-ஆம் தேதியன்று சூப்பரிண்டெண்டெண்ட் ஸாண்டர்ஸ் என்பவர் தமது ஜில்லாப் போலீஸ் அலுவலகத்திலிருந்து மாலை நான்கு மணிக்கு ஒரு மோட்டார் ஸைக்கிளில் வீடு திரும்பிக் கொண்டிருந்த போது, ஒரு திருப்பத்தில் ஸாண்டர்ஸைக் குறி பார்த்து இளைஞர் ஒருவர் மின் வெட்டு நேரத்தில் சுட்டுவிட்டு ஓடினார்.

குண்டுக்கு இலக்கானவுடனே ஸாண்டர்ஸ் கீழே விழுந்தார். அப்போது அவரைத் தொடர்ந்து பின்னால் வந்து கொண்டிருந்த சானன்சிங் என்ற ஹெட்-கான்ஸ்டபிளும் போக்குவரத்து அதிகாரி ஃபெர்ன் என்பவரும் இந்த இளைஞரைப் பின்தொடர்ந்து ஓடினார்கள். ஆனால், ஒரு மறைவிடத்தில் கூட்டமாயிருந்த வேறு சில வாலிபர்களுடன் இந்த இளைஞரும் போய்ச் சேர்ந்து கொண்டார். இந்த இளைஞர் அனைவரும் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் கிளம்பிப் போலீஸ் அதிகாரிகளைச் சுடலானார்கள். ஒரு குண்டு ஃபெர்ன் மீது நன்றாகப் பாய்ந்துவிடவே அவரைக் கைத்தாங்கலாக ஹெட் கான்ஸ்டபிள் சானன்சிங் அழைத்துச், செல்ல நேர்ந்தது. இந்த வாலிபர்கள் சானன்சிங் மீது ஒரே ஒரு முறை சுட்டுவிட்டு மறைந்தார்கள். ஆஸ்பத்திரியிலேயே சானன்சிங் மரித்துவிட்டார். இந்த வாலிபர்கள் உபயோகித்த லைசென்ஸ் இல்லாத 30 மாஸர்பிஸ்டல் 30 (Mauser Pistol) ஒன்று அந்த ஸ்தலத்திலிருந்து போலீஸாருக்குக் கிடைத்துவிட்டது. இந்தப் பிஸ்டல்தான் பின்னால் இந்த வாலிபர்களைக் காட்டிக் கொடுத்த புண்ணியத்தைக் கட்டிக் கொண்டது.

ஸாண்டர்ஸ் மரித்த அதே தினம் மாலையில் லாகூர் நகரில் பல இடங்களில் சில சுவரொட்டி விளம்பரங்கள் உருதுவில் தென்பட்டன. ஸாண்டர்ஸ் வீழ்ந்தான்:

லாலாஜியைக் கொன்றவனிடம் பழி தீர்த்துக் கொண்டுவிட்டோம் என்று அவற்றில் எழுதியிருந்தது. சாக்கட்டியாலும் சில இடங்களில் இந்த வாசகம் எழுதியிருந்தது.

பட்ட பகலில் ஓர் ஐரோப்பியப் போலீஸ் அதிகாரியை நடுத்தெருவில் ஓடும் மோட்டார் சைக்கிளிலேயே யாரோ சுட்டுக் கொன்றான் என்ற செய்தி கேட்டுப் பஞ்சாப் போலீஸ் இலாக்காவே பேரதிர்ச்சி அடைந்ததில் அதிசயமில்லை. ஆனால் என்ன முயன்று என்ன? நான்கு மாத காலம் போலீஸ் இலாக்காவினர் எப்படி எப்படியோ சல்லடை போட்டு சலித்தும் அவர்களுக்கு ஒரு ருசுவும் கிடைக்கவில்லை.

1929 ஏப்ரல் 8-ஆம் தேதி புதுடில்லியில் விட்டல்பாய் பட்டேல் அவர்களின் தலைமையில் சட்டசபை (Legislative Assembly) கூடியது. அந்தச் சமயம் ஸைமன் கமிஷனைச் சேர்ந்த அங்கத்தினர்கள் சட்ட சபைக்கு வந்திருந்தார்கள். கூட்டம் கூடிச் சிறிது நேரமே ஆகியிருக்கும். பார்வையாளர்களின் காலரியில் அமர்ந்திருந்த இரண்டு இளைஞர்கள் அப்போது ஒரு வெடிகுண்டைச் சட்டசபை அறையினுள் வீசியெறிந்தார்கள். வெடிகுண்டை வீசிவிட்டு அந்த இருவரும் இன்குலாப் ஜிந்தாபாத் என்று உரக்கக் கூவியதோடு, ஹிந்துஸ்தான் ஸோஷலிஸ்ட் ரிபப்ளிகன் படையினர் பிரசுரித்த (Hindustan Socialist Republican Army) நோட்டீஸுகளையும் சரமாரியாக வீசினார்கள். அந்த இரண்டு இளைஞர்களையும் உடனே போலீஸார் பிடித்துவிட்டார்கள். அவர்களின் பெயர்கள் பகத்சிங், வடுகேச் வரதத் என்று அறிந்தார்கள். அந்த இருவர் மீதும் ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் முன்னிலையில் வழக்கு நடைபெற்றது. இருவருக்கும் நீதிபதி தீவாந்தர தண்டனை விதித்தார்.

பகத்சிங்கைக் கைது செய்த பின்பு அவரைச் சோதனையிட்ட போலீஸார் அவரிடமிருந்து ஒரு பிஸ்டலைக்

கைப்பற்றினார்கள். இந்தப் பிஸ்டல்தான் ஸாண்டர்ஸ் கொலையில் பிரயோகிக்கப் பெற்றது என்று நிபுணர்கள் கண்டுபிடித்தார்கள். அது மட்டுமல்ல, ஸாண்டர்ஸ் கொலையுண்ட அன்று மாலையில் சுவர்களில் சாக்பீஸில் எழுதியிருந்த எழுத்தும் பகத்சிங்கின் கையெழுத்தும் ஒரே நபருடையவையே என்றும் நிபுணர்கள் கண்டுபிடித்தார்கள். ஆகக்கூடி, ஸாண்டர்ஸ் கொலையைப் பகத்சிங் கூட்டத்தினரே திட்டமிட்டுச் செய்தவர்கள் என்று பஞ்சாப் போலீஸார் ஊகித்தறிந்தார்கள். இதைத் தொடர்ந்து போலீஸார் கீழ்த்தரமான முறைகளையும் தயங்காமல் கடைப்பிடித்துப் பகத்சிங் கூட்டத்தினரைச் சித்திரவதை செய்தார்கள். போலீஸாரின் சித்திரவதை தாளாமல் ஜயகோபால், ஹன்ஸ்ராஜ் வோஹ்ரா என்ற இரண்டு வாலிபர்கள் அப்ரூவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களுடைய உதவியால் கல்கத்தாவிலும் லாகூரிலும் தீவிர மனித வேட்டையில் இறங்கிய போலீஸார் ஏறக்குறைய முப்பது இளஞ் சிங்கங்களைக் கைது செய்தார்கள். இவர்களில் லலித்குமார் முகர்ஜி, ஃபணீந்திரநாத் கோஷ், மனமோஹன் பானர்ஜி ஆகிய மூவரும் முன்கூறிய இருவரைப் போலவே அப்ரூவர்களாய் சாட்சியம் கூற இசைந்துவிட்டார்கள். பின்னாளில் பாரத கம்யூனிஸ்ட் கட்சியின் பிரதம காரியதரிசியாகப் பணியாற்றிய அஜய்குமார் கோஷையும் பகத்சிங் கூட்டத்தினரில் ஒருவராகப் போலீஸார் கைது செய்தார்கள்.

கைதான நபர்களை லாகூர் ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் முன்பு அழைத்து வந்தார்கள். ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் உத்திரவுப்படி இவர்களை அரசியல் சம்பந்தம் இல்லாத இதர பயங்கர குற்றவாளிகளோடு ஒரே சிறையில் காவலில் வைத்தார்கள். என்ன பரிதாபம். சிறையில் இந்தக் கைதிகள் பட்ட அல்லல்களுக்கு ஓர் எல்லையே இல்லை. ஏகாதிபத்தியத்தின் இந்த ஈவிரக்கமில்லாத செய்கையைக்

கண்டித்துப் பல கைதிகள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்கள். அவர்களுள் ஒரே ஒருவரைத் தவிர மற்றக் கைதிகள் எல்லாரும் உண்ணாவிரதத்தைக் கைவிட்டுவிட்டார்கள். கல்கத்தாவைச் சேர்ந்த யதீந்திரநாத் தாஸ் என்னும் இளைஞர் மட்டும் விடாமல் தொடர்ந்து உபவாசமிருந்து சரியாக அறுபத்து நான்காம் நாள் உயிரைவிட்டார்.

அப்படி உயிர்விட்ட யதீந்திரநாத் தாஸின் சடலத்தைக் காங்கிரஸ் தலைவர்கள் பிரத்தியேக ரெயில் வண்டி ஒன்றில் லாகூரிலிருந்து கல்கத்தாவுக்கு எடுத்துச் சென்று வங்கச் சிங்கம் சுபாஷ் சந்திர போஸிடம் ஒப்படைத்தார்கள். இந்த வீர வாலிபரின் இறுதிச் சடங்குகள் நடந்ததும், பலர் இவரது அஸ்தியைப் பயபக்தியோடு நெற்றியில் தடவிக் கொண்டு தங்களது இறுதி அஞ்சலியைச் செலுத்தினார்கள். இதன் பிறகும் அரசியல் கைதிகளின் நிலையைச் சீர்திருத்த ஏகாதிபத்தியம் முன் வரவில்லை.

லாகூர்ச் சதி வழக்கு இழுத்துக் கொண்டே போயிற்று. இந்த சதி வழக்கில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகளை விசாரணை செய்ய ஒரு விசேஷ நீதிமன்றத்தை (Special Tribunal) கவர்னர்-ஜெனரல் கடைசியில் 1930-ஆம் ஆண்டில் நியமித்தார்.

மே மாதம் முதல் வார வாக்கில் லாகூர்ச் சதி வழக்கு விசாரணை நடக்கத் தொடங்கியது. மகாத்மா காந்தியின் தலைமையில் அப்போது உப்பு சத்தியாக்கிரகம் நடைபெற்று வந்தது. ஒவ்வொரு நாளும் பல்லாயிரக்கணக்கான மக்கள் கைதானார்கள். இதற்கு முன்பே மக்களின் உள்ளத்தைப் பகத்சிங் பெரிதும் கவர்ந்துவிட்டதால், அவரது புரட்சிக் கோஷமான இன்குலாப் ஜிந்தாபாத் என்னும் வாசகத்தையே காங்கிரஸ் தொண்டர்கள் தங்கள் சாந்தி கீதம் ஆக்கிக் கொண்டுவிட்டார்கள்.

குற்றம் சாட்டப் பெற்ற நபர்கள் கைதாகி ஏறக்குறைய ஓராண்டுக்குப் பின்பே - அதாவது, 1930 மே 5-ஆம் தேதிதான் - லாகூர்ச் சதி வழக்கு விசாரணைக்கு வந்தது. மொத்தம் பதினைந்து பேர் இந்த வழக்கில் எதிரிகள். அவர்களுடைய பெயர் விவரம் இது : பகத்சிங் சிவராம் ராஜ்குரு, சுகதேவ், கிஷோரிலால்ரதன், கயா பிரஸாத் என்ற டாக்டர், பி.எஸ்.நிகம், சிவவர்மா, குந்தன்லால், விஜய்குமார், ஸின்ஹா, அஜய்குமார்கோஷ், ய்தீந்திரநாத் ஸான்யால், குன்வார்நாத் திவாரி, மகாவீர்சிங், ஜய்தேவ், ப்ரேம்தத், தேஷ்ராஜ்.

பகத்சிங், வடுகேச்வர் தத் ஆகிய இருவருக்கும் ஏற்கனவே வெடிகுண்டு வீசிய குற்றத்துக்காகத் தீவாந்தர தண்டனை விதிக்கப் பெற்றிருந்தது.

எதிரிகள் மீது பிராஸிகியூஷன் தரப்பினர் சுமத்திய குற்றங்கள் இவை : (1) மாட்சிமை தங்கிய மன்னர் பிரானுக்கு எதிராகச் சதி செய்து ஆங்கில ஆட்சியைக் கவிழ்க்க முயன்றது ; (2) ஸாண்டர்ஸ், சானன்சிங் இந்த இருவரையும் கொலை செய்தது.

வட இந்தியாவில் பல புரட்சிக்காரர்கள் ஒன்று கூடித் தங்கள் சதி நடவடிக்கைகளைப் பஞ்சாப், வங்காளம் இந்த இரண்டு மாகாணங்களிலும் நடத்தி வந்தார்கள். இவர்களுடைய திட்டத்தின் நோக்கம் ஆங்கில ஆட்சியைக் கவிழ்ப்பதே. அதற்குப் பிள்ளையார் சுழியாகவே ஸ்காட் என்று நினைத்துத் தவறாக ஸாண்டர்ஸை எதிரிகள் கொன்றார்கள் என்று சர்க்கார் தரப்பினர் வாதித்தார்கள்.

அப்ரூவர்களாக மாறிய ஏழு நபர்களின் அத்தாட்சியையே சார்ந்து பிராஸிக்யூஷன் தரப்பினர் தங்கள் வாதத்தைப் புரிந்தார்கள். பிராஸிக்யூஷன் தரப்பில் சாட்சியங்கள் கூறிய ஏராளமான சாட்சிகளும் எதிரிகளை பல

இடங்களில் கண்டதாகக் கூறினார்கள். கைரேகை நிபுணர்களும் கையெழுத்து நிபுணர்களும் ஐயத்துக்கு இடமில்லாமல் எதிரிகள் குற்றவாளிகளே என்று நிரூபிக்கக் கூடிய ஆதாரங்கள் இருப்பதாகச் சாட்சியம் அளித்தார்கள்.

ஏழு அப்ரூவர்களும் புரட்சிக்காரர்களின் சதித் திட்டங்களை வெளியிட்ட புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார்கள். பணத்துக்காகப் பஞ்சாப் தேசிய பாங்கியைக் கொள்ளையடிப்பதற்குப் பகத்சிங் கூட்டத்தினர் வகுத்த ஒரு திட்டத்தையும், பின்பு அதை அவர்கள் கைவிட்டதையும் நீதிமன்றத்தில் அப்ரூவர்கள் விரிவாகக் கூறினார்கள். அப்ரூவர்களில் குறிப்பாக ஜயகோபால் என்பவனின் வாக்குமூலமே, பகத்சிங், சிவராம் ராஜகுரு, சுகதேவ் இந்த மூவரையும் தூக்குக் கயிற்றில் மாட்டுவித்த பேற்றை அடைந்தது.

ஜயகோபால் கூறிய விவரம் இது: எங்கள், கூட்டத்தினரின் இலக்கில் விழுந்திருந்த போலீஸ் அதிகாரியை டிசம்பர் 17-ஆம் தேதி காலையிலிருந்து நான் கண்காணித்து வந்தேன். ஏறக்குறைய காலை பத்து மணிக்கு ஓர் ஆங்கிலப் போலீஸ் அதிகாரி சிவப்பு மோட்டார் சைக்கிள் ஒன்றிலிருந்து இறங்கிப் போலீஸ் அலுவலகத்தினுள் நுழைந்ததைக் கண்டேன். அந்த அதிகாரியை நான் ஸ்காட் என்று தவறாக் நினைத்துவிட்டேன். ஸ்காட்டைக் கொல்லத்தான் எங்கள் கூட்டத்தினர் திட்டமிட்டிருந்தார்கள். நான் கண்காணித்து வந்த அதிகாரி அந்தப் போலீஸ் அலுவலகத்தினுள் நுழைந்ததும், நான் எங்கள் கூட்டத்தினரின் திட்டப்படி பகத்சிங், ராஜகுரு, ஆஸாத் இந்த மூவருக்கும், குறிப்பிட்ட அதிகாரி போலீஸ் அலுவலகத்தினுள் நுழைந்துவிட்டார் என்று தகவல் கொடுத்தேன். இதன் பின்பு பகத்சிங், ஆஸாத், நான் ஆகிய மூவரும் மறைந்திருந்து கொண்டு அந்த அதிகாரியைத் தாக்கச் சித்தமானோம். நான் காலையில் கண்ட அதே போலீஸ் அதிகாரி

மாலை நான்கு மணிக்கு ஹெட்-கான்ஸ்டபிள் சானன்சிங் பின்தொடரச் சிவப்பு மோட்டார் சைக்கிள் ஒன்றில் வருவதைக் கண்ட நான் உடனே என் சகபாடிகளுக்கு ஸிக்னல் கொடுத்தேன். அவர்கள் உஷாராகி அந்த ஆங்கில அதிகாரியைச் சுட்டு வீழ்த்தினார்கள். அவர் ஸ்காட் அல்ல, ஸாண்டர்ஸ் என்பவரே என்று பின்னால்தான் எங்களுக்குத் தெரிய வந்தது. அவரைச் சுட்ட பின், போக்குவரத்து அதிகாரி ஃபெர்ன் (Traffic Inspector Fern) ஹெட் கான்ஸ்டபிள் சானன்சிங் இருவரையும் நோக்கி என் சகபாடிகள் சுடலானார்கள். ஃபெர்ன் தப்பித்துக் கொண்டார். சானன்சிங் படுகாயமுற்றுப் பின்னால் ஆஸ்பத்திரியில் மரித்தார். ஒருவிதமாய் எதிரிகளைச் சுட்டு வீழ்த்திய பிறகு நாங்கள் லாகூர் நகரின் பல வீதிகளில் எப்படி எப்படியோ மறைந்து ஓடித் தப்பிச் சென்றுவிட்டோம். ஆயினும் நாங்கள் ஓடிய போது ஒரு துப்பாக்கி தவறி விழுந்துவிட்டதை அப்போது உணரவேயில்லை.

ஜயகோபாலின் இந்த வாக்குமூலத்தின் மீதுதான் பிராஸிக்யூஷன் தரப்பினர் தம் வாதத்தை நிலை நாட்டினார்கள். இந்த வழக்கில் குற்றம் சாட்டப் பெற்ற எதிரிகள் தங்கள் சார்பில் வழக்காட வழக்கறிஞர்களை நியமிக்கவே சிரத்தை காட்டவில்லை. விஜயகுமார் ஸின்ஹா, அஜய்குமார் கோஷ் இந்த இருவர் மட்டுமே பழைய பஞ்சாப் மாகாணத்தின் சிறந்த லாயரான அமுலக்ராம் கபூர் என்பவரைத் தங்கள் சார்பில் எதிர்வழக்காட நியமித்திருந்தார்கள்.

1930 அக்டோபர் 7-ஆம் தேதி விசேஷ நீதிபதிகள் தங்கள் தீர்ப்பை அளித்தார்கள். குறிப்பிட்ட குற்றங்களைக் குற்றவாளிகள் புரிந்ததாகவும், ஆகவே ஐயத்துக்கு இடமில்லாமல் அவர்கள் தண்டனைக்குரியவர்களே என்றும் கூறிய அந்தத் தீர்ப்பை நீதிமன்றத்தில் வாசித்தார்கள். ஆயினும், போதுமான ருசுக்கள் இல்லாததால் யதீந்திரநாத் ஸான்யால்,

அஜய்குமார் கோஷ், தேஷ்ராஜ் ஆகிய மூவரையும் நீதிபதிகள் விடுதலை செய்தார்கள்.

பகத்சிங், சிவராம் ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூவருக்கும் மரண தண்டனை கிடைத்தது. மீதி ஒன்பது எதிரிகளுக்கும் வெவ்வேறு கால அளவுக்குச் சிறைவாசமும், தீவாந்தர தண்டனையும் கிடைத்தன.

விசேஷ நீதிமன்றத்தின் தீர்ப்பை எதிரிகள் எதிர்த்து ப்ரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் செய்து கொண்டார்கள். ஆனால் அதில் தோல்வியே கிட்டியது. விசேஷ நீதிமன்றத்தின் தீர்ப்பையே ப்ரிவு கவுன்ஸில் உறுதிப்படுத்தியது.

இதற்கிடையே மகாத்மா காந்தியும் பிற காங்கிரஸ் தலைவர்களும் விடுதலை அடைந்தார்கள். வைசிராய் இர்வின் பிரபுவுடன் ஒரு சமரஸ உடன்படிக்கை செய்து கொள்ள அவர்கள் பேச்சுவார்த்தை நடத்தி வந்தார்கள். இந்தச் சமயந்தான் பின்னாளில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த வின்ஸ்டன் சர்ச்சில் மமதையோடு ஏளனமாக, மிஸ்டர் காந்தி ஒரு சமயம் புகழ் பெற்ற பாரிஸ்டராகப் பணியாற்றிய பிறவிதான். ஆனால் இப்போது அரை நிர்வாண பக்கிரியாகத் திவ்ய தரிசனம் அளித்து வரும் பிச்சைக்காரர். வைஸிராயுடன் இந்தப் பிச்சைக்காரர் சரிசமமாக அமர்ந்து சமரஸ உடன்படிக்கை செய்து கொள்ள முயற்சி செய்கிறாரே என்று கூறினார்.

மகாத்மா காந்தியை, நேரே இர்வின் பிரபுவிடம் பேசிப் பகத்சிங் கூட்டத்தினரை - முக்கியமாக மரண தண்டனை அடைந்த மூவரையாவது தண்டனையிலிருந்து மீட்டுவிடுங்கள் என்று பல நண்பர்கள் கோரினார்கள். மகாத்மா காந்தி அதற்காக எவ்வளவோ முயற்சி செய்தார். ஆனாலும் அதில் அவரால் வெற்றி காண இயலவில்லை. அந்த மகானின் வேண்டுகோளுக்கு இணங்க ஏகாதிபத்தியம் திட்டவட்டமாக மறுத்துவிட்டது.

இறுதியாக 1931 மார்ச் 23-ஆம் தேதி லாகூர் மத்தியச் சிறையில் பகத்சிங், சிவராம் ராஜகுரு, சுகதேவ் மூவரும் தூக்கிலிடப் பெற்ற செய்தி பாரதமெங்கும் பரவி மக்களைத் துயரக் கடலில் ஆழ்த்தியது. இந்த வீர வாலிபர்களுக்கு அஞ்சலி செலுத்தும் பணியில் பாரதமெங்கும் ஹர்த்தால் நடைபெற்றது. மகாத்மா காந்தி, கவியரசி ஸரோஜினி, வங்க வீரர் சுபாஷ் சந்திர போஸ், ஸர்தார் பட்டேல் ஆகியோர் இந்த இளந் தியாகிகளைப் பற்றி நீண்ட சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பகத்சிங், ராஜகுரு இந்த இருவரின் பெற்றோர்களையும் பலர் கண்டு வணங்கினார்கள்.

பகத்சிங், சிவராம் ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூன்று பாரதத் தவப் புதல்வர்களும் ஏகாதிபத்தியத்தின் கொடுமைக்கு இரையாகி முப்பதாண்டுகளுக்கு மேல் சென்றுவிட்டன. என்றாலும், இன்னும் அவர்களது நினைவு நம் உள்ளத்தில் ஏகாதிபத்திய ஆட்சியின் தீமைகளையும் துயரம் மிகுந்த அந்தக் காலத்தையும் ஒவ்வொரு கணமும் எழுப்புகிறது. மகாத்மா காந்தியைப் போல் நாடெங்கும் பிரசித்தி பெற்ற வீர வாலிபரான பகத்சிங்கை நாம் ஒரு நாளும் மறக்க முடியாது. பாரத நாட்டுச் சுதந்தரப் போராட்டத்தில் நீங்காத இடம் பெற்றுவிட்டார் அமரர் பகத்சிங்.



# 5. நானாவதி செய்த பிழை

பிரேம் பகவன் தாஸ் அஹூஜாவைக் கொலை செய்ததற்காகக் கமாண்டர் காவஸ் மானேக்ஷா நானாவதியின் மீது தொடர்ந்த வழக்கைப் போல் இந்தியப் பொதுமக்களை உள்ளங் குழையச் செய்து துயரத்திலாழ்த்திய வழக்கு வேறொன்று இல்லை. இதில் ஓர் ஆங்கிலப் பேரழகி சம்பந்தப்பட்டிருந்ததால், ஆங்கிலேயரும் இந்த வழக்கில் விசேஷ அக்கறை காட்டினார்கள். இந்த வழக்கில் ஆயுள் தண்டனை பெற்ற நானாவதியைப் போல் மக்களின் முழு இரக்கத்தையும் பெற்ற ஒரு குற்றவாளி இன்று வரையில் இருந்ததுமில்லை ; இனி இருப்பார் என்பதும் ஐயமே!

கவாஸ் நானாவதி பம்பாயைச் சேர்ந்த நடுத்தரப் பார்ஸி குடும்பம் ஒன்றின் நான்கு குழந்தைகளில் ஒருவராக 1922-ஆம் ஆண்டில் பிறந்தார். பம்பாயிலேயே அரிச்சுவடி முதல் பட்டப் படிப்பு வரையில் படித்து முடித்தார். படிப்பு முடிந்து ஸெயிண்ட் ஸேவியர் கல்லூரியை விட்டு இவர் வெளியேறிய போது, இரண்டாவது உலக யுத்தம் நடந்து கொண்டிருந்தது. அப்போது ராயல் இந்தியக் கடற்படையில் நானாவதி சேர்ந்தார். டார்ட்மௌத்தில் உள்ள ராயல் நேவி காலேஜில் 1942-ஆம்

ஆண்டில் கடற்படை பயிற்சி பெற்றார். நானாவதி ஆறடி உயரத்தோடு சிவந்த மேனியும் களையான முகமும் கொண்டவர் ; கம்பீரமான தோற்றம் உடையவர்; பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருப்பார்.

1949-ஆம் ஆண்டில் பிரிட்டனில் இவர் இருந்த போது, ஆங்கிலப் பேரழகியான ஸில்வியாவைச் சந்தித்தார். சுந்தர புருஷரான நானாவதி மீது அழகி ஸில்வியா பிரேமை கொண்டாள். சில வார காலத்துக்குள் இரு காதலர்களும் பதிவுத் திருமணம் செய்து கொண்டார்கள்.

மனைவியைப் பம்பாய்க்கு நானாவதி அழைத்து வந்தார். கொலாபா பகுதியில் நவீன வசதிகள் நிறைந்து கிளி கொஞ்சும் அழகிய மனை ஒன்றில் குடியேறினார். இந்த அன்புத் தம்பதிகளுக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். நானாவதி சிறந்த வீரர். தம் தொழிலில் விசேஷமான சிரத்தை காட்டினார். சில வருஷங்களுக்குள்ளாகவே படிப்படியாக உயர்ந்த பதவிக்கு வந்துவிட்டார். ஏழு வீரப் பதக்கங்கள் மார்பை அலங்கரிக்க, மேலும் தீவிரமாகப் பணிபுரிந்து பதவியிலே இன்னமும் முன்னேற்றத்தை எதிர்பார்த்திருந்தார் கமாண்டர் நானாவதி.

பிரஸ்தாப அஹூஜா என்பவன் கராச்சியில் செல்வமும் செல்வாக்கும் மிகுந்த பஞ்சாபி குடும்பம் ஒன்றைச் சேர்ந்தவன். 1947-ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் வெளியேறியதுடன் பாகிஸ்தான் ஏற்பட்டதால், அஹூஜாவின் குடும்பம் கராச்சியை விட்டு வந்து பம்பாயில் குடியேறியது. பம்பாயில் பெடார் ரோடிலுள்ள யூனிவர்ஸல் மோட்டார் கம்பெனிக்கு அஹூஜா முதலாளியானான். முப்பத்து மூன்று வயசு முடியவில்லை. சிவந்த மேனியும் சுருண்ட கேசமும் வாளிப்பான உடல் கட்டும் கொண்ட அழகன்தான். நேபியன் ஸீ ரோடில் உள்ள ஜீவன்

ஜோதி என்ற நவீன வசதிகள் நிறைந்திருந்த பெரிய கட்டிடத்தின் ஒரு பகுதியில் குடியிருந்தான். மணமாகாத மேமி அஹுஜா என்ற இவனுடைய சகோதரியும் இவனோடு கூட வசித்து வந்தாள்.

அஹுஜா இளம் பிராயத்திலேயே சிற்றின்பப் பிரியனாக இருந்தான். கராச்சியில் இருந்த போதே பாமி என்ற ஓர் இளம் பெண்ணைக் கற்பழித்தான். அவளது நிர்ப்பந்தத்தால் ஒரு பொய்க் கல்யாணத்தைச் செய்து கொண்டான். பின்பு தன் பண பலத்தாலும் செல்வாக்காலும் அந்தக் கல்யாணம் சட்டப்படி செல்லுபடியாகாது என்று நிலைநாட்டினான். அவளை ஏமாற்றி அவளுடைய பெற்றோரிடமே திருப்பி அனுப்பிவிட்டான்.

சிற்றின்பப் பிரியனாக இருந்தாலும் அஹுஜா சர்வ ஜாக்கிரதையாக இருந்து வந்தான். அவன் எத்தனையோ பெண்மணிகளுடன் வரம்பு மீறிய தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததுண்டு. ஆனால் எந்தப் பெண்ணுடனும் ஒரு போட்டோ எடுத்ததில்லை; எவளுக்கும் தன் அன்பளிப்பாகத் தன் போட்டோவைத் தந்ததில்லை. ஏன், எந்தப் பெண்ணுக்கும் தவறிக்கூட இரண்டு வார்த்தைகள் கடிதம் எழுதியதுமில்லை!

அஹுஜா கொலையுண்டதும், அவனது ஜாகையைப் போலீஸார் சோதனையிட்டார்கள். 26 பெண்மணிகள் (பெரும்பான்மையோர் கடற்படை அதிகாரிகளின் மனைவிகளே) அவனுக்குப் பத்தி பத்தியாக எழுதியிருந்த காதல் கடிதங்களை அப்போது போலீஸார் கண்டார்கள். பின்னால் வழக்கு நடந்த போது, ஒரு பெண்மணி (அவளது பெயர் வெளியாகவில்லை) - திருமணமானவள் - எழுதியிருந்த மூன்று கடிதங்கள் கோட்டில் வாசிக்கப் பெற்றன! கணவன்மாரை விட்டுப் பிரிந்து தனித்து வாழ்ந்த கடற்படை அதிகாரிகளின் மனைவிகளையே பெரும்பாலும் தன் வலையில் அஹுஜா சிக்க

வைத்து வந்தான் என்று தோன்றுகிறது.

இன்னோர் ஆங்கில அழகியை நானாவதியைப் போலவே மணந்தவர், லெப்டினண்ட் கமாண்டர் யக்ஞக் என்ற கடற்படை அதிகாரி. அவளுடைய பெயர் நான்ஸ். யக்ஞக், அஹூஜா இருவரும் நண்பர்கள். நானாவதி, யக்ஞக் இருவருமே இந்தியக் கடற்படையில் உயர்ந்த பதவியில் இருந்ததால், ஒருவருக்கொருவர் நல்ல பழக்கம் ஏற்பட்டது. இந்த யக்ஞக் மூலமாக நானாவதியின் குடும்பத்துக்கு அஹூஜா பரிச்சயமானான். வெறும் நட்பு என்ற முறையிலேதான் அஹூஜாவுடன் ஸில்வியா முதலில் பழகினாள். ஆனால் அஹூஜா முழுக்க முழுக்க மேனாட்டுப் பாணியிலேயே இரவுக் கிளப்பில் கலந்து கொள்வான். ஆண்-பெண் இணைந்து ஆடும் பாலே நடனம், மது ஆகிய பழக்க வழக்கங்களில் ஈடுபட்டான். இதனால் ஸில்வியா அவனுடன் சற்றுத் தாராளமாகவே பழகலானாள். ஆங்கில மாது இல்லையா! இதன் பலன் நாளடைவில் இந்தச் சாதாரண நட்பு இருவருக்கும் எப்படியோ மோஹமாக மாறி முற்றிப் போயிற்று. நானாவதியை விட்டு விலகு. உன்னை நான் முறைப்படி மணந்து கொள்கிறேன் என்று கூறி ஸில்வியாவை அஹூஜா ஏமாற்றினான். அவளது தகாத காதலை இப்படி நீரூற்றி வளர்த்து வந்தான். பாவம்! எங்கோ கண்காணாத பிரதேசத்தில் நாட்டுக்காகச் சேவை செய்து கொண்டிருந்த நானாவதிக்கு இந்த விஷயம் எதுவும் தெரியவே தெரியாது!

1958-ஆம் ஆண்டு ஸில்வியா மிகவும் நோய்வாய்ப்பட்டு இளைத்துவிட்டாள். கடித மூலம் இதுபற்றி அறிந்தார் நானாவதி ; டில்லிக்குச் சென்று உடம்பைத் தேற்றிக் கொள் என்று அன்புடன் அவளுக்குக் கடிதம் எழுதினார். கணவனின் இச்சைப்படியே ஸில்வியாவும் டில்லிக்குப் புறப்பட்டுச்

சென்றாள். அங்கே நானாவதியின் மற்றொரு நெருங்கிய நண்பரான லெப்டினண்ட் கமாண்டர் ஜாலி மேத்தா, திருமதி ஜாலி இவர்களுடன் தங்கினாள்.

டில்லியில் ஓர் ஓட்டலில் ப்ரேம் அஹுஜாவையும் அவனுடைய சகோதரியான மேமியையும் தற்செயலாக ஸில்வியா சந்தித்தாள். அவர்களுடன் அவர்களுடைய மோட்டார்க் காரிலேயே பம்பாய்க்குத் திரும்பிச் செல்லத் தீர்மானித்தாள்.

வழியில் ஆக்ரா நகரில் ஒரு நாள் இரவு ஓர் ஓட்டலில் அவர்கள் தங்கினார்கள். அன்றிரவு நெடு நேரம் வரையில் அஹுஜா, ஸில்வியா இருவரும் தனியே ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அடுத்த நாள் மேமியிடம் அஹுஜா, நான் ஸில்வியாவைக் காதலிக்கிறேன் என்று சொன்னான். அவளை மணந்து கொள்ளலாமா என்று யோசனை கேட்டான். அதற்கு மேமி சம்மதிக்கவில்லை. இதை விசாரணையின் போது மேமியே சொன்னாள்.

ஸில்வியாவுக்கு அஹுஜா மீது கரை காணாத காதல் உண்டாயிற்று. அவனுக்குத் தன் உள்ளத்தைத் திறந்து மூன்று கடிதங்கள் எழுதினாள். தன்னை எப்போது அஹுஜா மணந்து கொள்வதாக உத்தேசம் என்று அவற்றில் கேட்டாள். வழக்கின் போது இந்த மூன்று கடிதங்களும் கோர்ட்டில் முக்கியமான சாட்சியங்களாக ஆஜராயின. ஸில்வியாவிடம் வரம்பு மீறிப் பழகிய பின்பும், அஹுஜா தன் வாக்குப்படி அவளை மணக்க இசையவில்லை. சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழித்து அவளை ஏமாற்றி வந்தான். இது இந்தக் கடிதங்களின் மூலம் தெளிவாய் வெளிப்பட்டது.

1959-ஆம் ஆண்டு ஏப்ரல் 18-ஆம் தேதியன்று நானாவதி தமது ஐ-என்-எஸ்.மைசூர் (INS Mysore) என்ற கப்பலில் பாரத

நாட்டுக்குத் திரும்பினார். பம்பாய்த் துறைமுகத்தை அடைந்தார். ஸில்வியாவின் நடத்தையில் சில நாளைக்குள்ளே ஒரு விசித்திரமான போக்கை நானாவதி கண்டார். அவரிடம் அவள் முன்போல் அன்பாக இல்லை. ஆனால், இதற்குக் காரணம் என்ன? ஸில்வியா வேறொருவனை - மூன்று குழந்தைகளுக்குத் தாயான பின் - மோஹித்ததுதான் என்று அவர் எங்கே கண்டார்? இப்படி நடக்கக் கூடும் என்று கனவிலும் நானாவதி நினைக்கவில்லை.

1959-ஆம் ஆண்டு ஏப்ரல் 27-ஆம் தேதி காலையில் கணவனும் மனைவியும் தங்கள் உயர்ந்த ஜாதி நாயைப் பரேலில் உள்ள மிருக வைத்திய ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார்கள். அது நோயுற்றிருந்ததுதான் காரணம். வீட்டுக்குத் திரும்புகையில் மெட்ரோ ஸினிமாவுக்கு அருகில் மோட்டாரை நிறுத்தினார்கள். ஸில்வியா தனக்கும் தன் குழந்தைகளுக்கும் அன்று மூன்றரை மணி மாட்டினி ஆட்டத்துக்கு நான்கு டிக்கட்டுகள் வாங்கிக் கொண்டாள். அதன் பின் அவர்கள் கிராஃபோர்டு மார்க்கெட்டுக்குச் சென்று சில சாமான்கள் வாங்கினார்கள். கடைசியில் வீட்டை அடைந்தார்கள்.

வீட்டுக்கு வந்ததும் உணவருந்தச் சாப்பாட்டு அறையில் உட்கார்ந்திருந்த போது தான், நானாவதிக்கு மனைவியின் தகாத நட்பும் துரோகமும் தெரிய வந்தன. அப்போது தங்களுக்குள் என்ன பேச்சு நடந்தது என்பதை வழக்கின் போது நானாவதி, ஸில்வியா இருவரும் விவரமாய்க் கூறினார்கள். இருவருடைய கூற்றுக்கும் மாறுபாடு சிறிதும் இல்லை. ஆயினும், ஏனோ மேல்கோர்ட்டு அதை வெறும் கட்டுக்கதை யென்று கூறியது. நம்பி ஏற்க மறுத்துவிட்டது.

உணவருந்திய பின் ஸினிமாவுக்குப் போக நானாவதியையும் ஸில்வியா அழைத்தாள். எனக்குப் படம்

பார்ப்பதில் விருப்பம் இல்லை. படம் முடியும் சமயத்தில் நானே வந்து உன்னையும் குழந்தைகளையும் காரில் ஏற்றிக் கொண்டு வீட்டுக்கு அழைத்துச் செல்கிறேன் என்று நானாவதி கூறினார். அவர்கள் போய்விட்டார்கள். தம் கப்பலான ஐ-என்-எஸ் மைசூருக்குப் பிறகு நேராகக் காரை நானாவதி ஓட்டிச் சென்றார். தங்கள் நாய்க்காக மிருக வைத்தியர் குறித்துத் தந்த சில மருந்துகளை அவர் வாங்க வேண்டியிருந்தது.

கப்பலை அடைந்தார். அங்கே கமாண்டர் பிரகாஷுடன் அப்போது உரையாடிக் கொண்டிருந்த காப்டன் கோஹ்லியை நானாவதி சந்தித்தார். ஆறு ரவைகளடங்கிய கைத்துப்பாக்கி ஒன்றைக் கப்பலிலிருந்து எடுத்துச் செல்ல அனுமதி வாங்கிக் கொண்டார். தாம் அவசர காரியமாக அன்றிரவே தம் தமையனைப் பார்க்க அஹமத் நகருக்குச் செல்ல வேண்டியிருப்பதாகக் கூறினார். அஹமத் நகரில் நானாவதியின் தமையன் ஒரு பெரிய உத்தியோகஸ்தர்.

ரிவால்வரை ஒரு பெரிய காகித உறையில் நானாவதி போட்டுக் கொண்டார். பிறகு, தம் பி-எம்-யு 3240 என்ற எண் உள்ள காரில் அமர்ந்தார் ; பெடார் ரோடிலுள்ள யூனிவர்ஸல் மோட்டார் அலுவலகத்துக்கு ஓட்டிச் சென்றார். அங்கே அஹூஜாவைப் பற்றி அலுவலகத்தின் மானேஜரை விசாரித்தார். அஹூஜா உணவருந்த வீட்டுக்குச் சென்றிருக்கிறான் என்று கேள்வியுற்றார். நேராக அஹூஜாவின் ஜாகையான ஜீவன் ஜோதிக்குத் தம் காரை நானாவதி செலுத்திச் சென்றார்.

அங்கே சேர்ந்ததும் காரிலிருந்து இறங்கினார். அஹூஜாவைக் காணச் சில அடி சென்றவர், ஏதோ நினைத்துக் கொண்டவராகத் திரும்பிக் காரருகில் வந்து கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டார். அந்த மாளிகையில் அஹூஜாவின் பகுதியை அடைந்ததும், காலிங்பெல்லை நானாவதி

அழுத்தினார். அஹூஜாவின் வேலைக்காரனான அஞ்சனி வந்து கதவைத் திறந்தான்.

படுக்கை அறையில் அஹூஜா இருக்கிறார் என்று வேலைக்காரன் தெரிவித்தான். நானாவதி நேரே அங்கே சென்றார். அறைக்குள் தாம் நுழைந்ததும், உட்புறமிருந்து கதவை இழுத்து மூடிவிட்டார்.

உணவருந்தியபின் பிற்பகலில் சிறிது நேரம் சிரம பரிகாரமாக உறங்கிவிட்டு, அஹூஜா அப்போதுதான் விழித்தெழுந்து குளித்திருக்கிறான்! எனவே, இடுப்பில் ஒரு வெற்றுத் துண்டைச் சுற்றியபடி காட்சியளித்தான். அவனை நானாவதி பார்த்த போது, அவன் தன் தலையை அழகாக வாரிவிட்டுக் கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அஹூஜாவின் அந்தப் படுக்கையறையில் மூன்று குண்டுகள் சுட்ட ஓசை வெளிவந்து அந்தக் கட்டிடத்தையே அதிர வைத்தது. என்னவோ ஏதோ என்று அதிர்ச்சியடைந்த மேமியும் அஞ்சனியும் ஓடோடியும் அங்கே வந்தார்கள்.

அஹூஜாவின் உயிர் விளக்கு அணைந்து போய்விட்டது அவன் செத்துச் சவமாய் கிடந்தான் ; திக்பிரமை பிடித்தவர் போல் குழம்பியவராக ஒரு வார்த்தையும் பேசாமல் கையில் துப்பாக்கியுடன் அறையை விட்டு நானாவதி வெளியேறிக் கொண்டிருந்தார். இதையெல்லாம் அஞ்சனியும் மேமியும் கண்டார்கள்.

நேரே நானாவதி தம் காரில் போய் ஏறிக் கொண்டார். தம்மைத் தடுத்து நிறுத்த முயன்றவர்களை நோக்கிப் பணிவோடு ஆனால் அழுத்தந்திருத்தமாக, என்னை நிறுத்த வேண்டாம் நானே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று சரணடையப்

போகிறேன் என்று கூறினார். காரை அப்படியே ஓட்டிச் சென்றார்.

வழியில் ராஜபவனத்தின் கேட்டுக்கு அருகில் நின்று கொண்டிருந்த ஒரு போலீஸ் கான்ஸ்டபிளைக் கண்டு காரை நிறுத்தினார். அருகே உள்ள காமதேவி போலீஸ் ஸ்டேஷனுக்குத் தம்முடன் வர அவனை அழைத்தார். அவன் தன் டியூட்டியை விட்டு வருவதற்கில்லை என்று சொல்லி மறுத்துவிட்டான். எனவே, நானாவதி தனியாக நேரே கடற்படை மிலிட்டரி போலீஸ் ஆபிஸரான கமாண்டர் எம்.பி.ஸாமுவேலின் பங்களாவுக்குச் சென்றார்.

அந்தச் சமயம் பங்களாவின் வாயிலில் ஸாமுவேல் நின்று கொண்டிருந்தார். நானாவதியைப் பார்த்ததும் அன்புடன் மலர்ந்த முகத்தோடு உள்ளே வரும்படி அவர் அழைத்தார். ஆனால் உள்ளே செல்லாமல் வெளியில் இருந்தபடியே நானாவதி பேசினார். ஓர் அசம்பாவிதம் நேர்ந்தது ; நடக்கக் கூடாதது நடந்துவிட்டது, நான் தவறுதலாக ஒரு மனிதனைச் சுட்டுக் கொன்றுவிட்டேன் என்று கூறினார்.

ஸாமுவேல் மேலும் விசாரித்தார். ஒரு தூர்த்தன் என் மனைவியின் கற்பை அழித்துவிட்டான். என்னால் அதைச் சகிக்க முடியவில்லை. நேபியன் ஸீ ரோடில் ஒரு வீட்டில் வாழ்ந்தான் அந்த மனிதன். அவனுக்கும் எனக்கும் உண்டான பூசலில் அந்தச் சூழ்நிலையில் அந்த மனிதன் என் கைத்துப்பாக்கிக் குண்டுக்கு இலக்காகி மடிந்துவிட்டான் என்று நானாவதி கூறினார். பிறகு ஸாமுவேல் கூறிய யோசனைப்படி நானாவதி தம் வீட்டுச் சாவிகளை ஸில்வியாவிடம் கொண்டு போய்க் கொடுத்தார். டெபுடி கமிஷனரான லோபோவின் காரியாலயத்துக்கு இதன் பின் காரை ஓட்டிச் சென்றார்.

தாம் லோபோவிடம் போய்ச் சேருவதற்கு முன்பே லோபோவுக்கு டெலிபோன் மூலம் செய்தியை அனுப்பும் படி ஸாமுவேலை நானாவதி கேட்டுக் கொண்டிருந்தார். ஸாமுவேலும் அப்படியே செய்தார். போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் கோர்த்தே, இன்ஸ்பெக்டர் மோகாட்சி இவர்களுடன் லோபோ ஏதோ விவாதித்துக் கொண்டிருந்தார். அப்போது நானாவதி தாமே அங்கே வந்து ஒரு வாக்குமூலம் எழுதிக் கொடுத்துச் சரணடைந்தார். மூன்றே ரவைகள் எஞ்சியிருந்த ரிவால்வரை அவரது காரிலிருந்து லோபோ கைப்பற்றினார். ஸப் இன்ஸ்பெக்டர் சேத்தியின் பாதுகாப்பில் நானாவதியை இன்ஸ்பெக்டர் மோகாட்சி விட்டுச் சென்றார்.

இதற்கிடையில் லெப்டினண்ட் ஓம் பிரகாஷும் வந்து சேரவே, அவரும் இன்ஸ்பெக்டர் மோகாட்சியும் டெபுடி இன்ஸ்பெக்டர் கௌதமும் சில போலீஸ் ஜவான்களுடன் சென்று அஹுஜாவின் ஜாகையைச் சோதனையிட்டார்கள். அங்கே 21 குப்பிகள் அயல்நாட்டு மதுவையும், 26 பெண்மணிகளிடமிருந்து அஹுஜாவுக்கு வந்திருந்த ஏராளமான காதல் கடிதங்களையும், சில பெண்மணிகளின் புகைப்படங்களையும் கைப்பற்றினார்கள்.

அஹுஜாவின் பிரேதம், படுக்கையறை, ஸ்நான அறை, அங்கே சிதறிக் கிடந்த சாமான்கள் இவற்றையெல்லாம் போலீஸ் புகைப்பட நிபுணர் பல புகைப்படங்கள் எடுத்துக் கொண்டார். பிறகு, சவ பரிசோதனைக்காக அஹுஜாவின் சடலத்தை அனுப்பி வைத்தார்கள்.

நானாவதியின் வீட்டிலும் போலீஸ் போலீஸ் சோதனை நடந்தது. அஹுஜாவிடமிருந்து நானாவதி குடும்பத்தினருக்குப் பொதுவாக வந்திருந்த புத்தாண்டு வாழ்த்துக் கார்டையும் வேறு சில பொருள்களையும் அங்கே போலீஸார் கைப்பற்றினார்கள்.

நானாவதியை அடிஷனல் சீஃப் பிரஸிடென்சி மாஜிஸ்டிரேட்டான எம்.நசருல்லாவின் முன்பு ஏப்ரல் 28-ஆம் தேதி ஆஜர் செய்தார்கள். மாஜிஸ்டிரேட்டின் உத்தரவுப்படி போலீஸ் பாதுகாப்பில் நானாவதியை 30-ஆம் தேதி வரையில் வைத்திருந்தார்கள். பிறகு கடற்படையின் பாதுகாப்பில் நானாவதியை் வைத்திருக்க கடற்படை அதிகாரிகளிடம் ஒப்படைத்தார்கள். பின்னால் வழக்கு முடிந்து ஜெயிலுக்குச் செல்லும் வரையில் ஏறக்குறையப் பதினேழு மாத காலம் கடற்படையின் பாதுகாப்பிலேயே ஸாமுவேலின் அதிகாரத்துக்கு உட்பட்ட ஐ.என்.எஸ்.குஞ்சலி என்ற கப்பலில் நானாவதியை வைத்திருந்தார்கள்.

அஹுஜாவை சுட்டுக் கொன்றதாக நானாவதி மீது குற்றம் சாட்டி வழக்கு பதிவாயிற்று. செஷன்ஸ் கோர்ட்டில் 1959-செப்டெம்பர் 23-ஆம் தேதி நீதிபதி ஆர்.பி.மேத்தாவின் முன்னிலையில் விசாரணை நடந்தது. பிராஸிக்யூஷன் தரப்பில் ஸி.எம்.திரிவேதியும் எதிரியின் தரப்பில் கார்ல் ஜே.கண்டலவாலாவும் தீவிரமாக வழக்கை நடத்தினார்கள்.

நானாவதி வேண்டுமென்றே பழிக்குப் பழி வாங்கும் எண்ணம் கொண்டு திட்டமிட்டு அஹுஜாவை சுட்டுக் கொன்றதாகப் பிராஸிக்யூஷன் தரப்பினர் கூறினார்கள். நானாவதியோ, நான் அஹுஜாவை வேண்டுமென்றே சுடவில்லை. அஹுஜாவுடன் எனக்கு நேர்ந்த கைகலப்பினிடையே என் கையிலிருந்த துப்பாக்கிக் குதிரை தற்செயலாக இயங்கி, ரவைக்ள் தவறிப் பாய்ந்து அஹுஜா மீது பட்டுவிட்டன. அதனால் அவன் இறந்தான் என்று கூறினார்.

நம்முடைய மூன்று பச்சிளங் குழந்தைகளின் நலனையாவது எண்ணிப் பார். அஹுஜா மீது நீ கொண்டிருக்கும் மோஹத்தை விட்டுவிடு என்று தம்முடைய மனைவியிடம் நானாவதி

கூறினாராம். ஆனால் அவள் அது தன்னால் இயலாத காரியம் என்று சொல்லிவிட்டாளாம். அதனால் தமக்கு வாழ்க்கையே வெறுத்துவிட்டதாகவும், தம்மைத் தாமே சுட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொள்ளத் தீர்மானித்ததாகவும் நானாவதி கூறினார். ஆனால் அதற்கு முன் தம் கடமை ஒன்றைச் செய்துவிட எண்ணினாராம். தமக்குத் துரோகம் இழைத்த அந்த அஹுஜாவை இதன் பொருட்டே காணச் சென்றாராம். அதாவது, தம் மனைவியை முறைப்படி மணந்து கொண்டு மூன்று குழந்தைகளையும் வளர்க்கும் பொறுப்பையும் அஹுஜா ஏற்கச் செய்ய வேண்டும் என்று நானாவதி விரும்பினாராம். ஆனால் அஹுஜாவிடம் பேச்சுக் கொடுத்தவுடனேயே அவன் தமது மனநிலையைச் சற்றும் உணராமல் பண்பற்ற முறையில் ஆத்திரமடைந் தானாம். அதோடு நிற்காமல், என்னோடு இரவைக் கழிக்கும் ஒவ்வொரு பெண்ணையும் நான் மணந்து கொள்வது என்பது முடியுமா? என்று துடுக்காக ஏதேதோ பேசினானாம். நானாவதிக்கும் ஆத்திரம் உண்டாகவே, அங்கே நிகழ்ந்த கைகலப்பில் துப்பாக்கிக் குண்டு தவறுதலாய்ப் பாய்ந்து அஹுஜாவைக் கொன்றுவிட்டதாம். இதெல்லாம் நானாவதியின் வாக்குமூலம். தண்டனைக்கு நான் அஞ்சவில்லை. என் வீட்டு விவரங்கள் பகிரங்கமாக வெளியான பின் உலகில் வாழவே எனக்குப் பற்றுதல் இல்லை. ஆனால், நான் நிரபராதி என்று மட்டும் உலகுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன் என்று இறுதியில் அவர் கூறினார்.

நானாவதி மிகவும் அமைதியான சுபாவம் படைத்தவர் ; எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடியவர் அல்ல என்று அவருடைய ரெக்கார்டுகளிலிருந்து தெரிகிறது. மேலும், அவர் நன்றாய்ப் படித்தவர். சட்டங்களைப் பற்றி நன்றாய் அறிந்தவர் ; ஒரு மனிதனைச் சுட்டுக் கொன்றால் அதனால் ஏற்படக் கூடிய பலா பலன்களைப் பற்றிச் சிந்திக்காமல் இருந்திருக்கமாட்டார். இதில்

அவருடைய மனைவியும் சம்பந்தப்பட்டிருப்பதால் அவர் ஏதாவது விபரீதமான காரியம் செய்யும் முன்பு நிச்சயம் சிந்தித்தேயிருப்பார். ஆகவே, நானாவதி வேண்டுமென்றே அஹுஜாவைக் கொலை செய்திருக்கமாட்டார் என்றுதான் இன்றும் பல மக்கள் நம்புகிறார்கள். ஆனால் மக்கள் ஒன்றை நம்புகிறார்கள் என்பதற்காகக் கோர்ட்டின் சட்ட நீதியை மாற்ற முடியுமா?

பிராஸிக்யூஷன் தரப்பில் சாட்சியம் கூறிய மேமி, என் சகோதரனுக்குப் பர்மிட் (அனுமதி) இருந்ததென்றாலும், அவன் மது அருந்தி நான் கண்டதேயில்லை. அயல் பெண்களை எங்கள் இல்லத்துக்கு வரவழைத்து, அஹுஜா ஒரு நாளும் அளவளாவியதேயில்லை. என் சகோதரன் ஒருபோதும் திருமணம் செய்து கொள்ளவில்லை. பாமி என்ற பெண்ணைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. அவனுக்கு வந்திருந்த காதல் கடிதங்களைப் பற்றியும் எனக்கு ஏதும் தெரியாது. போலீஸார் கைப்பற்றிய போட்டோக்களில் உள்ள பெண்மணிகளைப் பற்றி எனக்குத் தெரியவே தெரியாது என்றெல்லாம் சொன்னாள். எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல் அஹுஜாவை ஸில்வியா காதலித்ததே எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால், டில்லியிலிருந்து பம்பாய் வரும்போது அவளை எங்கள் காரில் ஏற்றி வரச் சம்மதித்திருக்க மாட்டேன். தான் ஸில்வியாவை மணக்க விரும்பியதாக அஹுஜா கூறியபோது, அது முறையல்ல, கூடாது என்று மட்டும் பேச்சுவாக்கில் நான் சொல்லியதுண்டு. ஆனால் எனக்கு அவர்களுடைய அந்தரங்கத்தைப் பற்றி ஒன்றும் திட்டமாகத் தெரியாது என்றாள்.

பிராஸிக்யூஷனின் மற்றொரு முக்கிய சாட்சி அஹுஜாவின் வேலைக்காரனான அஞ்சனி. துப்பாக்கி சுட்ட ஓசை கேட்டு நானும் மேமியும் அஹுஜாவின் படுக்கை அறையில் நுழைந்த

போது, அங்கே கையில் துப்பாக்கியுடன் நானாவதி நின்று கொண்டிருந்தார். மிகவும் ரௌத்ராகாரத்துடன், எவரும் அஹுஜாவிடம் நெருங்கக் கூடாது ; மீறினால் சுட்டுவிடுவேன் என்று மிரட்டினார் என்றான் அவன். குறுக்கு விசாரணையின் போது, இந்த இருபத்தொரு வயசு அஞ்சனி, நான் ஒருபோதும் என் எஜமானருக்கு மது அளித்ததில்லை. எனக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று கூறினான். ஆனால் வீட்டில் மேமி இல்லாத நேரங்களில், என் எஜமானர் மட்டுமே தனித்திருப்பார். அப்போது ஸில்வியா அடிக்கடி அங்கே வருவது வழக்கந்தான். எப்படி வெண்ணையும் பிற சாமான்களும் தீர்ந்துவிடுகின்றன என்று மேமி ஒருமுறை என்னை விசாரித்தாள். ஸில்வியா அடிக்கடி வந்து அஹுஜாவுடன் அளவளாவுவதையும் இருவரும் சேர்ந்து டிபன் சாப்பிடுவதையும் அப்போது மேமியிடம் நான் தெரிவித்தேன் என்றான். தனக்கு எதுவும் தெரியாது என்று மேமி சாதித்ததை அஞ்சனி இதன் மூலம் பொய்யாக்கிவிட்டான். மேலும், விசாரணையில் அவன் திணறித் தத்தளித்து ஒன்றுக்கு ஒன்று முரணாக உளறிக் கொட்டினான்.

பிறகு, பிராஸிக்யூஷன் தரப்பில் கமாண்டர் ஸாமுவேல் சாட்சியம் கூறினார். சம்பவத்துக்குப் பின் நானாவதி தம்மிடம் முதலில் சந்தித்த விவரத்தை நடந்தபடி கூறினார்.

அஹுஜாவின் பிரேத பரிசோதனை ரிப்போர்ட்டைப் போலீஸ் ஸர்ஜனான டாக்டர்.ஆர்.எம்.ஜாளா சமர்ப்பித்தார். அஹுஜாவின் ரத்தத்தைப் பரிசோதித்ததில் அவனுக்கு குடிப் பழக்கம் உண்டு என்று தெரிந்தது. இறக்கச் சுமார் இருபது நிமிடத்துக்கு முன்பு கூட அவன் குடி மயக்கத்தில் இருந்திருக்கிறான் என்று அந்த ரிப்போர்ட்டிலிருந்து தெரிய வந்தது. அஹுஜா மீது பாய்ந்த மூன்று குண்டுகளும் மண்டையின் இடது பக்கம் மார்பு, இடது கைவிரல்கள்

இவற்றைத் துளைத்திருந்தன. மார்பு, விரல்கள் இவற்றின் மீது குண்டுகள் பாய்ந்த பின்பே மண்டையில் கடைசி குண்டு பாய்ந்திருக்க வேண்டும். அதுவே உடனடியாக உயிரைக் குடித்திருக்க வேண்டும். மற்ற இரண்டு இடங்களில் மட்டுமே குண்டுகள் பாய்ந்திருந்தால், அஹுஜா இறக்காமல் பிழைத்திருக்கக் கூடும். குண்டுகள் பாய்ந்திருக்கும் கோணத்தை கவனித்தால், அவை தவறிப் பாய்ந்திருக்க வழியில்லையென்று தோன்றுகிறது. யாரோ வேண்டுமென்றே குறி பார்த்துச் சுட்டிருக்க வேண்டும் என்று நம்ப இடமிருக்கிறது. நானாவதியின் கைத்துப்பாக்கி முனையிலிருந்து குறைந்த பட்சம் 18 அங்குல தொலைவிலாவது அஹுஜா இருந்திருக்க வேண்டும். அப்போதுதான் அந்த மாதிரி கோணத்தில் குண்டுகள் பாய்ந்திருக்க முடியும். நானாவதி தமது வாக்குமூலத்தில் கூறியது போல் இருவரும் கைகலந்திருக்கும் வேளையில் தவறிப் போய்க் குண்டுகள் பாய்ந்திருந்தால், அவை அஹுஜாவின் உடம்பில் தென்பட்ட இடங்களில் பாய்ந்திருக்க வழியில்லை என்று டாக்டர் கூறினார்.

இந்தச் சாட்சியங்களை சர்க்கார் தரப்பு வழக்கறிஞர் ஸி.எம்.திரிவேதி ஆதாரமாகக் கொண்டு வாதித்தார். நானாவதி வேண்டுமென்றே பழிக்குப் பழி வாங்கும் பொருட்டுத் திட்டமிட்டு ஆத்திரத்தில் அஹுஜாவைச் சுட்டுக் கொன்ற குற்றவாளியே என்று முடித்தார்.

அவரது வாதத்தையும் எதிரி தரப்பு வழக்கறிஞரின் வாதத்தையும் (எதிரி தரப்பில் ஸில்வியாவும் ஒரு பிரதான சாட்சி) கேட்டு முடித்த ஒன்பது ஜூரர்களும் 1959-ஆம் ஆண்டு அக்டோபர் 21-ஆம் தேதி தங்கள் தீர்ப்பை வெளியிட்டார்கள். ஜூரர்களில் எட்டுப் பேர் நானாவதி குற்றவாளி அல்ல என்றும் ஒரே ஒருவர் மட்டும் அவர் குற்றவாளிதான் என்றும் தீர்ப்பளித்தார்கள்.

ஆனால் நீதிபதி மேத்தாவோ ஜூரர்களின் தீர்ப்பில் நியாயமில்லை என்று தாம் கருதுவதாகவும், எனவே, வழக்கை மேல் கோர்ட்டுக்கு அனுப்ப விரும்புவதாகவும் தெரிவித்தார்.

இதற்கிடையில் நானாவதியைக் கடற்படையின் பாதுகாப்பிலிருந்து அகற்றிப் போலீஸ் பாதுகாப்பில் வைக்க வேண்டும் என்று திரிவேதி விண்ணப்பித்துக் கொண்டார். நீதிபதி அதை ஏற்க மறுத்துவிட்டார்.

சம்பந்தப்பட்ட சகல தஸ்தாவேஜுகள் சகிதம் வழக்கை மேல் கோர்ட்டுக்கு மேத்தா அனுப்பி வைத்தார். 1960-ஆம் ஆண்டு பிப்ரவரி 10-ஆம் தேதி நீதிபதிகள் ஜே.எம்.ஷேலத், வி.ஏ.நாயுக் இவர்கள் முன்னிலையில் வழக்கு நடைபெற்றது. இந்த முறை சர்க்கார் தரப்பில் ஒய்.வி.சந்திரசூட், வி.எச்.குமாஸ்தே, ஸி.எம்.திரிவேதி இந்த மூவரும் வழக்காடினார்கள். எதிரி தரப்பில் ஏ.எஸ்.ஆர்.சாரி, ரஜனி பட்டேல், எஸ்.ஆர்.வக்கீல் இந்த மூவரும் வாதாடினார்கள்.

இறுதியில் நீதிபதி ஷேலத் தங்கள் தீர்ப்பை வாசித்தார். நானாவதியைக் குற்றவாளியென்றே நீதிபதிகள் முடிவு செய்து நானாவதிக்கு ஆயுள் தண்டனை விதித்தார்கள்.

ஆனால் அந்தச் சமயத்தில் மகாராஷ்டிர கவர்னராக இருந்த ஸ்ரீ பிரகாசா தமது விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்தி ஓர் உத்தரவிட்டார். ஸுப்ரீம் கோர்ட்டுக்கு நானாவதி அப்பீல் செய்து கொள்ளப் போவதால், அது விசாரணைக்கு வரும் வரையில் அவர் சிறை புகத் தேவையில்லை. கடற்படையின் பாதுகாப்பிலேயே அவரை வைத்திருக்கலாம் என்பதுதான் அந்த உத்திரவு.

பொதுஜனங்களைக் கவர்னரின் இந்த உத்தரவு ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. இந்தியப் பாராளுமன்றத்தில் கூடக்

கேள்வி வந்தது. அரசியல் குற்றவாளியல்லாத - கொலைக் குற்றம் புரிந்து தண்டனைக்கு ஆளான - தனி நபரான ஒரு குற்றவாளியின் விஷயத்தில் தலையிடக் கவர்னருக்கு உரிமை இருக்கிறதா? என்றெல்லாம் பலத்த விவாதங்கள் எழுந்தன. நானாவதி பெரிய இடத்து ஆசாமி என்பதாலேயே அவருக்கு இந்த நியாயமற்ற சலுகை கிடைத்ததாகக் கூடப் பச்சையாகச் சிலர் கூறினார்கள். தம்மை இது சம்பந்தமாக இந்தியக் கடற்படையின் பிரதான அதிகாரியும் தலைவருங்கூட அணுகி வாதித்ததாகப் பாராளுமன்றத்தில் பிரதம மந்திரி நேரு குறிப்பிட்டார்.

நானாவதியின் மீதுள்ள மோஹத்தாலோ, அவர் பெரிய ஆபீஸர் இல்லையா என்ற நினைப்பாலோ அவரைச் சிறைத் தண்டனையிலிருந்து மீட்கக் கவர்னர் நினைத்ததாகச் சிலர் கூறியதை முற்றும் அபத்தம் என்று நேரு மறுத்துவிட்டார்.

ஆனால், நானாவதி எவ்வளவு முயன்றும் அவரது அப்பீலை ஏற்க ஸுப்ரீம் கோர்ட் ஏனோ மறுத்துவிட்டது. என்றாலும் ஐந்து நீதிபதிகள் ஒன்று கூடி நானாவதியின் விஷயத்தில் கவர்னரது குறுக்கீடு நியாயமானதுதானா என்பதைப் பற்றி விவாதித்தார்கள். அந்த ஐவருள் பிரதம நீதிபதியைத் தவிர, மீதி நால்வரும் இவர்கள் : கே.டி.தேசாய், ஜே.ஆர்.முதோல்கர், எஸ்.டி.தேசாய், பி.என்.கோகலே. நானாவதி இந்திய சர்க்காரின் கடற்படையைச் சேர்ந்த அதிகாரியாக இருந்தவர் ; ஆகவே, நீதிபதிகளின் தீர்ப்பை மீறி நானாவதி விஷயத்தில் குறுக்கிட மகாராஷ்டிர கவர்னரான ஸ்ரீபிரகாசாவுக்கு அதிகாரமேயில்லை என்று பிரதம நீதிபதியும் கே.டி.தேசாயும் அபிப்ராயம் கூறினார்கள்.

இந்தச் சமயம் நானாவதிக்கு வேறு சில சிரமங்களும் உண்டாயின. அவருக்கு அவரது வழக்குச் செலவுக்கு ரூ.10,000

உதவிப் பணமாக அரசாங்கம் அனுமதி செய்திருந்தது. பதவியில் இல்லாமல் கடற்படையின் பாதுகாப்பில் உள்ள ஒரு மாஜி அதிகாரிக்கு இந்தச் சலுகை கிடைத்திருப்பது சரியில்லை என்று ஆடிட்டர்-ஜெனரல் குறை கூறினார். நிதி மந்திரி மொரார்ஜி தேசாய் வரையில் இந்த அறிக்கை சென்றது.

1960-ஆம் ஆண்டு ஏப்ரல் 5-ஆம் தேதி ஸுப்ரீம் கோர்ட்டின் வழக்கறிஞர்கள் சங்க கூட்டம் ஒன்று பாரத நாட்டின் அட்டார்னி-ஜெனரலான எம்.ஸி.சித்தல்வாடின் தலைமையில் கூடியது. நானாவதியின் விஷயத்தில் கவர்னர் தலையிட்டது பற்றி ஒரு விவாதம் நடந்தது. கவர்னரின் செயலைப் பலர் அதில் கண்டித்தார்கள். கவர்னருக்கு நானாவதியின் ஆயுள் தண்டனையைத் தடுத்து நிறுத்த ஏதும் அதிகாரம் இல்லை என்று அந்த சங்கம் செப்டெம்பர் 5-ஆம் தேதி ஒரு தீர்மானமும் செய்தது. தவிர, நானாவதி ஐயத்துக்கிடமில்லாமல் குற்றவாளியே என்று ஸுப்ரீம் கோர்ட் கூறியது. எனவே, நானாவதியின் அப்பீலை ஏற்க நிர்த்தாட்சிண்யமாக அது மறுத்துவிட்டது. இவை காரணமாகச் சற்றே மனவருத்தமடைந்த ஸ்ரீபிரகாசா தம்முடைய பதவியிலிருந்து விலகிவிடலாம் என்று பத்திரிகைகள் ஹேஷ்யம் கூறின. பொதுமக்களும் பலவிதப் புரளியைக் கிளப்பினார்கள். நானாவதியும் ஹைகோர்ட்டின் தீர்ப்புக்கு உட்பட்டுச் சிறைத் தண்டனையை ஏற்பதைத் தவிர வேறு வழியில்லை என்று ஆகிவிட்டது.

ஆகவே 1960-ஆம் ஆண்டு செப்டம்பர் 8-ஆம் தேதி கடற்படை ஸாமுவேலின் கண்காணிப்பிலிருந்து நானாவதி அகன்றார். தன் செய்கைக்காகப் பரிதவித்துக் கண்ணீர் விட்டுக் கதறியழுத ஸில்வியாவிடமும், முதுவயதினரான தம் பெற்றோரிடமும், சின்னஞ்சிறு குழந்தைகளிடமும் பிரியா

விடைபெற்றுக் கொண்டார். போலீஸ் ஜீப்பில் ஏறி ஆர்த்தர் ரோடு சிறைச்சாலையில் தமது தண்டனைக் காலத்தைக் கழிக்கச் சென்றார். வழியெல்லாம் ஜீப்பை மக்கள் புடை சூழ்ந்து கொண்டு, நானாவதி வாழ்க, அஹூஜா வீழ்க என்றெல்லாம் கோஷமிட்டபடி அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார்கள்.

இரண்டாம் உலக யுத்தத்தில் மூன்று முனைகளில் தீவிரமாகப் போர் புரிந்து வெற்றி வாகை சூடிய திறமைசாலியான ஒரு தளபதி நானாவதி. அப்படிப்பட்டவர் வீணே தம் பொன்னான வாழ்க்கையை நாட்டின் இந்த நெருக்கடியான நாளில் சிறையில் கழிக்க வேண்டியதுதானா என்று மக்கள் வருந்தினார்கள். சூழ்நிலைக் கோளாறினால் குற்றம் புரிய நேர்ந்த ஒரு நல்ல மனிதருக்கு மன்னிப்பே கிடையாதா? கருணை காட்டி நானாவதியை விடுவித்துப் பாரத நாட்டுச் சேவைக்கு அவரை மீண்டும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணற்ற பொதுமக்கள் கையொப்பமிட்டு நம் அருமை ராஷ்டிரபதிக்கு ஒரு மகஜரும் அனுப்பினார்கள். எப்படியும் சில வருஷ காலம் வீரர் நானாவதி சிறைவாசம் அனுபவித்துவிட்டார்.



# 6. கனகா மரண மர்மம்

ஒரிஸ்ஸா மாகாணத்தைச் சேர்ந்த அவுல் சம்ஸ்தானத்தில் சத்ரசகடா என்ற கிராமத்தில் ஹரேகிருஷ்ண மஹந்தி என்ற குடியானவன் வசித்து வந்தான் ; விவசாயிகளின் ஒரு பிரிவான கரன் வகுப்பைச் சேர்ந்தவன். கரன் வகுப்புப் பெண்களை ஆசை நாயகிகளாக ஒரிஸ்ஸாவின் அரச குடும்பத்தினர் வைத்துக் கொள்ளும் வழக்கம் தொன்று தொட்டு இருந்து வந்தது.

ஹரேகிருஷ்ண மஹந்தியின் முதல் மனைவி இறந்து போனாள். மஹந்திக்கு அவளிடம் பிறந்த இரண்டு பெண்கள் இருந்தார்கள். 1926-ஆம் ஆண்டு இந்தப் பெண்களில் மூத்தவளான கனகாதேவி பன்னிரண்டு வயதினள், புஷ்பவதி ஆகவில்லை. ஆனாலும் கூட வாட்ட சாட்டமாய் வளர்ந்து ஆண்களின் மனத்தைக் கவரும் ஒயிலோடு விளங்கினாள். அவுல் சமஸ்தானாதிபதியான ராஜா விரஜசுந்தரத்தோன் ஒரிஸ்ஸாவில் கடக் ஜில்லாவில் பணம் படைத் ராஜபுத்திர வம்சத்தைச் சேர்ந்தவன். 1926-ஆம் ஆண்டில் இந்த ராஜாவுக்கு 42 வயது. இவனைச் சட்டப்படி மணம் செய்து கொண்ட மூன்று மனைவிகளும் ஏராளமான ஆசை நாயகிகளும் இவனுடைய அந்தப்புரத்தில் இருந்தார்கள். ஓயாமல் வேட்டையாடிப் பல அழகிகளைக் கொண்டு வந்து சேர்ப்பதற்காகக் கொழுத்த சம்பளம் கொடுத்து அந்தரங்க ஆபீஸர்கள் என்ற பெயரில் ஒரு குழுவையும் இவன் அமர்த்திக் கொண்டிருந்தான்.

இத்தகைய காமப்பித்தனின் செவிகளில் கனகாதேவியின் ரூபசௌந்தரியத்தைப் பற்றி யாரோ சொல்லிவிட்டார்கள். அவ்வளவுதான். ராஜா உடனே மங்கோபிந்துதால் என்பவனையும் அந்தரங்க ஆபீஸர்களில் இருவரையும் 1926-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சத்ரசகடாவுக்கு அனுப்பி வைத்தான்.

இந்த மூவரும் ஹரேகிருஷ்ண மஹந்தியைச் சந்தித்து அவனுடைய பெண்ணை ராஜாவுக்காக விலை பேசினார்கள். ஏதோ ஆடு மாடு விவகாரம் போல் பேரம் நடந்தது. இறுதியாக ஹரேகிருஷ்ணன் தன் பெண்ணை ஐந்நூறு ரூபாய்க்கு ராஜாவுக்கு விற்பனை செய்வதாக ஒப்புக் கொண்டான்.

இதோ சத்ரசகடாவில் முற்போக்குக் கொள்கையுடைய ஜுகல் கிஷோர் தாஸ் என்ற படித்த இளைஞன் ஒருவன் இருந்தான். இவனும் கரன் வகுப்பினன்தான். அர்த்தமற்ற மூட வழக்கத்தால் தன் வகுப்பு யுவதிகள் சிற்றரசர்களின் காமப் பித்துக்குப் பலியாவதைக் கண்டு நெஞ்சம் கொதித்த அவன் இந்தக் கொடுமையை எப்படியாவது நிறுத்திவிடத் தீர்மானித்தான். அவனுடைய தந்தை பாம்தேவ் தாஸும் மகனுடைய நல்ல கருத்தை முற்றும் ஆமோதித்தார். இதே கிராமத்தில் மற்றொரு சிறிய மிராசுதாரான ரிஷாமணி தாஸும் இவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

ராஜா விரஜசுந்தருக்குக் கனகாதேவி விலையான விஷயம் இந்த மூவருக்கும் தெரிந்தவுடன் வெகுண்டு நேரே ஹரிகிருஷ்ணனிடம் சென்றார்கள். அவனைக் கண்டவாறு ஏசினார்கள். இவ்வாறு தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்த அவர்களிடமும் அவன் பச்சீஸ் சவால் என்ற தங்கள் ஜாதி மாமூல் சட்டப் புத்தகத்திலிருந்து மேற்கோள் எடுத்துக் காட்டினான். தான் ஒன்றும் செய்யத் தகாத குற்றத்தைச் செய்துவிடவில்லை என்று சாதித்தான். அவனோடு பேசிப் பயனில்லை என்று அந்த மூவரும் திரும்பினார்கள்.

1926-ஆம் ஆண்டு செப்டம்பர் 19-ஆம் தேதி விரஜசுந்தரின் பணியாட்கள் ஹரேகிருஷ்ணனிடம் ஐந்நூறு ரூபாயைக் கொடுத்துக் கனகாவின் விற்பனையை உறுதிப் படுத்திவிட்டார்கள். உடனே மங்கோபிந்து தால் ஒரு பல்லக்குக்கு ஏற்பாடும் செய்துவிட்டான். அன்று மாலையிலேயே ஹரேகிருஷ்ணனின் வீட்டில் ராஜாவின் செலவில் ஒரு விருந்து நடந்தது. அதில் சுரன் வகுப்பைச் சேர்ந்த சிலரே கலந்து கொண்டார்கள். ஜுகல் கிஷோரின் தலைமையில் பலர் விருந்து அழைப்பை நிராகரித்து விட்டார்கள்.

கனகாவை ஏற்றிக் கொண்டு போக ஆயத்தமாகப் பல்லக்கு ஹரேகிருஷ்ணனின் இல்லத்துக்கு ஒரு வாரத்தில் வந்து சேர்ந்தது. சிற்றரசர்களின் கேளிக்கைகளைப் பற்றி ரத்தத்தை உறைய வைக்கும் பல பயங்கரக் கதைகளை ஏற்கனவே அந்த பேதைச் சிறுமி கேள்விப்பட்டிருந்தாள். ஆகவே, தந்தை என்ன சொல்லியும் பல்லக்கில் ஏற மறுத்து விட்டாள். அவளைப் பல்லக்குத் தூக்கிகள், பலவந்தமாகக் கட்டிப் பிடித்து அலற அலறத் தூக்கிப் பல்லக்கில் போட்டு மூடினார்கள். கிராமத்து நாவிதனும், கனகாவின் சகோதரன் ஒருவனும் பல்லக்கைப் பின்தொடர்ந்து சென்றார்கள். ராஜாவின் அரண்மனைக்குச் சென்றதும், இந்த இருவரையும் காவலர்கள் உள்ளே அனுமதிக்கவில்லை. கதறக் கதறக் கனகாவை மட்டும் அந்தப்புரத்துக்குக் குண்டுக்கட்டாகத் தூக்கிச் சென்றார்கள். இதன் பின்பு அந்தப் பேதைப் பெண்ணின் சுவடே இல்லாமல் போயிற்று.

ஏறக்குறைய ஒரு மாதம் சென்றது. கனகாதேவி இறந்துவிட்டதாகத் தகவல் கிடைத்தது. அதைக் கேட்டுச் சத்ரசகடா கிராமமே திடுக்கிட்டது. அரண்மனையிலிருந்து வந்த தகவல் மூலம் கனகாவுக்கு ஜுரமும், ஜன்னியும் உண்டாயிற்று. நாட்டு வைத்தியர் ஒருவரும் அலோபதி டாக்டர் ஒருவரும்

சிகிச்சை செய்தும் அவள் பிழைக்கவில்லை என்று தெரிய வந்தது.

ஆனால் ஜனங்கள் இதை நம்பவில்லை. ராஜாவின் காமப் பித்துக்குப் பலியாகியே சிறுமி கனகா இறந்துவிட்டாள் என்று அவர்கள் எண்ணினார்கள். பன்னிரண்டே வயது ; பருவம் அடையாதவள். இத்தகைய சிறுமியிடம் நாற்பத்திரண்டு வயதான ராஜா அருவருக்கத் தக்க முறையில் நடந்து கொண்டிருக்கிறான். அந்தக் கொடூரத்தின் விளைவாகக் கனகா இறந்துவிட்டாள். இந்தச் செய்தி ஊரிலே பரவியது. கனகாவின் மர்மமான மரணத்தைக் கேட்டுக் கரன் வகுப்புச் சீர்திருத்தவாதிகள் ஆத்திரம் அடைந்தார்கள். கிஷோருடன் இப்போது நந்தகிஷோர் என்ற இளம் பட்டதாரியும் சேர்ந்து கொண்டான். இருவரும் அடிக்கடி பொதுக்கூட்டங்கள் கூட்டினார்கள். இனி இந்தக் கொடுமை நிகழாதபடி தடுக்க வேண்டுமென்று ஆவேசப் பிரசங்கங்கள் செய்து வந்தார்கள்.

ஆனால் கனகா இறந்து நாலு மாதங்களுக்குள் தன் இரண்டாவது பெண்ணையும் ராஜா விரஜசுந்தருக்கு ஹரேகிருஷ்ணன் விலை பேசப் போகிறான் என்ற வதந்தி பரவியது. அந்தப் பெண்ணுக்குப் பதினொரு பிராயங்கூட நிரம்பவில்லை. ராஜாவின் ஆட்கள் இந்தப் பேரத்தை மெய்ப்பிப்பது போல் ஹரேகிருஷ்ணனின் வீட்டுக்கு அருகில் நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

இதைக் கேட்டு ஜுல்கிஷோர் குழுவினர் வெகுண்டார்கள். கூட்டங்கள் போட்டு ஹரேகிருஷ்ணனின் செயலைப் பலமாய்க் கண்டித்தார்கள். 1927-ஆம் ஆண்டு மார்ச் 27-ஆம் தேதி நடைபெற்ற கூட்டம் ஒன்றில் இளைஞன் நந்தகிஷோர், கேவலம் ஐநூறு ரூபாய்க்காக அறியாச் சிறுமி ஒருத்தி அகால மரணம் அடைந்தாள். அதே போன்ற மற்றொருத்தி இதோ பலியாகப் போகிறாள் என்றெல்லாம் காரசாரமாகப் பேசினான். ஆயினும் படிப்பு வாசனையற்று,

மூட சம்பிரதாயங்களிலேயே கண்மூடித்தனமாக ஊறித் திளைத்திருந்த பாமரர்கள்தான் அந்தக் கூட்டத்தில் நிறைந்திருந்தார்கள். நந்தகிஷோரின் ஆவேசப் பேச்செல்லாம் விழலுக்கு இறைத்த நீராயிற்று. மிகவும் அழகு வாய்ந்த ஒரு பெண்ணை வெறும் ஐநூறு ரூபாய்க்கு விற்று, தங்கள் இனத்துப் பெண்களின் விலை மதிப்பைக் குறைத்துவிட்டதற்காக ஹரேகிருஷ்ணனிடம் அவர்களுக்குக் கோபம். இந்தப் பிச்சைக் காசை ராஜாவின் முகத்திலேயே வீசி எறி என்றுதான் அவர்கள் அவனைத் தூண்டினார்கள். அந்தப் புண்ணியவான் அதைக் கூடச் செய்ய மறுத்தான்.

சில நாட்கள் கழித்து. ஹரேகிருஷ்ண மஹந்திக்கும் அவனுடைய மகனுக்கும் ராஜாவின் அரண்மனையிலேயே நல்ல சம்பளத்தில் வேலைகள் கிடைத்தன. பிறகு அவனுடைய இரண்டாவது பெண்ணின் கதியும் மூடு மந்திரம் ஆகிவிட்டது. இதோடு போகவில்லை. ராஜாவுக்காக, அவனுடைய் இரண்டு ஆட்கள், மங்கோபிந்துதால், ஹரேகிருஷ்ண மஹந்தி இந்த நாலு பேரும் வேறொருவரின் பெண்ணை வாங்கப் பேரம் செய்வதாக வதந்தி கிளம்பியது.

இனிக் கூட்டமும் பிரசங்கமும் பயனில்லை என்று கரன் வகுப்புச் சீர்திருத்தவாதிகள் எண்ணினார்கள். கடக் போலீஸாரிடம் ராஜாவின் செயல்களைப் பற்றி ஜுகல்கிஷோர், நந்தகிஷோர் இருவரும் ஒரு புகார் மனு கொடுத்தார்கள்.

இதன்மேல் இரண்டு போலீஸ் அதிகாரிகள் புலன் விசாரணை நடத்தச் சத்ரசகடாவுக்கு வந்தார்கள். மைனர் பெண் விற்பனையைப் பற்றித் தேவையான ருசுக்கள் அவர்களுக்குக் கிடைத்தன. போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவரை உடன் அழைத்துக் கொண்டு டெபுடி போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் ராஜா விரஜசுந்தரின் மாளிகைக்கு விஜயம் செய்தார்.

அதிகாரிகளிடம் ராஜா கூறினான் : கனகாவின் தகப்பன் மகா ஏழை. அவளை வைத்துப் போஷிக்க அவனால் இயலவில்லை. அவனே அவளை அரண்மனைக்கு அழைத்து வந்து என்னிடம் ஒப்படைத்தான். நான் அவளை விலைக்கு வாங்கியதாகச் சொல்வதெல்லாம் பொறாமைக்காரர்களின் சூழ்ச்சி. கனகாவை அரண்மனையில் நன்றாகவே தாதிகள் கண்காணித்து வந்தார்கள். அவளுக்கு ஜுர வேகத்தால் ஜன்னி கண்டது. நாட்டு வைத்தியரும், அலோபதி டாக்டரும் அவளுக்குச் சிகிச்சை செய்தார்கள். கனகாவைக் காமக்கிழத்தியாக வைத்துக் கொள்ள நான் ஒருபோதும் நினைத்ததில்லை. அவளிடம் எந்தவிதமான தகாத உறவும் வைத்துக் கொள்ளவில்லை.

ராஜாவின் இந்தப் பசப்பு வார்த்தைகளில் போலீஸார் மயங்கிவிட்டார்கள். கனகாவின் மர்மச் சாவைப் பற்றி இதற்குமேல் புலன் விசாரணை தேவையில்லை என்று கருதிவிட்டார்கள். ஆனால் கனகாவை விலைக்கு விற்றதாக வந்த புகார் பற்றி மட்டும் கூடக் மாஜிஸ்டிரேட் முன்பு விசாரணை நடந்தது. இந்த வழக்கில் மங்கோபிந்து தால், ஹரேகிருஷ்ண மஹந்தி, ராஜாவின் இரண்டு ஆட்கள் ஆக நாலு பேர் எதிரிகள்.

கனகாவை ராஜாவுக்கு நான் விற்கவுமில்லை. அதற்கு விலையாக ஐநூறு ரூபாய் பணம் வாங்கவுமில்லை. தவிர கனகா பன்னிரண்டு வயதுச் சிறுமியே அல்ல. அவள் பத்தொன்பது வயது மங்கை. அவளே விரும்பித்தான் ராஜாவை காந்தர்வ விவாகம் செய்து கொள்ள அரண்மனைக்குச் சென்றாள் என்று மஹந்தி கூறினான். ஆனால் கனகா பல்லக்கிலேறிச் செல்வதற்கு சில மணி நேரத்துக்கு முன்பு கூடச் சாலையில் விளையாடிக் கொண்டிருந்ததைக் கண்டதாகப் பலர் சாட்சியம் சொன்னார்கள். கரன் வகுப்புப் பெண்கள் பருவம் அடைந்த பின் வீட்டை விட்டு வெளியேறவே மாட்டார்கள். எனவே,

வளர்த்தியாயிருந்தாலும் கனகா சிறுமிதான் என்பது ருசுவாயிற்று. இன்னும் பல சாட்சியங்களால் கனகாவின் விற்பனை முற்றும் உண்மையே என்பது நிரூபணமாகிவிட்டது. இந்த வழக்கில் ஏனோ ராஜாவை யாரும் சம்பந்தப்படுத்தவில்லை. அவனை ஒரு சாட்சியாகக் கூட அழைக்கவில்லை. இதுதான் அதிசயம்.

குற்றம் ருசுவானாலும் அது குற்றமாகாது என்று எதிர்தரப்பு வக்கீல் வாதாடினார். கரன் வகுப்பில் இது மாமூலான பழக்கம் என்று கூறி பச்சீஸ் சவால் என்ற புத்தகத்தை இதற்கு மேற்கோளும் காட்டினார். மாஜிஸ்டிரேட்டும் அதை ஏற்றுக் கொண்டு எதிரிகளை விடுதலை செய்துவிட்டார்.

முரடனான ராஜா இதோடு விடவில்லை. தன் பணியாட்களைக் கோர்ட்டுக்கு இழுத்துச் சந்தி சிரிக்கச் செய்த சீர்திருத்தவாதிகளான ஜுகல் கிஷோர், நந்தகிஷோர் இருவரையும் மூட்டைப் பூச்சி நசுக்குவது போல் ஒரேயடியாக நசுக்கிவிட இதுவே தக்க தருணம் என்று தீர்மானித்தான். ஆகவே அவர்கள் மீது மான நஷ்ட வழக்கு தொடுத்தான்.

கடக் ஸபார்டினேட் ஜட்ஜான நித்யானந்த சிங்கின் முன்பு இது விசாரணைக்கு வந்தது. இந்த வழக்கில் ராஜாவே வாதி. அப்படியிருந்தும் கூண்டில் ஏறி சாட்சி சொல்ல அவனை அழைக்கவேயில்லை. பிரதிவாதியின் வக்கீல் கிளப்பிய ஆட்சேபணைக்கு, இது ஒன்றும் தவறில்லை என்று ஜட்ஜ் கூறிவிட்டார்.

இந்த வழக்கில் தன் சார்பில் வாதாட மிகப் பிரபலமான வக்கீல்களை ராஜா அமர்த்தியிருந்தான். அவர்களுடைய வாக்கு சாதுரியத்தால் அவனுக்கே வெற்றி கிட்டியது. ராஜாவுக்கு தனியாக ரூபாய் ஐயாயிரமும், அவனுக்கும் பணியாட்களுக்குமாகச் சேர்த்து ரூபாய் ஏழாயிரத்துக்கு ஒன்று

குறைவாகவும் ஜுகல்கிஷோர், நந்தகிஷோர் இருவரும் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பாயிற்று.

தீர்ப்பை எதிர்த்துப் பாட்னா ஹைகோர்ட்டுக்கு பிரதிவாதிகள் இருவரும் அப்பீல் செய்தார்கள். இடையில் ஜுகல்கிஷோர் காலமாகிவிடவே, வழக்கின் முழு பொறுப்பும் நந்தகிஷோர் தலையிலேயே விழுந்தது. என்றாலும், அவன் சளைத்துப் பின்வாங்கவில்லை. அப்பீலைப் பிரதம நீதிபதி ஸர் கூர்ட்னேடேரல் என்ற ஆங்கிலேயரும், நீதிபதி ஸர் க்வாஜா முகமது நூர் என்ற முஸ்லீமும் விசாரித்தார்கள்.

இரு தரப்பாரின் வாதங்களையும் செவியுற்ற பின், பிரதம நீதிபதி மிக விரிவான தீர்ப்பை வெளியிட்டார். ராஜாவுக்கு அஞ்சி நியாயமான நடவடிக்கைகளை எடுக்காமல் கடமையிலிருந்து வழுவிய போலீஸ் ஆபீசர்களையும் பாரபட்சமாகத் தீர்ப்புச் செய்த ஸபார்டினேட் ஜட்ஜையும் பலமாக அதில் கண்டித்தார். ராஜாவின் அந்தப்புர அபலைகளைப் பற்றி விரிவாகத் தாம் அறிந்ததைக் குறிப்பிட்டார். கனகா இறந்ததற்குக் காரணம் ராஜாதான் என்று திட்டமாகச் சொன்னார்.

அக்கிரமம் செய்திருக்கும் ராஜாவுக்கோ, அவனுடைய ஆட்களுக்கோ பிரதிவாதிகள் நஷ்ட ஈடு ஏதும் தர வேண்டியதேயில்லை. அது மட்டும் அல்ல. இந்த வழக்கில் பிரதிவாதிகளாக இருக்கும் இந்த இளம் சீர்திருத்தவாதிகள்தான் எளியவர்கள். இவர்களுக்கு ஏற்பட்ட செலவையும் ராஜாவே கொடுக்க வேண்டும். இருளடைந்திருக்கும் இந்தச் சோகமயமான வரலாற்றில் ஓர் ஒளிக் கீற்றைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். எப்பாடுபட்டாவது நீதியை நிலைநாட்டியே தீர்வது என்று அஞ்சா நெஞ்சத்தோடு வழக்காட முன்வந்த இந்த இளம் சீர்திருத்தவாதிகளைக் கண்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இவர்களைப் போல் பல இளம்

வீரர்கள் தோன்றுவார்களேயானால் பிற்போக்குப் பிராந்தியமும் முன்னேறிவிடும் என்பதில் ஐயமில்லை. இனியாவது ராஜா விரஜசுந்தர் போன்ற சுதேச ஸம்ஸ்தானாதிபதிகளின் விவகாரங்களில் கடமையுணர்ச்சியோடு போலீஸ் அதிகாரிகள் கண்காணிப்பு வைப்பார்கள் என்று நம்புகிறேன் என்று ஸர் கூர்ட்னி தம் நீண்ட தீர்ப்பை முடித்தார்.

இந்த வழக்கில் நந்தகிஷோர் குழுவினருக்கு ஓரளவு வெற்றி கிடைத்தது என்றாலும், இதை முழு வெற்றி என்று சொல்ல முடியாது. ஏனென்றால், கனகாவின் மர்மச் சாவுக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பே ராஜாவுக்கு ஏற்படவில்லை. ஸர் கூர்ட்னி போலீஸ்காரர்களுக்கு விடுத்த எச்சரிக்கையையும் யாரும் பின்பற்றவில்லை. இந்த நிகழ்ச்சிக்குப் பின்புங் கூடப் பல சுதேசி மன்னர்கள் இத்தகைய திருவிளையாடல்களில் ஈடுபட்டபடியேதான் இருந்தார்கள். பர்தோலிச் சிங்கம் என்று புகழ் பெற்ற நம் ஸர்தார் வல்லபபாய் படேல் ஒரு மந்திரியாகப் பதவியேற்ற பிறகு, அவர்தான் சுதேசி மன்னர்களின் கொட்டத்தைத் தீரமாய் அடக்கினார்.



# 7. பாவ்லா கொலை வழக்கு

நிகரற்ற ஓர் அழகி மும்தாஜ் பேகம் என்னும் நடன மாது. இன்றைக்குச் சரியாக எழுபது ஆண்டுக்கு முன்பு இந்தப் பெண்ணின் அதிரூப சௌந்தரியத்தால், பம்பாய் முனிஸிபல் கார்ப்பரேஷன் அங்கத்தினர் ஒருவர் கொலையுண்டார். அது சம்பந்தமாக இந்தூர் ஸம்ஸ்தான மன்னரின் கையாட்களில் மூவர் தூக்குக் கயிற்றில் தொங்கினார்கள். நால்வர் தீவாந்தர தண்டனைக்கு ஆளானார்கள். இது மட்டுமா? அந்த ஸம்ஸ்தானாதிபதி மகரி ராஜாதி ராஜ ராஜ ராஜேசுவரஸவாய் ஸ்ரீ ஸர் துக்கோஜி ராவ் ஹோல்கார் பகதூரும் தமது அரசுரிமையைத் துறக்க நேர்ந்தது.

அழகி மும்தாஜின் முன்னோர்கள் பஞ்சாப் மன்னர்களின் அரண்மனையில் பாடிப் பிழைத்து வந்தவர்கள். பஞ்சாப் சிம்மமான ஸ்ரீரண்ஜித் சிங் அரண்மனையின் அந்தப்புர மேற்பார்வை இந்த மும்தாஜின் கொள்ளுப் பாட்டியான ராணி மோஹரானிடம் இருந்ததாம்.

மும்தாஜின் தாய் வஸீர் பேகத்தின் காலத்தில் பஞ்சாபில் ஸம்ஸ்தான மன்னர்களின் ஆட்சி சளைத்துவிட்டது. பிழைப்புக்கு எளிதில் பணம் கிடைக்கக் கூடிய விபசாரத் தொழிலை அவள் மேற்கொண்டாள். தனது சொந்த ஊரான

அமிர்தஸரஸில் வரும்படி போதுமான அளவு கிடைக்காமல் போகவே, தன் பதின்மூன்று வயதுச் சிறுமியும் அழகியுமான மும்தாஜுடன் பம்பாய் நகரில் போய்க் குடியேறினாள்.

ஒரு முறை இந்தூர் ஸம்ஸ்தானத்தில் துக்கோஜிராவின் முன்னால் சிறுமி மும்தாஜ் அற்புதமாக நடனம் ஆடினாள். அவளுடைய எழிலிலும் நட்னத்திலும் துக்கோஜி தம் உள்ளத்தைப் பறி கொடுத்துவிட்டார். இரண்டு ராணிகள் தமக்கு மனைவிகளாக இருந்தும், பதின்மூன்று வயசு மும்தாஜை மூன்றாவது மனைவியாக மணந்து கொண்டு அவளுக்கு ராணி கமலா ஸாஹிபா என்று பெயரிட்டார். ஒரு மன்னரின் மனைவிக்கு உரிய வாழ்க்கை வசதிகளையெல்லாம் தாராளமாக இந்தக் கமலாவுக்கு அமைத்துத் தந்தார் என்றாலும் கமலா ஸாஹிபாவைப் பட்ட மகிஷி ஆக்க மறுத்துவிட்டார். இந்த விவாகத்தால் மும்தாஜுக்கு ஓரளவு வசதியான வாழ்க்கை கிடைத்தாலும், வஸீருக்கு ஓர் ஆதாயமும் ஏற்படவில்லை. மேலும் வஸீரைத் துக்கோஜிக்குப் பிடிக்கவில்லை. எனவே, அவளை எப்படியாவது மும்தாஜிடமிருந்து பிரித்துவிடத் திட்டமிட்டார். 1919 ஏப்ரல் 18-ஆம் தேதி மும்தாஜ், வஸீர் இருவரோடும் பம்பாய்க்குத் துக்கோஜி சென்றார். அவர்களை அங்கே நேபியன் ஸீ ரோடில் ஒரு வசதியான பங்களாவில் குடியேற்றினார்.

ஏப்ரல் 27-ஆம் தேதி துக்கோஜியின் அந்தரங்கக் கையாளான சங்கர் ராவ் பாப்பு ராவ் என்பவன், அந்தப் பங்களாவுக்குச் சென்றான். மும்தாஜை ஒரு திரைப்படத்துக்கு மன்னர் அழைத்து செல்ல உத்தேசித்திருப்பதாகவும், அவளை எதிர்நோக்கித் தியேட்டர் வாயிலில் காத்திருப்பதாகவும் பசப்பிவிட்டுத் தந்திரமாக மும்தாஜைத் தனியே இந்தூருக்கு கடத்திச் சென்றுவிட்டான். தன் மைனர் பெண்ணை இந்தூர் ஸம்ஸ்தானாதிபதி கடத்திச் சென்றுவிட்டதாகப் பம்பாய்

போலீஸ் கமிஷனரிடம் வஸீர் முறையிட்டாள். அது பயன் அளிக்கவில்லை.

ஒரு வருஷம் சென்றது. துக்கோஜியும் ராணி கமலா ஸாஹிபா என்ற மும்தாஜும் மேல்நாட்டுக்குப் பிரயாணமாகப் போகிறார்கள் என்பதை வஸீர் அறிந்தாள். மகளுக்கு என்ன தீங்கு நேரக் கூடுமோ என்று துடித்த அவள், மீண்டும் போலீஸ் உதவியை நாடினாள். அப்போதும் தோல்வியையே கண்டாள். பெரிய இடத்துக்கு விரோதமாக வஸீரைப் போன்ற - ஆண் துணையற்ற - ஒரு பெண் என்ன செய்ய முடியும்? வேறு வழி இல்லாததால் வஸீர் தன் முயற்சிகளைச் சிறிது காலத்துக்குக் கைவிடத் தீர்மானித்தாள். ஓர் ஆண் துணைக்கு வழி ஏற்படுத்திக் கொள்ள எண்ணி,. முகமது அலி என்பவரை மணம் புரிந்து கொண்டாள்.

மும்தாஜ் 1923-ஆம் ஆண்டில் தாயாகும் நிலையில் இருந்ததால், அவளது விருப்பத்துக்கு மறுப்புக் கூற மனம் இல்லாமல், துக்கோஜி அரை மனசோடு வஸீரை இந்தூருக்கு அழைத்தார். உரிய காலத்தில் மும்தாஜ் ஓர் அழகிய பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். ஆனால் அவள் சற்றும் எதிர்பாராத வண்ணம், அந்தக் குமாரத்தியை மறுதினமே வெகுரகசியமாக அகற்றிவிட்டார்கள். குழந்தை மரித்துவிட்டதாக மும்தாஜுக்கு தாதிகள் தகவல் அளித்தார்கள். அதன் பிணத்தைக் கூட மும்தாஜ் பார்க்கவில்லை. தான் ஒரு பொன் கூட்டுக் கிளிதான் என்பதை இந்த அதிர்ச்சியின் பயனாக மும்தாஜ் உணர்ந்து கொண்டாள். உடனே எப்படியாவது துக்கோஜியிடமிருந்து தப்பித்துச் சென்றுவிட வேண்டும் என்று மும்தாஜும் வஸீரும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

மும்தாஜ் வற்புறுத்தியதால், அவளை உடல் தேறுவதற்காக முஸூரிக்கு அனுப்ப துக்கோஜி இசைந்தார். ஆயினும் கூண்டை விட்டுத் தப்பியோடும் பறவை மீண்டும்

கூண்டைத் தேடி வராது என்று ஊகித்த துக்கோஜி முன்னெச்சரிக்கையாக மும்தாஜ், வஸீர், முகமது அலி இவர்களுடன் ஸாலில் என்ற தம் அந்தரங்க அதிகாரி ஒருவரையும் அனுப்பி வைத்தார். 1924 மார்ச் மாதத்தில் இவர்கள் டில்லி மாநகரை எட்டியதும், மும்தாஜும், வஸீரும் முஸௌரிக்குப் புறப்பட மறுத்துத் தங்கள் சொந்த ஊரான அமிர்தசரஸுக்குச் செல்ல வேண்டும் என்று முரண்டு பிடித்தார்கள். துக்கோஜியின் அதிகாரம் செல்லுபடியாகாத பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட டில்லி பிரதேசத்தில் ஸாலின் பயமுறுத்தல்களும் ஜம்பமும் சாயவில்லை. சென்றவர் கூண்டுப் பறவைகளைத் தப்பவிட்டு வெறும் கையுடன் இந்தூருக்குத் திரும்பினார்.

மும்தாஜ், வஸீர், முகமது அலி மூவரும் டில்லி போலீஸ் கமிஷனருக்குத் தங்கள் அவல நிலையை விளக்கி மனு அனுப்பினார்கள். எனவே, துக்கோஜியிடமிருந்து தங்களைப் பாதுகாக்க வேண்டும் என்று அதில் கேட்டுக் கொண்டார்கள். இந்த மனுவை அனுப்பிவிட்டு அமிர்தஸரஸுக்கு போய்ச் சேர்ந்தார்கள்.

துக்கோஜி லகுவில் மும்தாஜை விடுவதாக இல்லை. அவளை எப்பாடுபட்டாவது மீண்டும் தம்மிடத்துக்கு கொண்டு வந்துவிட வேண்டும் என்று தீர்மானித்து உடனுக்குடனே அதற்கான சதித் திட்டங்களை வெகு சிரத்தையோடு வகுக்கலானார்.

அமிர்தஸரஸில் வஸீரின் கணவனான முகமது அலிக்குப் பிஹாரிலால் என்பவன் மிகவும் ஆப்த நண்பன் ஆனான். பெரிய வட்டாரத்தில் ஏராளமான உறவினர்களைப் பிஹாரிலால் பெற்றிருந்தான். வஸீரின் நம்பிக்கைக்கும் அவன் பாத்திரமானான். தன் சொந்த வேலைக்காரனான ராம்லாலை வஸீரின் குடும்பத்துக்கு அமர்த்தித் தந்தான். தவிர, துக்கோஜியின் தொல்லைகளிலிருந்து அவர்களைத் தன் செல்வாக்கினால் மீட்டுவிடுவதாகவும் பிஹாரிலால் வாக்களித்தான்.

பிஹாரிலாலின் சகோதரனும் ரெயில்வே எஞ்சினீருமான பாலுக்கிதாஸ் என்பவனின் உதவியால் மும்தாஜ் குடும்பத்தினர் மீண்டும் பம்பாய் நகரில் வெர்சோவா பகுதியில் ஜன நடமாட்டம் அதிகம் இல்லாத தனி பங்களா ஒன்றில் குடியேறினார்கள். அங்கே வஸீருக்குச் சந்தேகம் உண்டாகும் விதத்தில் சில துர்ச்சம்பவங்கள் நடைபெறவே, அவள் அந்த பங்களாவை விட்டு வெளியேறிவிட்டாள். ஜன நடமாட்டமும் வண்டிப் போக்குவரத்தும் அதிகமுள்ள ஒரு பகுதியில் தன் குடும்பத்துடன் ஒரு சிறிய விடுதியில் குடியேறினாள். ஆனாலும் தொடர்ந்து ராம்லாலை தன் வேலைக்காரனாக வைத்துக் கொண்டதிலேதான் வஸீர் மாபெருந்த தவறு செய்துவிட்டாள்.

துக்கோஜியின் சதிகளிலிருந்து தப்புவதோடு, வயிற்றுப் பிழைப்புக்கும் வழி தேட வேண்டியிருந்தது. வஸீரின் ஒன்றுவிட்ட சகோதரனும் வாடகை காரோட்டியுமான அலிபக்ஷ் என்பவனின் மூலம் அப்துல் காதிர் பாவ்லா என்ற லட்சாதிபதிக்கு மும்தாஜ் அறிமுகமானாள். பம்பாய் முனிசிபல் கார்ப்பொரேஷனில் பாவ்லா ஓர் அங்கத்தினர். கண்ணைக் கவரும் வனப்புடைய பாவை மும்தாஜின் வலை வீச்சில் அவர் நன்றாகச் சிக்கிக் கொண்டுவிட்டார். படிப்படியாக இவர்களுடைய காதல் வளர்ந்து வரலாயிற்று. மும்தாஜும் பாவ்லாவும் அடிக்கடி ஒன்றாகச் சுற்றுப் பிரயாணம் செய்து வரலானார்கள்.

1924 ஜூன் 24-ஆம் தேதி மும்தாஜின் வீட்டில் சில விசித்திர சம்பவங்கள் நிகழ்ந்தன. அன்று இரவு நடுநிசி நேரத்தில் எதிர்பாராதவிதமாக ராம்லாலுடன் பிஹாரிலால் இந்த வீட்டுக்கு வந்தான். இரண்டு தினங்களுக்கு முன்புதான் வஸீரிடம் ராம்லால் ஒரு வார விடுமுறைக்கு அனுமதி கோரி இருந்தான். ஆகவே, அந்த நேரத்தில் ராம்லாலை அவர்கள் எதிர்பார்க்கவேயில்லை.

மேலும் அடுத்த நாள் காலையில் முகமது அலி வழக்கம் போல மசூதிக்குச் சென்று நமாஸ் செய்துவிட்டுத் திரும்பினார். அப்போது ராம்லால் மாற்றுடைகள் அணிந்து எங்கோ புறப்பட துரிதமாக தயார் செய்து கொண்டிருந்ததைக் கண்டு துணுக்குற்றார். உள்ளத்திலே ஐயம் எழவே, முகமது அலி உடனே தம் உடைமைகளைச் சோதனை செய்தார். துக்கோஜியைப் பற்றிய விவரங்கள் அடங்கிய முக்கியமான தஸ்தாவேஜிகளும் ரொக்கமாக 1.500 ரூபாயும் களவு போயிருப்பதைக் கண்டு, ராம்லாலை அதட்டி மிரட்டினார். அவன் நடுநடுங்கிவிட்டான். இரவுக்கிரவே அவற்றைப் பிஹாரிலால் களவாடிச் சென்றுவிட்டான் என்று அறிவித்தான். முகமது அலி உடனே ராம்லாலைப் போலீஸாரிடம் ஒப்படைத்தார். போலீஸ் மரியாதை வகையாகக் கிடைத்தது. உண்மையை ராம்லால் கக்கிவிட்டான். அதாவது, துக்கோஜியின் ஆக்ஞைக்கு இணங்கி ஸ்ரீராம் பாபு என்பவன் ஏற்பாடு செய்த ரகசியச் சதிக் கூட்டத்தினரில் தானும் ஒருவன் என்பதையும், வஸீரின் இல்லத்தில் உளவு பார்க்கும் வேலைக்காக ஸ்ரீராம்பாபு தனக்கு மாதம் ரூ.200 ஊதியமாக அளித்து வந்தான் என்பதையும் ராம்லால் தெரிவித்தான்.

பாலுக்கிதாஸ் ரெயில்வே என்சினீயரும் அல்ல. பிஹாரிலாலின் சகோதரனும் அல்ல என்ற உண்மை ராம்லாலின் வாக்குமூலத்திலிருந்து புலனாயிற்று. பாலுக்கிதாஸும் ஸ்ரீராம்பாபுவின் கையாளே என்பதும் வெட்ட வெளிச்சமாயிற்று. பாலுக்கிதாஸ் மூலம் ஸ்ரீராம்பாபு பிடிபட்ட போது, திடுக்கிட வைக்கும் மேலும் சில விவரங்கள் புலனாயின. மும்தாஜை மீண்டும் இந்தூருக்குக் கடத்திக் கொண்டு வந்தால், பெரிய சம்மானம் அளிப்பதாக ஸ்ரீராம்பாபுவுக்குத் துக்கோஜி வாக்களித்திருந்தார். கைச்செலவுக்காக ரூ.30.000 பிரத்தியேகமாகக் கொடுத்திருந்தார்.

ஸ்ரீராம்பாபுவே இதைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டான்.

இந்த விவரங்கள் வஸீருக்குத் தெரிய வந்ததும், அவள் நடுநடுங்கி மீண்டும் பம்பாய் டெபுடி கமிஷனருக்கு மும்தாஜின் பாதுகாப்புக்காக ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பித்துக் கொண்டாள். அப்போது டெபுடி கமிஷனராக இருந்தவர் எஃப்.எச்.பக்கிள் என்னும் ஆங்கிலேயர். சில வருஷங்களுக்கு முன்புதான் பஞ்சாபில் ஜெனரல் டயர் நடத்திய ஜாலியன்வாலாபாக் படுகொலையால் மக்கள் குமுறிக் கொண்டு அப்போதப்போது குழப்பம் உண்டாக்கிக் கொண்டிருந்தார்கள். இந்த வேளையில் புதிதாகச் சுதேசி மன்னரின் விரோதத்தை வேறு சம்பாதித்துக் கொள்ளப் பக்கிள் துரை விரும்பவில்லை. ஆகவே, இது போன்ற சர்வ சாதாரணமான விஷயங்களுக்காக நடவடிக்கை ஏதும் எடுக்கத் தேவையில்லை என்று கண்டிப்பாக அவர் கூறிவிட்டார்.

1925 ஜனவரி 10-ஆம் தேதி மும்தாஜும் பாவ்லாவும் கிராமப் புறங்களில் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு பம்பாய்க்குத் திரும்பினார்கள். அப்போது சௌபாத்தி கடற்கரையில் நவீன வசதிகள் நிறைந்திருந்த அழகிய பங்களாவில் பாவ்லாவுடன் மும்தாஜ் தங்கினாள். மணமாகாத தம்பதிகளாகவே அவர்கள் வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

1925 ஜனவரி 12-ஆம் தேதி மும்தாஜும் பாவ்லாவும் தங்களுடைய அழகிய அமெரிக்க மோட்டாரில் மலபார் பூங்காவுக்குச் சென்று இன்பமாக நேரத்தைக் கழித்தார்கள். பிறகு, பொழுது சாயும் வேளையில் வீடு திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். வண்டியை டிரைசர் செலுத்த, பாவ்லா, மும்தாஜ், பாவ்லாவின் எஸ்டேட் மானேஜரான மாத்தியூஸ் மூவரும் பின் ஸீட்டில் அமர்ந்திருந்தார்கள்.

இவர்களுடைய கார் ஒரு திருப்பத்தில் எதிரே வந்து கொண்டிருந்த மற்றொரு மாக்ஸ்வெல் காருடன் இடித்துக் கொண்ட போது, மாக்ஸ்வெல் காரின் டிரைவரோடு பேசப் பாவ்லாவின் டிரைவர் தன் காரை நிறுத்தி இறங்கினான். சற்றும் எதிர்பாராதவிதமாக, புதிய மாக்ஸ்வெல் காரிலிருந்து ஆயுதபாணிகளாக ஐந்து குண்டர்கள் வெளியே குதித்துப் பாவ்லாவின் டிரைவரை முதலில் பலமாகத் தாக்கி நினைவிழக்கச் செய்தார்கள். பின்பு பாவ்லாவைத் தங்கள் தாக்குதலுக்கு இலக்காக்கினார்கள். பாவ்லாவைத் தனது துப்பாக்கியால் ஒரு குண்டன் சுட்டு மயக்கம் அடையச் செய்தான். இதற்கிடையில் காரின் மறு பக்கத்துக் கதவைத் திறந்து தப்பியோட முயன்ற மாத்யூஸையும் குண்டர்கள் விட்டுவிடவில்லை. அவனையும் ஒரு குண்டன் நையப்புடைத்து வீழ்த்திவிட்டான்.

மூன்று ஆண்களும் தாக்குண்ட பின், மிஞ்சிய ஒரே நபர் மும்தாஜ்தான். ஒரு குண்டன் தன் கத்தியால் அவளுடைய நெற்றியிலும் குத்திக் கிழித்துவிட்டான். பின்னால் நீதி ஸ்தலத்தில் நடந்த வழக்கில் இந்தக் கத்திக் குத்துத் தழும்பு பெரிதும் பயன்பட்டது.

இதே சமயம் அகஸ்மாத்தாக லெஃப்டினென்ட் ஸாகர்ட்டும் வேறு மூன்று ஆங்கிலச் சிப்பாய்களும் கோல்ஃப் விளையாடிவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஏதோ துப்பாக்கி சுடும் சப்தமும், அதைத் தொடர்ந்து ஒரு பெண்ணின் அபயக் குரலும் கேட்டுத் திடுக்கிட்டு அவர்கள் ஓடி வந்தார்கள். மும்தாஜைக் கொல்ல ஒரு குண்டன் முயன்ற சமயம் லெஃப்டினென்ட் ஸாகர்ட் திடீரென்று வந்து தமது இரும்புப் பிடியில் அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டார். அவருடன் இருந்த மற்ற மூன்று ஆங்கிலேயர்களும் வெறும் கோல்ஃப் மட்டையையே

ஆயுதமாகக் கொண்டு குண்டர்களைத் தாக்கினார்கள். இதற்கிடையில் அந்த இடத்தில் வேறு மக்கள் கூட்டமும் கூடத் தொடங்கவே, நான்கு குண்டர்கள் வெகு விரைவாகத் தமது மாக்ஸ்வெல் மோட்டாரில் ஏறித் தப்பிச் சென்றுவிட்டார்கள். ஆயினும், லெஃப்டினென்ட் ஸாகர்ட்டின் இரும்புப் பிடியில் சிக்கிய குண்டனான ஸபி அஹமத் மட்டும் தப்ப இயலவில்லை.

லெஃப்டினென்ட் ஸாகர்ட்டும் பிறரும், மும்தாஜையும் காயம் அடைந்த மற்ற மூவரையும் அருகிலே இருந்த ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார்கள். அப்துல் காதர் பாவ்லா இறந்துவிட்டார்.

பிடிபட்ட ஸபி அஹமத் மூலம் முக்கியமான பல விவரங்கள் பம்பாய்ப் போலீஸுக்குக் கிடைத்தன. இதற்கிடையில் துக்கோஜி இந்தக் கொலையை அமுக்கிவிட முயற்சி செய்ததாகவும் அதன் பொருட்டு ஒரு கோடி ரூபாய் வரையில் போலீஸாருக்கு லஞ்சம் கொடுக்கத் தயாராக இருந்ததாகவும் வதந்திகள் அப்பட்டமாகப் பரவின. ஆனால் என்ன முயன்றும் நீதியின் பிடியிலிருந்து தப்பிவிடத் துக்கோஜியால் முடியவில்லை.

முதலில் ஒன்பது நபர்களைக் கைது செய்து பம்பாய் நகர பிரதம மாஜிஸ்டிரேட் ஸ்ரீ எஸ்.எஸ்.ரங்கநேகரின் முன்பு ஆஜர் செய்தார்கள். அவர்கள் மீது சதி, ஆளைக் கடத்தல், களவு, கொலை ஆகிய குற்றங்களைச் சாட்டினார்கள். அந்த ஒன்பது பேரின் விவரம் : (1) ஸபி அஹமத் ; (2) இந்தூர் விமானப் படையைச் சேர்ந்த காப்டன் ஷாம்ராவ் டீகே ; (3) இந்தூர் ராணுவத்தைச் சேர்ந்த ஆனந்தராவ் போன்ஸ்லே ; (4) இந்தூர் மகாராஜாவின் அரண்மனைப் பணியாள் புஷ்பஷீல் பாண்டே ; (5) இந்தூர் வாசி அக்பர் ஷா ; (6) இந்தூர் கார் ஓட்டி பகதூர் ஷா ; (7) இந்தூரின் மற்றொரு கார் ஓட்டி அப்துல் லத்தீஃப் ; (8) இந்தூர் ரகசியப் போலீஸ் அதிகாரி மும்தாஜ் முகமது ; (9) இந்தூர் ஸம்ஸ்தான வாசியான கராமத் கான்.

ஹைகோர்ட் ஸெஷன்ஸ் வழக்கு விசாரணை 1925 ஏப்ரல் 25-ஆம் தேதி நீதிபதி க்ரம்ப் அவர்களின் தலைமையில் தொடங்கியது. பிராஸிக்யூஷன் தரப்பில் ஸ்ரீ ஜம்ஷேத்ஜீ கங்கா, மிஸ்டர் கென்னத் கெம்ப் இருவரும் வழக்காடினார்கள். டிஃபன்ஸ் தரப்பில் முன்னாள் முஸ்லீம் லீக் தலைவர் ஜின்னா வழக்காடினார். டிஃபன்ஸ் தரப்பில் வழக்காட ஸ்ரீ சித்தரஞ்சன் தாஸ், மோதிலால் நேரு, ஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயங்கார் இவர்களைப் பெரிய கைகள் அண்டியதாகவும் சொல்கிறார்கள். அவர்கள் மறுத்துவிட்டார்களாம். ஆனால், ஜின்னாவை தவிரக் கல்கத்தாவின் பிரபல பாரிஸ்டர் ஸேன் குப்தாவும், பம்பாயின் பிரபல பாரிஸ்டர் எஸ்.ஜி.வேலன்கரும் டிஃபன்ஸ் தரப்பில் வாதாடினார்கள். என்றாலும், பிராஸிக்யூஷன் தரப்பே வெற்றி பெற்றது.

மே 23-ஆம் தேதி வழக்கு விசாரணை முடிவடைந்து கோர்ட்டார் தீர்ப்பு கூறினார்கள். கராமத் கானும், மும்தாஜ் முகமதும் குற்றவாளிகள் அல்ல என்று நிரூபணமாகி விடுதலை அடைந்தார்கள். மற்ற ஏழு நபர்களும் குற்றவாளிகள் என்று நீதிபதியும் ஜூரர்களும் ஒரே மனசாகத் தீர்மானித்தார்கள். நீதிபதி க்ரம்ப் தமது தீர்ப்பில் ஸபி அஹமத் காப்டன் டீகே, ஆனந்தராவ் பான்ஸ்லே இந்த மூவருக்கும் மரண தண்டனை விதித்தார்... மற்ற நால்வரும் தீவாந்தர தண்டனை அடைந்தார்கள். பிரிவி க்வுன்ஸிலுக்கு அப்பீல் செய்தும் குற்றவாளிகள் தோல்வியே கண்டார்கள். ஹைகோர்ட் தீர்ப்பையே பிரிவி கவுன்ஸிலும் ஆமோதித்தது. 1925 நவம்பர் 25-ஆம் தேதி முகாமையான குற்றவாளிகள் மூவரும் தூக்கில் மாண்டார்கள்.

இந்தக் கொலைக்கு முதல் காரணமான துக்கோஜிராவைத் தண்டிக்காமல் சும்மா விட்டுவிடக் கூடாது என்று மக்கள் இதற்குப் பின் கூக்குரல் எழுப்பலானார்கள்.

துக்கோஜியை அந்த நாள் வைஸிராய் ரீடிங் பிரபு அழைத்து நீர் உமது அரசுரிமையைத் துறந்துவிடுவதானால், மேற்கொண்டு உம்மீது பிரிட்டிஷ் அரசாங்கம் ஒருவித நடவடிக்கையும் எடுக்காது. இல்லையென்றால், உம்மீதும் வழக்கு தொடர நேரிடும் என்று கூறினார்.

துக்கோஜி, தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்ற முடிவுக்கு வந்தவராய், அரசுரிமையைத் துறக்கத் தீர்மானித்தார். இங்கிலாந்தில் படித்து வந்த தம் பதினேழு வயசுக் குமாரன் யஷ்வந்த் ராவை இந்தூரின் அரச பீடத்தில் 1926 மார்ச் முதல் தேதி அமர்த்திவிட்டார்.

பாவ்லா கொலை வழக்கு இப்படி முடிவுற்றது. அரசுரிமையைத் துறந்த துக்கோஜி நீண்ட நாள் பயணத்தை மேல்நாட்டில் மேற்கொண்டார். எங்கே சென்றாலும் காமமும் மோகமும் மட்டும் அவரை விட்டு நீங்கவில்லை. நான்ஸி மில்லர் என்ற அமெரிக்க அழகியைத் தம்முடன் பாரத நாட்டுக்கு அழைத்து வந்து, அவளை ஹிந்து தர்மத்துக்கு மத மாற்றம் செய்து, சர்மிஷ்டா தேவி என்று பெயருமிட்டு, ஹிந்து தர்ம ஆசாரப்படி மணந்து கொண்டார். பின்பு இருவரும் புனா நகரில் குடியேறி, வசதிகள் நிறைந்த ஒரு பங்களாவில் அமைதியாக இல்லறம் நடத்தி வந்தார்கள்.

மும்தாஜோ? பாவ்லாவின் திரண்ட ஐவேஜியில் ஒரு லட்ச ரூபாயை அவருடைய உயிலால் பெற்றாள். பாவ்லாவின் மூலம் மும்தாஜ், ஸாதத் பேகம் என்றொரு பெண்ணுக்கும் தாயாகியிருந்தாள். இந்த நிலையில் அமிர்தஸரஸில் குடியேறி அங்கே அப்துல் ரஹ்மான் என்ற லட்சாதிபதியான வியாபாரியை மணந்து கொண்டாள். ஆனால் பாவம், அப்துல் ரஹ்மானுடன் அவளுடைய வாழ்க்கை இனிக்கவேயில்லை. மீண்டும் மீண்டும் வழக்குப் பிரிவும் கூடுதலும் அவளை மாறி மாறித் தொல்லைப்படுத்தின. கடைசியில் அப்துல் ரஹ்மானும் அவளை

இந்த உலகில் தனியே விட்டுக் காலமாகிவிட்டார். மீண்டும் மணவாழ்வில், ஈடுபட மும்தாஜ் விரும்பவில்லை. முன்பு எப்போதோ ஒரு முறை அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்த போது பிரபல படக் கம்பெனி ஒன்று தன்னை 5 லட்சம் ரூபாய்க்கு ஒப்பந்தம் செய்து கொள்ளத் தயாராகியிருந்ததை நினைவில் வைத்துக் கொண்டு ஹாலிவுட்டுக்கு மும்தாஜ் பயணமானாள். ஆனால் அதிலும் ஏமாற்றம் அடைந்தாள். மீண்டும் பாரத நாட்டுக்குத் திரும்பி, வஸீரைப் போல் விபசாரத்தையே மேற்கொண்டு பிழைக்கலானாள்.

மும்தாஜ் இன்னமும் உயிரோடு இந்தப் பரந்த புண்ணிய பூமியான பாரத நாட்டிலேதான் இருக்கிறாள். ஆனால் அவளது இருப்பிடம் மிகச் சிலருக்கு மட்டுமே தெரியும். இப்போது அவளுக்கு ஏறக்குறைய அறுபது வயசாகிறது. அவளுடைய பெண்களும் அவளைப் போலவே ஈடு இணையற்ற எழிலரசிகளாக விளங்குகிறார்களோ என்னவோ, யார் கண்டார்?



## 8. பர்துவான் மாய சந்நியாசி

துண்டு படாத பழைய வங்காளத்தில் பர்துவான் மிகப் பெரிய ஸம்ஸ்தானமாக இருந்தது. பாரதத்தின் ஒரு பகுதியைக் கிழக்கிந்தியக் கம்பெனி ஆண்டு வந்த நாட்களில் தேஜ்சந்திர பகதூர் என்பவர் பர்துவான் மகாராஜாவாக இருந்தார். அவருடைய ஒரே குமாரரான பிரதாப சந்திரருக்கு ஏராளமான ஆங்கிலக் கனவான்கள், சீமான்கள், சீமாட்டிகள் இவர்களுடன் நட்பு உண்டு. அதனால் அவர் அடிக்கடி கல்கத்தா சென்று வருவார்.

1820-ல் ப்ரதாப சந்திரா கடுமையாக நோய்வாய்ப்பட்டார். பிரபல நாட்டு வைத்தியர் ஒருவர் அவருக்குச் சிகிச்சை செய்தார். ஆயினும் ப்ரதாபசந்திரருக்கு குணம் ஏற்படவில்லை. 1820 அக்டோபர் 26-ஆம் தேதி அவர் இறந்துவிட்டார். தேஜ்சந்திரரே கூட இருந்து மிகவும் சிரத்தையோடு கிரமமாக ஈமக்கிரியைகளை நடத்தினார். ப்ரதாபசந்திரரின் சடலத்தைச் சிதையிலேற்றி அது தீக்கிரையானதும் அந்த அஸ்தியைப் புரோகிதர்கள் எடுத்துச் சென்று கங்கையில் கரைத்தார்கள்.

தம்முடைய ஒரே மகனின் அகால மரணத்துக்கு பின்பு தேஜ்சந்திரர் வங்காள கவர்னரின் சம்மதத்தைப் பெற்று, ஒரு க்ஷத்திரிய வாலிபரை ஸ்வீகார புத்திரராக்கிக் கொண்டு, அவருக்கு மஹதாப் சந்திரன் என்று பெயரிட்டார். 1832-இல் தேஜ்சந்திரர் காலமானதும் அவருடைய வாரிசாக மஹதாப்சந்திரரே முறைப்படி பர்துவான் மகாராஜாவானார்.

இந்த நிலையில் ஒரு மர்ம சந்நியாசி தோன்றினார்: ப்ரதாப்சந்திரர் இறந்து பதினைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. 1835-ல் பர்துவான் குலாப் ராஜா பூங்காவில் அந்த சந்நியாசி ஆஜரானார். நீண்ட தாடி ஜடா முடியுடன் கோவணாண்டியாகக் கையில் கமண்டலம் ஏந்தி வந்த அந்தச் சந்நியாசி நேரே பூங்கா தோட்டக்காரனிடம் சென்றார். மாலி, நான்தான் சோட்டோ ராஜா ப்ரதாபசந்திரன். ஒரு வேண்டுதல் இருந்தது எனக்கு. அதன் பொருட்டுப் பதினான்கு ஆண்டுகள் அஞ்ஞாதவாசம் செய்ய நேர்ந்தது. அஞ்ஞாத வாசம் முடிந்துவிட்டதால், தந்தையின் ஸம்ஸ்தானத்தில் எனது உரிமையை நிலைநாட்டிக் கொண்டு என் பங்கு சொத்துக்களைப் பெற்றுக் கொள்ள வந்திருக்கிறேன் என்றார்.

நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக பர்துவான் ஜமீன் குடும்பத்தாரிடம் விசுவாசமாக உழைத்து வந்திருக்கும் அந்த தோட்டக்காரன் உடனே மர்ம சந்நியாசியின் காலில் விழுந்து வணங்கினான். சோட்டோ ராஜா ப்ரதாபசந்திரர் உயிருடன் இருக்கும் அதிசயத் செய்தி காட்டுத் தீயைப் போல் அவன் மூலம் பரவியது. பலர் அதை நிஜமென்றே நம்பினார்கள்.

ஆனால் மகாராஜாதிராஜ மஹதாப்சந்திரருக்கு இந்தச் செய்தி அதிருப்தியளித்ததில் வியப்பில்லை. அவருடைய சொந்த தந்தையான பாண்பாபு மிகவும் சீற்றங் கொண்டார். அவர் சில குண்டர்களுக்குப் பணங் கொடுத்து அந்தச் சந்நியாசியை

னையப் புடைக்க ஏற்பாடு செய்தார். குண்டர்களின் தாக்குதலுக்கு ஆளான சந்நியாசி இரவோடு இரவாகத் தாமோதர நதியைக் கடந்து மறைந்தார்.

இதன் பிறகு விஷ்ணுபுரிக்குச் சந்நியாசி சென்றார். அங்கே ராஜா கேத்ரமோஹன்சிங்கைப் பேட்டி கண்டார். சந்நியாசியை ப்ரதாப்சந்திரர் என்றே அந்த ராஜா ஏற்றுக் கொண்டார். மூன்று தினங்கள் தமது அரண்மனையில் கௌரவமாகச் சந்நியாசிக்கு விருந்து உபசாரமெல்லாம் செய்தார். பிறகு சந்நியாசியிடம் பாங்குராவுக்குப் போங்கள். அங்குள்ள ஆங்கில மாஜிஸ்டிரேட்டைப் பேட்டி காணுங்கள். நீங்களே மகாராஜ்குமார் ப்ரதாபசந்திரர் என்று அவரிடம் நிரூபித்துக் கொள்ளுங்கள் என்று யோசனை கூறினார்.

சந்நியாசியின் உள்ளத்தில் என்ன திட்டம் இருந்ததோ ஆண்டவனுக்குத் தான் தெரியும்? அவர் ஏனோ ஒரு கோவணாண்டியாகவே பாங்குராவுக்குச் சென்று அங்கே ஸர்க்கூட் ஹவுஸுக்கு எதிரில் ஒரு மரத்தடியில் பத்மாசனம் போட்டுக் கொண்டு நிஷ்டை செய்வது போல் அமர்ந்து கொண்டார். அவரை வேடிக்கை பார்க்க மக்கள் திரள்திரளாக வரலானார்கள்.

இந்த அமர்க்களத்தைச் சற்றும் விரும்பாத பாங்குரா ஜில்லா மாஜிஸ்டிரேட் எலியட் என்பவர் வெகுண்டு சந்நியாசியைக் கைது செய்து எட்டு மாத காலம் போலீஸ் பாதுகாப்பில் வைக்க உத்திரவிட்டார்.

சந்நியாசியைப் பற்றி மாஜிஸ்டிரேட் எலியட் விசாரித்த போது சில விவரங்கள் தெரிய வந்தன. சந்நியாசியை அடையாளங் கண்டு கொண்ட சிலர் (சில உறவினர்கள் உள்படத்தான்), இவருடைய உண்மைப் பெயர் கிரிஷ்டோலால்

பரப்பிரம்மச்சாரி என்றும், அலோக்ஷா என்று இவரைக் குறிப்பிடுவது வழக்கம் என்றும் கூறினார்கள்.

ஆள்மாறாட்ட மோசடி செய்ய முயன்றதாகவும் பொது இடத்தில் உட்கார்ந்து அமைதியை குலைக்கும் வகையில் ஆர்ப்பாட்டம் செய்ததாகவும் சந்நியாசி மீது குற்றஞ்சாட்டி, விசாரணைக்காகச் செஷன்ஸ் கோர்ட்டுக்கு மாஜிஸ்டிரேட் அனுப்பி வைத்தார்.

செஷன்ஸ் கோர்ட்டில் ஜஸ்டிஸ் ஹாரிங்க்டன் என்பவரின் முன்பு வழக்கு நடந்தது. சந்நியாசிக்காக பிரபல பாரிஸ்டர் டர்டன் வாதாடினார். பிராஸிக்யூஷன் தரப்பில் சந்நியாசியின் உறவினர் பலர் சாட்சியம் கூறினார்கள். அவர்கள் சந்நியாசியைக் கிரிஷ்டோலால் பரப்பிரம்மச்சாரி என்று அடையாளங் கண்டு கொண்டார்கள். முடிவில் வழக்கில் ப்ராஸிக்யூஷன் தரப்பே வெற்றி அடைந்தது.

1836 ஆகஸ்ட் 4-ஆம் தேதி நீதிபதி ஹாரிங்க்டன் தீர்ப்பு கூறினார். அதில் சந்நியாசிக்கு ஆறு மாத சிறைவாச தண்டனை வழங்கினார். தண்டனை முடிந்ததும் சிறையிலிருந்து வெளிப்பட்ட பின் சந்நியாசி ஒரு வருஷ காலம் ஒரு குழப்பமும் உண்டாக்காமல் நன்னடக்கையோடு இருக்க வேண்டுமென்ற ஷரத்துடன், ரூ.40,000 ஜாமீன் தொகைக்கு இரண்டு நபர்கள் உத்திரவாதம் கொடுக்க வேண்டும் என்று நீதிபதி கட்டளை விதித்தார். ஆறு மாத சிறைவாசத்துக்குப் பின் விடுபெற்ற சந்நியாசிக்கு கௌரிபுரி தாலுக்தார்களான பாபு ராஜகிரிஷ்டோராய் சௌதுரியும், கோபீகிரிஷ்டோராய் சௌதுரியும் இந்த நிபந்தனைப்படி ஜாமீன் கொடுத்தார்கள்.

சந்நியாசி பின்பு கல்கத்தாவுக்கு வந்து தம்முடைய ஜடாமுடியையும் தாடியையும் மழுங்கச் சிரைத்துவிட்டு அந்த நாள் ஜமீன்தாரர்களைப் போல் ஜரிகை தலைப்பாகை அணிந்து

அங்கவஸ்திரம் சாத்திக் கொண்டு தடபுடலாக தோற்றம் அளித்தார். இவருடைய டாம்பீகத்தையும் தடபுடலையும் கண்ட சில பெரிய மனிதர்களும் பிற மக்கள் பலரும் செஷன்ஸ் ஜட்ஜின் தீர்ப்புக்குப் பின்பும் இவரை ப்ரதாபசந்திரர் என்றே நம்பியதுதான் வியப்புக்கு உரிய விஷயம்.

ஸர்க்கார் திவானாகப் பணியாற்றிய பிரபு ராதாகிரிஷ்டோ பைஸக் என்பவர் இந்தச் சந்நியாசியை ப்ரதாபசந்திரர் என்றே நம்பியதுடன் இவரைத் தமது இல்லத்தில் ஆறு மாத காலம் கௌரவ விருந்தாளியாக வைத்துக் கொண்டு ஆதரித்தார். சந்நியாசிக்கு ஒரு லட்சம் ரூபாய் அட்வான்ஸும் கொடுத்தார்.

பர்துவான் ஸம்ஸ்தானத்தில் தமது உரிமையை நிலைநாட்டச் சந்நியாசி பல ஏற்பாடுகள் செய்யலானார். இதற்கு முன்னணியாக ஆக்கிரமிப்புத் திட்டம் ஒன்றை வகுத்தார். அதாவது, குல்நாவில் பர்துவான் குடும்பத்தினருக்கு சொந்தமாயிருந்த பிரமாண்டமான மாளிகையில் வலுக்கட்டாயமாகக் குடியேறிவிடுவது என்று தீர்மானித்துக் கொண்டார்.

அப்போது வங்காள டெபுடி கவர்னராக இருந்த ஆங்கிலேயருக்கு தமது தீர்மானத்தைக் குறிப்பிட்டு விரிவாக 1838 பிப்ரவரி மாதம் சந்நியாசி ஒரு கடிதம் எழுதினார். என் மீது ஆத்திரங் கொண்டுள்ள மஹதால் தொல்லை கொடுக்கக் கூடும். ஆகவே, தாங்கள் என்னைப் பாதுகாக்க வேண்டுகிறேன் என்று அரசாங்க உதவி கோரினார். ஆனால் இந்த மனுவை டெபுடி கவர்னரின் பிரதம காரியதரிசி நிர்த்தாட்சிண்யமாக நிராகரித்துவிட்டார்.

அந்த மறுப்பைச் சந்நியாசி சற்றும் லட்சியம் செய்யவில்லை. தம்முடன் ஆயுதபாணிகளாக இருநூறு

ஆட்களையும், மற்றும் சுமார் ஐயாயிரம் நபர்களையும் அழைத்துக் கொண்டு டாம்பீக ஆடையலங்கார கோலத்தில் பெரிய தடபுடல் செய்து கொண்டு குல்நாவுக்கு சென்றார்.

சந்நியாசியின் ஆர்ப்பாட்டத்தைக் கண்டு சினங் கொண்ட பர்துவான் ஜில்லா மாஜிஸ்டிரேட் ஜே.பி.ஒஜில்வீ, காப்டன் லிட்டிலின் தலைமையில் ஒரு பிரிட்டிஷ் ரெஜிமெண்டை அனுப்பிக் கூட்டத்தினர் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்வித்தார். மக்கள் குழாம் அப்படியே சிதறிப் பல திசையில் பாயவே, சந்நியாசியும் ஓட்டம் எடுத்தார். ஆனால் அவரையும் சில ஆட்களையும் போலீஸார் பிடித்துவிட்டார்கள். சாந்திபுரியில் சந்நியாசியையும் இவருடன் இருந்த ஆட்களையும் போலீஸார் கைது செய்து ஹுக்ளி மாஜிஸ்டிரேட் முன்பு விசாரணைக்காக அனுப்பி வைத்தார்கள்.

1838 செப்டம்பர் 1-ஆம் தேதி மாஜிஸ்டிரேட் ஈ.ஏ.சாமுவேலின் முன்பு வழக்கு விசாரணைக்கு வந்தது. பிரபல பாரிஸ்டரான மார்டன் என்பவர் சந்நியாசியின் தரப்பில் ஆஜரானார். முன்போலவே பெயர் மாற்றம் செய்து கொண்டு மோசடி செய்ய முயன்றதாகவும், பொதுமக்களின் அமைதியைக் குலைத்து இடையூறு விளைவித்ததாகவும் சந்நியாசி மீது ப்ராஸிக்யூஷன் தரப்பில் குற்றம் சாட்டினார்கள்.

மகாகவி ரவீந்திரநாத் டாகுரின் மூதாதையருள் ஒருவரான துவாரகாநாத டாகுர் இந்த வழக்கில் முக்கியமான ஒரு சாட்சி ப்ராஸிக்யூஷன் தரப்பில் அவர் சாட்சியம் அளித்த போது, சந்நியாசியை ஒரு மோசடிப் பேர்வழி வேஷதாரி என்று கூறினார்.

மாஜிஸ்டிரேட்டின் விசாரணைக்குப் பின்பு, சந்நியாசியும் அவருடைய ஆட்களும் செஷன்ஸ் கோர்ட்டு விசாரணைக்கு ஆஜரானார்கள். செஷன்ஸ் ஜட்ஜான ஜேம்ஸ்

கார்ட்டிஸ் முன்பு வழக்கு நடைபெற்றது. ஜில்லா முஸ்லிம் சட்ட ஆபீஸரான மௌலவி ஸையத் அஹமத் என்பவர் துணை நீதிபதி. பாரிஸ்டர் எம்.ஏ.பிக்னல் என்பவர் ப்ராஸிக்யூஷன் தரப்பிலும், பாரிஸ்டர் மார்டன் என்பவர் சந்நியாசியின் தரப்பிலும் ஆஜரானார்கள்.

ப்ராஸிக்யூஷன் தரப்பில் சந்நியாசியின் தாய்மாமன், ஒன்றுவிட்ட சகோதரன் உள்பட பல சாட்சிகள் சந்நியாசியைக் கிரிஷ்டோலால் பரப்பிரம்மச்சாரி என்றே அடையாளங் கண்டு சொன்னார்கள்.

சோட்டா ராஜா ப்ரதாபசந்திரரின் ஈமக் கிரியைகளை நடத்தி வைத்த புரோகிதர்களும் சாட்சியம் கூறினார்கள். சந்நியாசி தரப்பு வக்கீலின் குறுக்கு விசாரணை அவர்களை அசைக்கவே முடியவில்லை.

ப்ரதாபசந்திரரின் விதவை மனைவியையும் ஒரு சாட்சியாகச் சந்நியாசி தரப்பினர் முயற்சி செய்தார்கள். ஆனால் கடுமையாகக் கோஷா முறையை அனுஷ்டித்து வந்த அந்த அம்மாள் மறுத்துவிட்டதால் அந்த முயற்சி பலிக்கவில்லை.

இரு தரப்பிலுமாக மொத்தம் இருநூற்றெழுபத்து மூன்று சாட்சிகளை விசாரித்தார்கள். மிஸஸ் ஹாரியட் கீட்டிங், மிஸஸ் ஸோஃபியாக்ரேன் என்ற இரண்டு ஆங்கிலச் சீமாட்டிகள் சந்நியாசியை ஆதரித்து அவருக்குச் சாதகமாக சாட்சியம் கூறினார்கள். சந்நியாசிக்கு ஒரு லட்சம் ரூபாய் முன்பணம் கொடுத்து உதவிய பாபு ராதாகிரிஷ்டோ பைஸக்கும், சந்நியாசியே சந்தேகம் இல்லாமல் மகாராஜகுமார் ப்ரதாபசந்திரர் என்று கூறினார். ப்ரதாபசந்திரரின் ஓவியம் ஒன்றை ஓர் ஓவியர் வரைந்திருந்தார். அதையும் கோர்ட்டில் காண்பித்தார்கள். சந்நியாசியின் தோற்றத்துக்கும் அந்த ஓவியத்துக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதை பலர் நிதரிசனமாகக் கண்டார்கள்.

விஷ்ணுபுரி ராஜா கேத்ரமோஹன்சிங், பலமாகச் சந்நியாசியை ஆதரித்துச் சாட்சியம் கூறினார். துவாரகாநாத் டாகுரோ, சந்நியாசியை எதிர்த்துச் சாட்சியம் கூறினார்.

முடிவில் செஷன்ஸ் ஜட்ஜ் கர்ட்டிஸ் தீர்ப்பளித்தார். சந்நியாசி சோட்டோ ராஜா ப்ரதாபசந்திரர் அல்ல. ஐயத்துக்கு இடமில்லாமல் கிரிஷ்டோலால் பரப்பிரம்மசாரியே என்று அதில் முடிவு கூறினார். ஆனால் துணை நீதிபதியான ஜில்லா முஸ்லிம் சட்ட ஆபீஸர் மாறுபட்ட தீர்ப்பு வழங்கினார். ஐயத்துக்கு இடமில்லாமல் சந்நியாசி ஒரு வேஷதாரியென்று நிரூபணமாகவில்லை என்று அவர் அபிப்ராயப்பட்டார். அதன்மேல் இந்த வழக்கு நிஜாமத் அதலாத் என்ற ஸுப்ரீம் கோர்ட்டுக்கு சென்றது. செஷன்ஸ் ஜட்ஜின் அபிப்ராயத்தையே சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஆதரித்தார். சந்நியாசி ஒரு வேஷதாரியே என்று தமது தீர்ப்பில் கூறிவிட்டார். ஆனாலும் அந்தக் காலத்தில் ஆள் மாறாட்ட மோசடியைப் பெரிய குற்றமாகச் சட்டத்திலே குறித்திராததால், சந்நியாசிக்கு ஆயிரம் ரூபாய் அபராதம் மட்டுமே தண்டனையாக நீதிபதி விதித்தார். சந்நியாசியின் ஆட்களையும் விடுவித்துவிட்டார்.

இதன் பிறகு சில காலம் வரையில் சந்நியாசி கல்கத்தாவிலேயே வாசம் செய்து வந்தார். 1839 ஜுலை மாதம் ஸுப்ரீம் கோர்ட்டுக்கு ஒரு மனு எழுதி அனுப்பினார். அந்த மனுவில் தயை செய்து தங்கள் தீர்ப்பை ரத்து செய்ய வேண்டும். பர்துவான் ஸம்ஸ்தானத்தில் எனது உரிமையை நிலை நாட்டிக் கொள்ள எனக்கு மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கொடுத்து உதவ வேண்டும் என்று கோரியிருந்தார். ஆனால் ஸுப்ரீம் கோர்ட்டு அந்த மனுவை ஏற்கவில்லை.

இந்தச் சம்பவத்துக்கு பின்புதான் சிப்பாய்க் கலகம் என்று ஆங்கிலேயர் குறித்த சரித்திரப் புகழ் பெற்ற முதல் இந்திய

சுதந்தரப் போர் மூண்டது. ஸுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பினால் ஆத்திரம் அடைந்திருந்த சந்நியாசி ஆங்கிலேயரைப் பழிவாங்கும் நோக்கத்தோடு ஆங்கில ஆட்சியை எதிர்த்துத் தாக்கிப் பல ஆட்சேபகரமான பிரசங்கங்களைச் சாந்தால் மக்களிடையே செய்து அவர்களைப் புரட்சி செய்ய தூண்டினார். அதற்காக அவரைக் கைது செய்து பல வருஷங்கள் சிறையில் வைத்திருந்தார்கள். இறுதியில் 1856-ஆம் ஆண்டு அவர் விடுதலை அடைந்தார். ஆனால் முதல் இந்திய சுதந்தரப் போர் தொடங்கச் சில வாரங்கள் இருக்கும் போதே, இந்த பர்துவான் சந்நியாசி, தமது முயற்சி வெற்றி பெறாமல், மண்ணுலக வாழ்வை நீத்தார்.



# 9. நடிகையின் துணிச்சல்

கிஷோரி என்று திரையுலகில் அறிமுகமாகி இருந்தவள் மும்தாஜ். அவள் ஓர் உபநடிகை. தத்தாத்ரேய சதாசிவ நாத்கர்னி என்பவரைக் கொலை செய்ததாக அவள் மீது குற்றஞ் சாட்டி ஒரு வழக்கு தொடர்ந்தார்கள். அது மிகவும் புதுமையானது. ஏனென்றால், ஒரே குற்றத்துக்காக ஒரே நபர் மீது மூன்று முறை மூன்று நீதிபதிகள் - ஜூரிகள் முன்பு முதல் முதல் நடந்தது கிஷோரி கொலை வழக்கே. இறுதியில் கிஷோரி மீது சாட்டிய குற்றம் ருசுவாகி, நடிகை கிஷோரி நீண்ட கால சிறைத் தண்டனை பெற்றாள்.

இந்தக் கிஷோரி யார், எங்கேயிருந்து வந்தவள் என்பதைப் பற்றிய விவரங்கள் அனைத்தும் மூடு மந்திரங்களாகவே இருந்தன. சிலர், லாஹூரைச் சேர்ந்த அலாதித்தா ஸாஹப் என்ற முஸ்லிமின் குமாரியே கிஷோரி என்ற மும்தாஜ் என்றார்கள். வேறு சிலர், இல்லவே இல்லை. லக்நௌ நகரைச் சேர்ந்த மதிப்பு மிகுந்த ஒரு ஹிந்து குடும்பத்தைச் சேர்ந்தவள் கிஷோரி. சினிமாவில் நடிக்க வேண்டுமென்ற ஆர்வம் உந்த வீட்டை விட்டு வெளியேறிவிட்டாள் என்று கூறினார்கள். மேலும், சில

வட்டாரங்களில் கிஷோரி மைசூரைச் சேர்ந்தவள். கன்னட வகுப்பினள். தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவள் என்று வதந்திகள் நிலவின.

எது எப்படியாயினும் ஏறக்குறைய இருபதாண்டு களுக்கு முன்பு பம்பாய் திரையுலகில் கிஷோரியின் பெயர் அடிபட்டு வந்ததை அந்த நாளைய ஸினிமா ரசிகர்கள் அறிந்திருப்பார்கள். ஆனால், திரையுலகில் சுடர்விட்டு ஒளிரக் கிஷோரியால் இயலவில்லை.

கிஷோரிக்கு ஒரு குழந்தை இருந்தது. ஆனால் அவளுடைய கணவன் என்று தன்னைக் கூறிக் கொள்ள எவனும் இல்லை. ஆனால் இப்போது திரையுலகில் பிரபலமாக இருக்கும் நடிகர் ஒருவரே (அவரது பெயரை வெளியிடுவது உசிதமல்ல) அந்த நாட்களில் கிஷோரியின் ஆசை நாயகர் என்று ஒரு வதந்தி உண்டாம்.

கிஷோரிக்குத் திரையுலகில் வெற்றி கிட்டாததற்குப் பல காரணங்கள் இருந்தன. அவளுக்கு அழகு கிடையாது. நடிப்பு திறமை இருந்தும் கவர்ச்சியான தோற்றமோ, அந்தக் காலத்து நடிகைகளுக்கு இன்றியமையாத அம்சமாயிருந்த இன்குரலோ (அந்த நாட்களில் பிண்ணணி பாடகிகள்தான் இல்லையே) இல்லை. ஆகவே, திரையுலகிலிருந்து உப நடிகையாகவே கிஷோரி விலகிவிடும்படி நேர்ந்தது.

அதன்பின் விலைமகளாக வாழலானாள். ஆனால் மகா கைகாரியான இந்த நடிகை தன் வலையைப் பெரிய வட்டாரங்களிலேயே விரித்து வந்தாள். பம்பாயில் உள்ள பிரபல தாஜ்மஹால் ஹோட்டலுக்கு கவர்ச்சியாக ஆடை அணிந்து சென்று அங்கே பெரிய புள்ளிகளை எடை போட்டுத் தன் வசப்படுத்தி வந்தாள்.

விரைவிலேயே பம்பாயில் கிஷோரி மிகமிகப் பிரபலமான விலைமகள் ஆகிவிட்டாள். 1948-ஆம் ஆண்டில் ஒரு நபர் அவளுடன் ஒரு முறை குலவ ரூ.500 என்று ரேட் வைத்துவிட்டாள்.

கிஷோரியின் அபிமானிகளில் பெரும்பாலோர் மார்வாடிகள். அதன் பலனைக் கிஷோரி அடையாமல் போகவில்லை. மிகக் குறுகிய காலத்திலே கிஷோரியிடம் பெரும் பணம் கொழிக்க ஆரம்பித்துவிட்டது. கராச்சி நகரில் அவளுக்குச் சொந்தமான ஒரு ஸினிமா கொட்டகை ஏற்பட்டது. பாங்கில் நான்கு லகாரத்துக்குக் குறைவில்லாமல் வெள்ளையப்பன் ஏறியிருந்தான். இவை தவிர பல விலையுயர்ந்த நகை நட்டுக்கள் அவளிடம் சேர்ந்திருந்தன. பம்பாயிலேயே ஊர்லி வட்டாரத்தில் கிஷோரி கோர்ட் என்றோர் அழகிய பங்களாவும் ஸ்டுடிபேகர் மோட்டார் கார் ஒன்றும் ஹில்மன் மோட்டார் கார் ஒன்றும் நிறைய நிலபுலன்களும் கிஷோரியின் உடைமை ஆகியிருந்தன.

இத்தனை சொத்துக்கள் கிஷோரியிடம், எப்படிச் சேர்ந்தன?

அவள் மீது வழக்கு தொடர்ந்த போது, இந்த விஷயம் பற்றி தீவிரமாக புலன் விசாரணை செய்தார்கள். விலைமகளாகத் தொழில் புரிவதன் மூலம் ஒரு நபர் இவ்வளவு சொத்துக்களை சேர்ப்பது இயலாத காரியம், வழக்கு விசாரணையின் போது ரசமான பல அரிய உண்மைகள் வெளியாயின. போதைப் பொருள்கள், இரண்டாவது உலக யுத்தத்தை முன்னிட்டுத் தடைவிதிக்கப் பெற்றிருந்த வெளிநாட்டு சரக்குகள் (மோட்டார் கார்கள் உள்படத்தான்) இவற்றை ரகசியமாக தருவித்து விற்கும் கள்ள வியாபாரங்களில் கிஷோரி ஈடுபட்டிருந்தாள் என்பது தெரிய வந்தது.

கிஷோரி தனது பிரம்மாண்டமான பங்களாவின் மேல்மாடியில் வாழ்ந்து வந்தாள். கால்டெக்ஸ் கம்பெனியின் ஜில்லா மானேஜராகப் பணியாற்றி வந்த ரூபெர்ட் மேன் என்னும் ஆங்கிலேயரைக் கீழே வாடகைக்கு அமர்த்தியிருந்தாள். கிஷோரியிடம் டெலிஃபோன் ஒன்று இருந்தாலும் ஏனோ வழக்கமாக எல்லார் கண்களிலும் படும் இடத்தில் அதை வைக்காமல் ஒரு சிறிய அறையில் - அனுமதி இல்லாது ஒருவரும் உள்ளே புக இயல்லாத ஓர் அறையில் - அதை அவள் வைத்திருந்தாள். இது ஒரு புதிராகவே இருந்தது.

கிஷோரியின் பிரம்மாண்டமான பங்களாவை கண்காணிக்க வேலைக்கார பட்டாளமும் இருந்தது. ராம்பால் ஸிங் என்பவரும் மற்றொரு நபரும் அவளுடைய மெய்காவலர்களாகப் பணியாற்றினார்கள். ஜான் என்னும் கிறிஸ்துவர் கிஷோரியின் கார் ஓட்டியாக இருந்தார். மோகன், ரொஸாரியோ என்ற இருவரும் சமையல் வேலை செய்து வந்தார்கள். அவர்களுக்கு உதவியாக அதுல் என்றொரு வங்காளி வாலிபன் இருந்தான். மற்றும் சது, மல்லண்ணா, சின்னையா என்று மூன்று தோட்டக்காரர்கள் வேறு அவளது பங்களாவின் வெளிப்புறத்தில் ஓர் அவுட் ஹவுஸில் வாழ்ந்து வந்தார்கள்.

கிஷோரி நடத்தி வந்த விலைமகள் வாழ்க்கையைப் பற்றி போலீஸ் இலாகாவுக்கு அப்போதப்போது தகவல்கள் கிடைக்காமல் இல்லை. என்றாலும், அவளது இல்லத்தைச் சோதனை போடத் தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி அவர்கள் காத்துக் கிடந்தார்கள். 1948-ம் ஆண்டு மே மாதம் 7-ஆம் தேதி அந்த வாய்ப்பு அவர்களுக்கு வகையாக அமைந்துவிட்டது.

கிஷோரியின் பங்களாவான கிஷோரி கோர்ட்டினுள் அன்று இரவு நன்றாய்க் கௌரவமாக உடை உடுத்திய மூன்று கனவான்கள் நுழைந்தார்கள். தாங்கள் ஜயபுரியை சேர்ந்த

வியாபாரிகள் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். கிஷோரியின் விடுதியில் இன்பமாகப் பொழுதைக் கழிக்க வந்ததாக கூறினார்கள்.

கிஷோரியிடம் அந்தக் கனவான்கள் தங்களுக்கு இரண்டு பெண்களை அமர்த்தித் தரும்படி விண்ணப்பித்துக் கொண்டார்கள். அதற்குக் கிஷோரி அந்தக் கனவான்களுக்குத் தானே தேவைப்பட்டால் தலா ரூ.500 தரவேண்டும் என்றும், வேறு பெண்கள் போதும் என்றால் ரூ.300க்குள் அடங்கிவிடும் என்றும் கூறினாள். கிஷோரி தேவையில்லை என்று அந்த கனவான்கள் கூறிவிடவே, அவள் அவர்களிடமிருந்து ரூ.300 பெற்றுக் கொண்டு இரண்டு பெண்களை அயல்நாட்டு மது வகையறாக்கள் சகிதம் அந்த அதிதிகளிடம் அனுப்பி வைத்தாள்.

கிஷோரி அனுப்பிய பெண்ணான இந்திரா வந்து அதிதிகளுடன் குலவும் வேளையில் சற்றும் எதிர்பாராதவிதமாகப் போலீஸ் டெபுடி இன்ஸ்பெக்டர் ஸால்வி என்பவரும் ஸப் இன்ஸ்பெக்டர் சாந்தி பர்வாணி என்பவரும் கிஷோரியின் இல்லத்துக்கு வந்தார்கள். அடையாளக் குறியிட்டிருந்த கரன்ஸி நோட்டுக்களை அவளிடமிருந்து கைப்பற்றினார்கள்.

பின்பு கிஷோரியின் பங்களாவைச் சோதனையிட்ட போது பிரபல அயல்நாட்டு மதுபான வகைகளான ஸ்காட்ச் விஸ்கி, ஷெர்ரி, மதிரா, கிரேம் டே மேந்தே போன்ற விலை உயர்ந்த - லைஸென்ஸ் அற்ற - பலவகை மதுபான புட்டிகளையும் கண்டெடுத்தார்கள்.

இதன் பிறகு கிஷோரி மீது பம்பாய் போலீஸ் இலாகா இரண்டு குற்றங்களை தாக்கல் செய்தது. முதலாவது குற்றம் விலைமகளாய் தொழில் புரிந்ததும் பிற பெண்களையும் அந்த தொழிலில் ஈடுபடுத்தியதும், இரண்டாவது குற்றம் குறிப்பிட்ட

அளவான நான்கு புட்டிகளை தவிர லைஸன்ஸ் இல்லாமல் பல மதுபான புட்டிகளை வைத்துக் கொண்டிருந்தது.

பம்பாய் தாதர் கோர்ட் மாகாண மாஜிஸ்டிரேட் டி.எஸ்.பாபரேகரின் முன்பு வழக்கு விசாரணைக்கு வந்தது. கிஷோரியை குற்றவாளியென்று நீதிபதி தீர்மானித்தார். இரண்டு குற்றங்களுக்குமாக மொத்தம் ரூ.700 அபராதமும், அது தவிர ஆறு மாத சிறைவாசமும் தண்டனையாக விதித்தார். தீர்ப்பை எதிர்த்து மேல் கோர்ட்டுக்கு கிஷோரி செய்து கொண்ட அப்பீல் தள்ளுபடியாயிற்று. கிஷோரி வேறு வழியில்லாமல் சிறையில் காலங்கழிக்க நேர்ந்துவிட்டது.

ஆனால் இந்த அபராதமும் சிறைவாசமும் கிஷோரியை எந்தவிதத்திலும் பாதித்ததாகத் தெரியவில்லை. விடுதலை அடைந்தவுடன் அவள் எந்தவிதமான மாறுதலும் இல்லாமல் முன்போலவே - ஆனால் சற்று ஜாக்கிரதையாகவே - தன் பழைய வேலைகளை செய்து வந்தாள். ஆசாபாசங்களுக்கு இடம் இல்லாத விலைமகளாகச் செய்த தொழிலை தொடர்ந்து நடத்தி வந்த போதுதான், கிஷோரி தன்னையும் அறியாமல் விதியின் கையில் சிக்கிக் கொண்டாள்.

விலைமாதான கிஷோரியின் உள்ளத்திலும் காதல் புகுந்து விளையாடிவிட்டதென்றால், அதை விதி என்று தானே சொல்ல வேண்டும்? ஆம். கிஷோரி எப்படியோ ஓர் அபிமானியிடம் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து, அவரை மனமாரக் காதலிக்கத் தொடங்கிவிட்டாள்.

கிஷோரியின் வலையில் சிக்கி இறுதியில் உயிர் துறந்த அந்த வாலிபர்தான் தத்தாத்ரேய சதாசிவ நாத்கர்னி.

தத்தாத்ரேய சதாசிவ நாத்கர்னி பண்பு வாய்ந்த கௌரவமான நடுத்தரக் குடும்பம் ஒன்றை சேர்ந்தவர். முன்னாளில் பம்பாய்

ஸபர்பன் ஜில்லா போலீஸ் அலுவலகத்தில் ஸப் இன்ஸ்பெக்டராக பணியாற்றி வந்த நாத்கர்னி பின்பு அந்த உத்தியோகத்தை விட்டு விலகி டி.டபிள்யூ-ரெயில்வே டிராஃபிக் மானேஜராக பணியாற்றி வந்தார். ஏறக்குறைய மாதம் ஆயிரம் ரூபாய் வரையில் ஊதியம் பெற்று வந்த நாத்கர்னி நடுத்தரக் குடும்பத்திலிருந்து மேலுக்கு வந்தவர். எனவே, பணத்தை விரயம் ஆக்காமல் மிகவும் கருத்தோடு இருந்து சேமித்து வந்தார். குறிப்பிட்ட சம்பவம் நிகழ்ந்த நாட்களில் நாத்கர்னியின் சொந்த சேமிப்பாக பாங்க் அவ் இந்தியாவில் ரூ.19,000 இருந்தது. கிஷோரியின் மோக வலையில் இந்த வாலிபர் வீழ்ந்த பரிதாபத்தை எப்படி வரையறுத்துக் கூறுவது.

நாத்கர்னியும் கிஷோரியும் ஓர் இடத்தில் அடிக்கடி ஒன்றாக தென்பட்டார்கள். பம்பாய் மகாலக்ஷ்மி ரேஸ் மைதானத்தில் குதிரை பந்தயம் நடக்கும் நாட்களிலெல்லாம் தவறாமல் இருவரையும் அங்கே காணலாம். கிஷோரி தன் அன்பளிப்பாக நாத்கர்னிக்கு அளித்திருந்த மோதிரத்தை நாத்கர்னி தம் விரலை விட்டுக் கழற்றுவதே இல்லை. விரைவிலேயே கிஷோரியை தாம் மணந்து கொள்ளப் போவதாக நாத்கர்னி தம் சுற்றத்தார்களிடமும் நண்பர்களிடமும் பகிரங்கமாகவே பறைசாற்றி வந்தார்.

கிஷோரியுடன் நட்பு பூண்ட நாட்களில் நாத்கர்னியின் சேமிப்பு பணம் பெரிதும் கரைந்துவிட்டது. வரவரக் கிஷோரியின் தயவிலேயே வாழ வேண்டிய நிலை கூட நாத்கர்னிக்கு வந்துவிட்டது. ஆயினும், உத்தியோகத்தை மட்டும் நாத்கர்னி விட்டுவிடவில்லை. ஆனால் கிஷோரியின் பங்களாவிலேயே நிரந்தர விருந்தாளியாக அவர் தங்கியிருக் கலானார். சுருங்கக் கூறினால், மணம் ஆகாத தம்பதியாகவே நாத்கர்னியும் கிஷோரியும் வாழ்க்கை நடத்தி வரலானார்கள்.

ஆனாலும் தாத்கர்னி ஒருத்தர் இருக்கிறாரே என்பதற்காகக் கிஷோரி தன் விலைமகள் தொழிலை விட்டுவிடவில்லை. என்றும் போல் அவளுக்கு அபிமானிகள் வந்து போய்க் கொண்டே இருந்தார்கள். அவளும் அவர்களை மகிழ்வித்துப் பொருளீட்டி வந்தாள். தம் வருங்கால மனைவி என்று மனக்கோட்டை கட்டியிருந்த கிஷோரி இப்படி கீழ்த்தரமாக வாழ்க்கை நடத்தி வந்தது நாத்கர்னிக்கு அருவருப்பையும் அசூயையும் அளித்ததில் வியப்பில்லை. பலமுறை இதைப் பற்றி நயமாகவும் மிரட்டியும் கிஷோரிக்கு அவர் அறிவுறுத்தி வந்தார். ஆனால் கிஷோரி அவரை சட்டை செய்ததாகவே தெரியவில்லை.

ஒரு நாள் காதலர்கள் இருவரிடையேயும் வாக்குவாதம் முற்றிவிட்டது. அதன் பயனாக அடுத்த தினம் காலையில் நாத்கர்னி பிணமாக கிடக்க நேரிட்டது.

டில்லியை சேர்ந்த லட்சாதிபதியான சங்கர்லால் என்பவரை கிஷோரி தன் தோழிகளுடன் ஆடியும் பாடியும் 1949-ஆம் ஆண்டு பிப்ரவரி 8-ஆம் தேதி மகிழ்வித்துக் கொண்டிருந்தாள். இரவு பதினொரு மணி வரையில் குடியும் கூத்துமாக கேளிக்கை களியாட்டங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. நாத்கர்னிக்கு வெறுப்பு மேலிடவே, பொறுக்க மாட்டாதவராக விர்ரென்று கேளிக்கை கூடத்துக்கு சென்று அதிதியை அதட்டிவிட்டார். நாத்கர்னியின் கோபத்தைக் கண்டு அரண்டுவிட்ட அதிதி உடனே கிஷோரியிடம் விடைபெற்றுச் சென்றுவிட்டார். பெரும்புள்ளியான அவரிடமிருந்து பெரிய தொகையை எதிர்பார்த்துக் கிடந்த கிஷோரிக்கு அது கிடைக்காமல் போயிற்று. அதற்கு ஓரளவு காரணமாக இருந்த நாத்கர்னியின் மீது அவளுடைய ஆத்திரம் பாய்ந்தது.

கிஷோரி, நாத்கர்னி இருவருக்குள்ளும் பலமான வாக்குவாதம் கிளம்பியது. பணமே பிரதானம் என்று வாதாடிய கிஷோரியின் மீது சினங் கொண்ட நாத்கர்னி தம் மணிபர்ஸைத் தூக்கி அவளது மடியில் வீசினார். திட்டினார். அவள் மீது காறி உமிழ்ந்தார். பிறகு படுக்கச் சென்றுவிட்டார்.

அடுத்த நாள் காலையில் கிஷோரியின் பங்களா வாயிலில் நிலத்தில் மரணாவஸ்தையுடன் நாத்கர்னி கிடந்தார். அவரது வாயிலிருந்து ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. கிஷோரியின் பங்களாவில் கீழே குடியிருந்த மிஸ்டர் ரூபேர்ட் மேன் என்பவரின் கார் ஓட்டியான அப்துல் காதர் அப்துல் ரகூீத் என்பவரே அந்த நிலையில் நாத்கர்னியை முதல்முதல் கண்டவர். அடுத்து கண்டவர் ஜான். கிஷோரியின் கார் ஓட்டியான ஜான் தம் வருங்கால எஜமானரின் நிலையைக் கண்டு கலங்கி ஒரு கோப்பையில் தண்ணீர் கொண்டு வந்தார். ஆனால் மேல் மாடியில் பால்கனியில் இப்போது கிஷோரி நின்று கொண்டிருந்தாள். ஜானை அவள் அழைத்து நாத்கர்னியை மேல் மாடிக்கு தூக்கி வர பணித்தாள். அப்படியே அந்த நிலையில் நாத்கர்னியை மேல் மாடிக்கு எடுத்து சென்றார்கள்.

கிஷோரியின் குடும்ப டாக்டரான டாக்டர் பை என்பவரை ஒரு வேலைக்காரன் அழைத்து வந்தான். நாத்கர்னி குடிபோதையில் இருந்த போது, சலவைக் கல் மாடிப்படியில் சறுக்கி விழுந்துவிட்டார். அதனால் காயமுற்றார் என்று டாக்டரிடம் கிஷோரி தெரிவித்தாள்.

நாத்கர்னியை பரிசோதித்தவர் டாக்டர் பை. நாத்கர்னியின் நிலைமை மிகவும் கவலைக் கிடமாயிருந்ததால், அவரை ஆஸ்பத்திரிக்கு எடுத்து செல்ல டாக்டர் பணித்தார். பிற்பகல் இரண்டு மணிக்கு அதே மயக்க நிலையில் சுயநினைவு இல்லாத நாத்கர்னியை ஆம்புலன்ஸ் வண்டியில்

வேலைக்காரர்கள் புடை சூழ பம்பாய் ஸெயிண்ட் ஜார்ஜ் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றார்கள். எஜமானர் வழுக்கி விழுந்ததாகவே, ஆஸ்பத்திரி அதிகாரிகளிடம் கிஷோரியின் வேலைக்காரர்கள் கூறினார்கள்.

இதற்குள் ஒரு தூதுவனின் மூலம் நாத்கர்னியின் குடும்பத்தாருக்கு செய்தி போயிற்று. அதைக் கேள்வியுற்றதுமே நாத்கர்னியின் இரண்டு சகோதரர்களான சிவானந்தும் ஸதாநந்தும் ஆஸ்பத்திரிக்கு விரைந்தோடி வந்தார்கள். நாத்கர்னி மிதமிஞ்சிக் குடிக்கும் இயல்பு உடையவர் அல்ல. ஆகவே, அவருக்கு நேர்ந்ததை எதிர்பாராத விபத்தாக அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. போதாததற்கு நாத்கர்னியின் மோதிரத்தைக் கிஷோரியின் வேலைக்காரன் அணிந்திருந்ததை அவர்கள் கண்ணுற்ற போது மேலும் சந்தேகப்பட்டார்கள். அவர்களுக்கு எழுந்த சந்தேகத்தை சமாளிக்கும் வகையில் அந்த முட்டாள் வேலைக்காரன் தானாகவே முன்வந்து, நாத்கர்னி ஐயாவை நினைவிழந்த நிலையில் ஆஸ்பத்திரிக்கு எடுத்து சென்ற போது மோதிரம் பத்திரமாயிருக்கட்டும் என்று எண்ணினேன். மோதிரத்தைக் கழற்றி எடுத்து என் கையில் போட்டுக் கொண்டேன் என்றான், பாவம். அந்த மோதிரத்தை விட விலை மிகுந்த பொன் பித்தான்களை நாத்கர்னி அணிந்திருந்ததை நாத்கர்னியின் சகோதரர்கள் கவனித்தார்கள். இதை அந்த அப்பாவி உணரவில்லை. தங்கள் சந்தேகம் தெளியாமலே நாத்கர்னியின் சகோதரர்கள் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினார்கள்.

கிஷோரி, அவளுடைய வேலைக்காரர்கள் இவர்கள் மீது நாத்கர்னியின் சகோதரர்கள், டில்ஸ் ரோடு போலீஸ் நிலையத்தில் புகார் மனு ஒன்றை சமர்ப்பித்தார்கள். அவர்களது மனுவை போலீஸ் இலாகாவினர் ஏற்றுக் கொண்டார்கள். கொலை

குற்றம் புரிய கிஷோரியும் அவளுடைய பணியாளர்களும் முயன்றதாக ஒரு வழக்கை பதிவு செய்து கொண்டு புலன் விசாரணைகளைத் தொடங்கினார்கள். விசாரணை நடந்த நாட்களிலெல்லாம் நினைவு இழந்த நிலையிலேயே நாத்கர்னி இறந்தார். எனவே, போலீஸாருக்கு அவரது வாக்குமூலத்தை பெறவே இயலவில்லை.

பிப்ரவரி மாதம் 14-ஆம் தேதி நாத்கர்னிக்கு சற்றே மயக்கம் தெளிந்து நினைவு உண்டாயிற்று. உடனே அவரைப் படேல் சேம்பர்ஸ் ஆஸ்பத்திரிக்கு ஸெயிண்ட் ஜார்ஜ் ஆஸ்பத்திரி அதிகாரிகள் அனுப்பினார்கள். ஏனென்றால், நாத்கர்னிக்கு மண்டையில் பெரிய ஆபரேஷன் செய்ய வேண்டியிருந்தது. டாக்டர்.ஏ.வி.பாலிகா என்பவர் சேம்பர்ஸ் ஆஸ்பத்திரியில் அப்போது பணியாற்றி வந்தார்.

பிப்ரவரி 17-ஆம் தேதி நாத்கர்னிக்கு மண்டையில் டாக்டர்.ஏ.வி.பாலிகாதான் ஆபரேஷன் செய்தார். ஆனால், ஆபரேஷன் படுதோல்வி அடைந்துவிட்டது. பாவம் 19-ஆம் தேதி நடுநிசி இரண்டு மணிக்கு நாத்கர்னி இந்த மண்ணுலக வாழ்வை நீத்து சென்றுவிட்டார். கடைசி வரையில் அவர் முழு ஸ்மரணை பெறவேயில்லை.

ஓரளவு புலன் விசாரணை நடைபெற்றவுடனேயே சில விவரங்களை ரக்சிய போலீஸ் அதிகாரி ஒருவர் சேகரித்துக் கொண்டு, அந்த ஆதாரத்தின் மேல் நடிகை கிஷோரியின் இரண்டு வேலைக்காரர்களை கைது செய்ய ஏற்பாடு செய்துவிட்டார்.

ஆனால் கிஷோரியின் பங்களாவில் வேலைக்காரர்களுள் ஒருவனான மோகன் ஆஸ்வாரஸ் அகப்படவில்லை. பிப்ரவரி மாதம் 12-ஆம் தேதி அவன் திருட்டுத்தனமாக கோவாவுக்கு (அப்போது போர்த்துகீஸியர் வசம் இருந்த பிரதேசம்) ஓடிவிட

எண்ணிக் கப்பல் ஏற ஆயத்தமாகியிருந்தான். போலீஸார் அப்போது அவனை கண்டுபிடித்து கைது செய்தார்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக கிஷோரியே தப்பி ஓடிவிட முயன்றாள். அவளை பம்பாயில் சல்லடை போட்டு சலித்தார்கள். பல பிரபல நகரங்களிலுள்ள போலீஸ் நிலையங்களுக்கும் கிஷோரியை பற்றி தெரிவித்துக் கண்காணிப்பாக இருந்து அவளை பிடிக்கும்படி எச்சரிக்கை அனுப்பியது பம்பாய் போலீஸ் இலாகா. கிஷோரி என்ன நினைத்தாளோ - போலீஸ் கெடுபிடியிலிருந்து தப்புவது கடினம் என்றுதான் முடிவு செய்திருக்க வேண்டும் என தோன்றுகிறது. 15-ஆம் தேதி தானாகவே போலீஸ் ஸ்டேஷனில் சரணாகதி அடைந்துவிட்டாள். போலீஸார் அவளை கைது செய்து பாதுகாப்பில் வைத்தார்கள்.

கிஷோரி மீதும் அவளுடைய பணியாளர்கள் மீதும் கொலைக் குற்றம் புரிய முயன்றதாக முன்னே பதிவாகியிருந்த வழக்கு, இப்போது தாத்கர்னி இறக்கவே, கொலை குற்றம் புரிந்த வழக்காகவே மாற்றிப் பதிவாயிற்று. மேலும், தீவிரமாக போலீஸார் புலன் விசாரணை செய்யவே, அதிர்ஷ்டவசமாக இன்னும் சில சாட்சிகள் கிடைத்தார்கள். நாத்கர்னி மீது அடிதடி பிரயோகம் நிகழ்ந்ததையும், நாத்கர்னியை பலவந்தமாக கிஷோரியின் பங்களா பால்கனியிலிருந்து எதிரிகள் வீசி எறிந்ததையும் கண்ணுற்ற மூன்று நபர்கள் சாட்சி சொல்ல முன்வந்தார்கள்.

பம்பாய் மாகாண ஐந்தாம் மாஜிஸ்டிரேட்டான ஜி.ஆர்.ராஜே என்பவரின் முன்பு கிஷோரி, அவளுடைய இரண்டு வேலைக்காரர்கள் ஆக மூவர் பேரிலும் தொடர்ந்த கொலை வழக்கு விசாரணைக்கு வந்தது. முதலில் அப்ரூவராகிவிட இசைந்த மோகன் ஆல்வாரஸ், பின்னால் மனம்

மாறிவிட்டான். எனவே, குறிப்பிட்ட கொலைக்கு உடந்தையாக இருந்ததாக குற்றஞ் சாட்டி அவன் மீதும் வழக்கு பதிவாயிற்று.

பிராஸிக்யூஷன் தரப்பினர் சாட்டிய குற்ற விவரம் இது : பிப்ரவரி மாதம் 8-ஆம் தேதி காதலர்களான நாத்கர்னி, கிஷோரி இருவருக்கும் இடையே எழுந்த பூசலின் பயனாக நான்கு எதிரிகளும் நாத்கர்னியை ஈவிரக்கம் இல்லாமல் அடித்து வீழ்த்தினார்கள். நினைவிழந்த நாத்கர்னியை எஜமானியம்மாளின் உத்தரவுக்கு இணங்க குறிப்பிட்ட இரண்டு வேலைக்காரர்களும் மேல் மாடி பால்கனியிலிருந்து வீசியெறிந்தார்கள். இந்த கொலையை அமுக்கிவிடும் துர் எண்ணத்தோடு கிஷோரியே தன் வேலைக்காரர்களுக்கு, நாத்கர்னி மிதமிஞ்சிக் குடித்து குடிபோதையினால் மாடிப்படியில் சறுக்கி விழுந்தார் என்று அனைவரிடமும் கூறுங்கள் என்று பணித்தாள். கிஷோரி தலைமறைவாக ஐந்து நாட்கள் இருந்ததன் காரணமே இதுதான். அவள் உண்மையில் கொலை செய்யவில்லையென்றால், ஏன் தலைமறைவாயிருக்க வேண்டும்?

பிராஸிக்யூஷன் தரப்பில் சாட்சி கூறிய நபர்களில் கிஷோரியின் இதர வேலைக்காரர்களிலும் சிலர் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஒரே முகமாக, நாத்கர்னி, கிஷோரி இருவருக்கும் இடையே பலத்த வாக்குவாதம் நடந்தது. பின்பு கிஷோரி ஓர் எரிமலையாக மாறிவிட்டாள். வேலையாட்களின் உதவியுடன் ஈவிரக்கம் இல்லாமல் தடி, செருப்பு இவற்றால் நாத்கர்னியை நைய புடைத்தாள். அதன் பயனாக நாத்கர்னி நினைவிழந்து விழுந்தார் என்றெல்லாம் மிக விவரமாக கூறினார்கள். ஆனால் இந்த நாத்கர்னியை பால்கனியிலிருந்து எப்போது எப்படி எறிந்தார்கள் என்று தெளிவாக கூற இந்த வேலைக்காரருள் எவனாலும் இயலவில்லை.

மல்லண்ணா என்ற தோட்டக்காரன் மட்டும் பிப்ரவரி மாதம் 9-ஆம் தேதி காலையில் எதேச்சையாக என் குடியிருப்பான அவுட்ஹவுஸை விட்டு நான் வெளியே வந்தபோது, நாத்கர்னி பால்கனியிலிருந்து தடால் என்று தரையில் வந்து விழுந்ததை பார்த்தேன் என்று குறிப்பிட்டான். மல்லண்ணாவின் மகன் சின்னையாவும் தன் தந்தை கூறியபடியே சாட்சி சொன்னான். மேலும், இந்த எளியவர்களை பின்பு கிஷோரி தன் இருப்பிடத்துக்கு அழைத்தாளாம். இருவரும் கொஞ்ச காலம் போர்த்துகீசிய பிரதேசமான தாமனில் வசியுங்கள். உங்களுக்கு தேவையான செலவினங்களை நானே மேற்கொள்கிறேன். அதோடு ஒரு கொழுத்த தொகையை பரிசாகவும் அளிக்கிறேன் என்று அப்போது அவள் கூறியதாக மல்லண்ணா தெரிவித்தான்.

கார் ஓட்டியான ஜானின் வாக்குமூலம் ஏறக்குறைய மல்லண்ணாவின் வாக்குமூலத்தையே ஒட்டி இருந்தது.

நாத்கர்னியின் தம்பியான சிவானந்த் தம் தமையன் கொலையுண்டதாகவே தாம் கருத நேர்ந்த முகாந்திரங்களை கூறினார். நாத்கர்னியின் மோதிரத்தை வேலைக்காரன் அணிந்திருந்தான். யாரும் கேட்காமலே அதற்கு அவன் சமாதானம் கூறினான். தவிர, நாத்கர்னி முழு நினைவு பெறாமலே மரித்தார் என்பது உண்மையே.. ஆனாலும் பிப்ரவரி 14-ஆம் தேதி அவருக்கு கொஞ்சம் நினைவு திரும்பியிருந்தது. அப்போது பேசும் சக்தி இல்லை. என்றாலும், பிறர் சொல்வதை புரிந்து கொள்ளும் நிலையில் நாத்கர்னி இருந்தார். அந்த சமயம் நீ தவறி விழுந்து விட்டாயா? என்று நானும் தம்பியும் இதர அனுதாபிகளும் கேட்டோம். இல்லை என்பதற்கு அடையாளமாக தலையை நாத்கர்னி அசைத்தார். இரு கைகளாலும் தம்மை அவர்கள் அடித்ததாக சைகைகளும் காட்டினார்.

மிஸ்டர் ரூபர்ட்மேன் என்பவர், நாத்கர்னி நினைவிழந்த நிலையில் தரையில் கிடந்ததை நானே என் குளியலறை ஜன்னல் வழியாக கண்டேன் என்று சாட்சியம் கூறினார்.

நார்கர்னி மரிக்க நேர்ந்தது அளவுக்கு மீறிய அடிதடிகளாலும், 15 முதல் 20 அடி உயரத்திலிருந்து வீசி எறிய பெற்றதாலுமே என்று தெளிவுபடுத்தும் வகையில் டாக்டர்களின் அபிப்ராயங்களும் இருந்தன.

இந்த வாதங்கள் பலம் பெறவே, கிஷோரி மீதும், அவளுடைய மூன்று பணியாளர்களின் மீதும் கொலை குற்றம் சாட்டி வழக்கை செஷன்ஸ் கோர்ட் விசாரணைக்கு அனுப்பினார்கள். செஷன்ஸ் கோர்ட் நீதிபதி ஹானோவரும், ஒன்பது ஜூரர்களில் ஆறு நபர்களும் கிஷோரி, அவளுடைய இரண்டு பணியாட்கள் மூவரையும் குற்றவாளிகள் என்று தீர்ப்பில் கூறிவிட்டார்கள். மோஹன் மீது தெளிவான சாட்சியம் இல்லாத சந்தேகத்தினால் அவனுக்கு விடுதலை கிடைத்தது. கிஷோரிக்கும் மற்ற இருவருக்கும் ஏழாண்டுகள் கடுங்காவல் தண்டனை கிட்டியது.

செஷன்ஸ் கோர்ட் தீர்ப்பை எதிர்த்து கிஷோரி மேல்கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொண்டாள். மீண்டும் தொடக்கத்திலிருந்து வழக்கை விசாரணை செய்ய உத்தரவு பிறந்தது.

இரண்டாவது முறை கிஷோரியின் வழக்கு விசாரணை நடந்தது. இந்த முறை ஜஸ்டிஸ் கார்ல் காண்டே வாலா என்பவர் நீதிபதியாகப் பணியாற்றினார். ஏழு கனவான்கள் ஜூரர்களாகப் பணியாற்றினார்கள். கிஷோரியும் அவளுடைய வேலைக்காரர்களும் குற்றம் இழைக்கவில்லையென்று நாலு ஜூரர்களும் கிஷோரியும் அவளுடைய வேலைக்காரர்களும் குற்றம் இழைத்தவர்கள் என்று மூன்று ஜூரர்களும் தீர்ப்பு

கூறினார்கள். இந்த தீர்ப்பை ஏற்க முடியாது என்று திட்டவட்டமாக நீதிபதி மாண்டேவாஸா கூறிவிடவே, மூன்றாம் முறையாக கிஷோரியின் வழக்கு விசாரணை நடைபெற்றது.

மூன்றாம் முறை ஜஸ்டிஸ் ஜே.எம்.ஷேலட் என்பவர் தலைமை நீதிபதியாக பணியாற்ற, அவருக்கு உதவியாக ஒரு ஸ்பெஷல் ஜூரர் குழு நியமனமாயிற்று.

அதில் கொலை செய்ய முயன்ற குற்றத்துக்காக மூன்று குற்றவாளிகளுக்கும் தலைக்கு ஐந்தாண்டு கடுங்காவல் தண்டனையை நீதிபதி ஷேலட் விதித்தார். இந்த தீர்ப்பை கிஷோரி எதிர்த்து ஸுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்ய முயன்றாள். அது தயாதாட்சிண்யம் இல்லாமல் தள்ளுபடியாகிவிட்டது.

'ஸி' பிரிவு கைதியாகவே எரவாடா சிறையில் அவளைக் காவலில் வைத்தார்கள். ஐந்தாண்டு கால சிறைவாசத்தைக் கிஷோரி அனுபவித்த பிறகு, பாரத நாட்டுக்கே ஒரு முழுக்கு போட்டுவிட்டு பாகிஸ்தானை நோக்கி நடையை கட்டிவிட்டாள்.



# 10. பிளேக் கிருமி மூலம் கொலை

விநயேந்திர பாண்டேயும், அமரேந்திர பாண்டேயும் மேற்கு வங்காளத்தை சேர்ந்த சாந்தால் பர்கணாவில் ஐசுவரியம் மிகுந்த பகூர் பிரதேசத்தில் ஜமீன்தார் பரம்பரையை சேர்ந்த தமையன் தம்பிமார். இருவருக்கும் ஒரே தந்தை. ஆனால், விநயேந்திரன் மூத்த மனைவியின் மகன். அமரேந்திரன் இளைய மனைவியின் மகன்.

1929-ஆம் ஆண்டு தந்தை மரித்தார். வாரிசுகளான விநயனும் அமரனும் பகூர் பிரதேசத்தின் உரிமையை பெற்றார்கள். அப்போது அவர்களுள் மூத்தவனின் வயது 27. இளையவனின் வயது 16. தந்தையின் திரண்ட ஜவேஜிக்கு மட்டும் அல்ல, பிள்ளைப் பேறு இல்லாத ராணி சூர்யவதி என்ற விதவை அத்தையின் ஏராளமான ஜவேஜிக்கும் இந்த இரண்டு பேரும் வாரிசானார்கள்.

தந்தை இறந்தவுடனே மூத்த மகனான விநயனே எஸ்டேட்டின் நிர்வாக பொறுப்பை ஏற்றான்.

ஆனால் அவன் பெரும்பாலும் கல்கத்தாவிலேயே தன் நாட்களைக் கடத்தியதோடு, பலவிதமான சிற்றின்ப கேளிக்கைகளில் தங்கள் பொது சொத்தை அழித்து வந்தான்.

பாலிகாபாலா என்ற வேசி பெண்ணின் எழிலில் அவன் மதி மயங்கிவிட்டான். கொண்ட மனைவியும் ஒரு மகளும் இருந்தும் அவர்களை புறக்கணித்துவிட்டு பாலிகாபாலாவுடன் பகிரங்கமாக ஊர் சுற்றினான். விநயனுக்கு மட்டும் அல்ல. டாக்டர் தாராநாத் பட்டாசார்ஜி என்பவனுக்குமே ஆசை நாயகியாக இந்த வேசி இருந்து வந்தாள். இவளை விநயனுக்கு அறிமுகப்படுத்தியவனே டாக்டர்.தாராநாத்தான். பாலிகாபாலாவின் நட்பால், விநயன் தங்கள் ரொக்கப் பணத்தைக் கரைத்துவிட்டு குடும்ப நகைகள் மீதும் கை வைக்கத் தொடங்கினான். விரைவில் எஸ்டேட்டே அழிந்துவிடுமோ என்று உறவினர்கள் அஞ்சினார்கள். சொத்துக்கு மற்றொரு வாரிசான அமரனும் தமையனின் ஊதாரித்தனத்தைக் கண்டு பெரிதும் வருந்தினான்.

அமரன் அப்போது பாட்னா நகரில் ஒரு விடுதியில் தங்கி பி.ஏ. வகுப்பில் முதல் வருஷம் படித்துக் கொண்டிருந்தான். தம்பியின் படிப்புக்கும் ஹாஸ்டல் செலவுக்குங் கூட விநயன் சரிவர பணம் அனுப்பவில்லை. இதனால் மனமுடைந்த அமரன் தன் வெறுப்பை உமிழ்ந்து காரசாரமாக தமையனுக்கு பல கடிதங்கள் எழுதினான்.

அமரனை உறவினர்கள் மேலும் மேலும் தூண்டிவிட்டார்கள். ராணி சூர்யவதி அமரனை சதா சர்வ காலமும் அவனுடைய பங்கு சொத்துக்காவது கோர்ட்டு நடவடிக்கை மூலம் பாதுகாப்பு ஒன்றை ஏற்படுத்திக் கொள்ள வற்புறுத்தி வந்தாள். உறவினர்களின் தூண்டுதலால் சற்றே துணிவு பெற்றான் அமரன். 1931-ஆம் ஆண்டு மேஜர் ஆனதும் முதல் காரியமாக குடும்ப சொத்தில் தன் பாகத்தை பாதுகாத்துக் கொள்ள தீவிர நடவடிக்கை எடுத்தான். அதன் பயனாக சொத்துக்களின் பாதுகாப்புக்கு விநயனால் கட்டுப்படுத்த முடியாத சில பெரிய மனிதர்களின் பெயரில் கோர்ட்டு மூலமாக

ஒரு பவர்-அவ்-அட்டர்னி (அதிகார பத்திரம்) ஏற்படுத்திவிட்டான். இந்த விஷயம் 1932-மே 12-ஆம் தேதியன்றுதான் விநயனுக்கு தெரிய வந்தது.

பவர்-அவ்-அட்டர்னியில் குறிப்பிட்டிருந்த பெரிய மனிதர்கள் எந்த வகையிலும் அமரனின் சொத்தை பாதுகாத்தே தீருவார்கள், தன் சொல்லை கேட்கவேமாட்டார்கள் என்பதை நன்றாக விநயன் உணர்ந்தான். அமரனை மிரட்டி பல கடிதங்கள் எழுதினான். உடனே பவர்-அவ்-அட்டர்னியை ரத்து செய் என்று அவற்றில் வற்புறுத்தினான். அண்ணனின் மிரட்டலுக்கு அஞ்சி பவர்-அவ்-அட்டர்னியை அமரனும் ரத்து செய்துவிட்டான்.

அவன் 1932 அக்டோபர் மாத விடுமுறையை கழிக்கும் நிமித்தம் தேவகர் என்ற சிறிய ஊரில் அத்தை ராணி சூர்யவதியின் இல்லத்தில் தங்கினான். ராணி சூர்யவதியின் இடைவிடாத நச்சரிப்பின் பயனாகத் தந்தை சொத்தில் தனக்கு உரிய பாகத்தை பிரித்து கொண்டு விட அமரன் தீர்மானித்தான். இதைப் பற்றி ஜாடைமாடையாக கேள்வியுற்ற விநயன் மிகவும் ஆத்திரமடைந்தவனாய், உடனே ஒரு கம்பவுண்டருடன் தம்பியை காண தேவகருக்கு விரைந்து வந்து சேர்ந்தான். தன் செய்கைகளுக்கு மிகவும் வருந்துவது போல் நடித்து அமரனை மனம் நெகிழச் செய்து, பின்பு அவனை தன்னுடன் உலாவ அழைத்துச் சென்றான். இவர்களுடன் கம்பவுண்டரும் சென்றான். இவர்கள் உலாவிவிட்டு வரும் போதே அமரன் மயங்கிய நிலையில் அரைகுறை நினைவோடு வீட்டை அடைந்தான். அவனை இந்த நிலையிலேயே விட்டுவிட்டு, என்ன, ஏது? என்று கூடக் கேளாமல் சிறிதும் கவலைப்படாமல், அன்றிரவே விநயன் தன் கம்பவுண்டருடன் தேவகரை விட்டு வெளியேறி பகூருக்கு போய் சேர்ந்தான்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த மூன்று நாளைக்கு பின்பு அமரன் கடுமையாக நோய்வாய்ப்பட்டான். உள்ளூர் டாக்டர் சுரேந்திரநாத் முகர்ஜியை அழைத்துக் காட்டினார்கள். அமரனைப் பரீட்சித்த டாக்டர் அவனை டெட்டானஸ் (தாடையை கோண செய்யும் ஒரு வகை கொடிய நரம்பிழுப்பு நோய்) பற்றியிருப்பதாக கண்டு அதற்கு மாற்றாக ஆண்டி-டெட்டானஸ்-ஸீரம் என்ற மருந்தை இஞ்செக்ஷன் செய்தார்.

உள்ளூர் டாக்டரின் சிகிச்சை நடப்பது போதாதென்று உடனே குடும்ப டாக்டருடன் வரச் சொல்லி விநயனுக்கு ஓர் அவசர தந்தியும் அனுப்பினார்கள். ஆனால், விநயனோ குடும்ப டாக்டரை அழைத்து வரவில்லை. தன் நண்பனும் கல்கத்தாவை சேர்ந்தவனுமான தாராநாத் சட்டர்ஜி என்பவனையே அழைத்து வந்தான். ஆண்டி-ஸீரம் ஊசியை நிறுத்திவிட்டு, மார்ஃபியா (மரத்து போக செய்யும் மருந்து) இஞ்செக்ஷன் கொடுக்கும்படி உள்ளூர் டாக்டருக்கு தாராநாத் யோசனை சொன்னான். டெட்டானஸ் நோயை மார்ஃபியா இஞ்செக்ஷன் அதிகரிக்கச் செய்யுமே தவிர குறைக்காது. எனவே, டாக்டர் தாராநாத்தின் மீது உள்ளூர் டாக்டர் ஐயமுற்றார். சகோதரர் இருவருக்குமிடையே உண்டாகியிருந்த மனக்கிலேசத்தை பற்றி ஏற்கனவே அவருக்கு ஓரளவு தெரியும். எனவே, தாராநாத்தை தமக்கு உதவியாளனாக வைத்துக் கொள்ள உள்ளூர் டாக்டர் கண்டிப்பாய் மறுத்துவிட்டார். விநயனிடமும் தாராநாத்திடமும் தன் வெறுப்பை ராணி சூர்யவதியும் வெளிப்படையாக காட்டினாள். இந்த காரணங்களால் எரிச்சல் அடைந்த விநயனும், தாராநாத்தும் உடனே தேவகரை விட்டு வெளியேறினார்கள்.

இரண்டே நாளைக்கு பிறகு விநயன் மறுபடி வந்தான். கல்கத்தாவை சேர்ந்த பிரபல டாக்டரான துர்க்காரதன் தர்

என்பவர் இப்போது அவனுடன் வந்தார். டாக்டர் தர் தம்மிடம் உள்ள ஆண்டி ஸீரம் இஞ்செக்ஷனை தாமே அமரனுக்கு கொடுப்பதாக டாக்டர் முகர்ஜியிடம் கூறி சம்மதம் பெற்றார். ஆனால் தம்மிடம் உள்ள மருந்தை டாக்டர் முகர்ஜியிடம் அவர் ஏனோ காட்டவேயில்லை. இஞ்செக்ஷனை டாக்டர் தர் கொடுத்த பின்பு அமரனின் உடல் நிலை மேலும் கடுமையாகிவிட்டது. அன்றிரவே சிறிதும் கவலையில்லாமல் விநயனும் டாக்டரும் கல்கத்தாவுக்கு பயணமாகிவிட்டார்கள்.

ஒரு வாரத்துக்கு பின்பு விநயன் நான்காவது முறையாக மீண்டும் தேவகரை அடைந்தான். இந்த முறை சிவபாத பட்டாசார்ஜியை தன்னுடன் அழைத்து வந்தான். கல்கத்தாவிலுள்ள ஸ்கூல் அவ் ட்ராப்பிகல் மெடிஸின் என்ற மருத்துவ நிலையத்தில் அவர் ஒரு புரொபஸர். தவிரவும் சிறந்த வைத்திய நிபுணர். அமரனை டாக்டர் பட்டாசார்ஜி நன்றாக பரிசோதித்து மருந்து எழுதி தந்தார். ஆனால், விநயனின் மீது ஏற்கனவே ஐயங்கொண்டவர்கள் ராணி சூர்யவதியும் பிற உறவினர்களும். எனவே, அவனுடன் வரும் எந்த டாக்டரின் மருந்துகளையும் ஏற்றுக் கொள்ள அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

டாக்டர் தர் இஞ்செக்ஷன் செய்திருந்த இடத்தில் சில நாளைக்கெல்லாம் சீழ் பிடித்து அமரன் மிகவும் உபாதைக்கு உள்ளானான். அவனைக் கல்கத்தாவுக்கு எடுத்து சென்றார்கள். அங்கே பிரபல டாக்டர் ஒருவரிடம் இரண்டு முறை ஆபரேஷன் நடந்தது. அமரன் ஆறு மாத காலம் படுத்த படுக்கையாக இருந்தான். பிழைத்து எழுந்த போது அவனுடைய இதயத்தின் ஒரு பாகம் நிரந்தரமாய் சேதமாகியிருந்ததால், மேற்கொண்டு அவன் தனது படிப்பை தொடர முடியவில்லை.

குடும்பத்துக்கு சொந்தமான 13,000 ரூபாய் ரொக்கத்தை அலஹாபாத் பாங்கியிலிருந்தும் வேறு சில பாங்கிகளிலிருந்தும்

*1932 நவம்பரில் விநயன் எடுக்க முயன்றான். ஆனால் சகோதரர் இருவர் பெயரிலும் பணம் இருந்ததால், பாங்கியின் ஷரத்துப்படி ஒருவருடைய அனுமதியில்லாமல் மற்றவர் அதை எடுப்பது இயலாத காரியமாயிற்று. ஏமாற்றமடைந்த விநயன், 1933 ஜூனில் எப்படியோ தந்திரமாக அமரனிடமிருந்து ஒரு கூட்டு அத்தாட்சியை பெற்றுவிட்டான். இந்த கூட்டு அத்தாட்சி* (Joint Certificate) *மூலமாக விநயனும் அமரனும் சேர்ந்தோ தனியாகவோ பாங்கியிலிருந்து பணத்தை எடுத்துக் கொள்ள முடியும். இதை பயன்படுத்திக் கொண்டு முதல் வேலையாக பாங்கியிலிருந்த 13,000 ரூபாயையும் உடனே விநயன் கைப்பற்றிவிட்டான்.*

*பல மாதங்கள் கழிந்த பின்பே அமரனுக்கு இந்த விவரம் தெரிய வந்தது. பல பிரபல வழக்கறிஞர்களை சந்தித்து குடும்ப சொத்தில் தன் பாகத்தை பிரித்துக் கொள்ள தீவிரமாக அவன் முயன்றான். 1932 அக்டோபரில் ஓர் உடன்பாட்டின் மூலம் பகூர் கோர்ட்டில் 17,000 ரூபாய் அந்த எஸ்டேட்டின் பணத்தை செலுத்தினார்கள். இந்த தொகையை திரும்ப பெற விநயன் படாத பாடுபடுவதை அறிந்த அமரன், ஓர் ஆட்சேப மனுவை சமர்ப்பித்தான். அமரனின் மரணத்துக்கு பிறகுதான் அந்த தொகையை விநயன் பெறுவது இயலும் என்று உத்தரவாயிற்று. விநயன் அடைந்த ஏமாற்றத்துக்கு எல்லையே இல்லை.*

*இந்த சம்பவங்கள் நிகழ்ந்த போது, கல்கத்தாவில் அமரன் தங்கியிருந்தான். அவனுடன் அத்தை ராணி சூர்யவதி, தமக்கை வனபாலா, மருமாள் அமீனா, உறவினளான ஜ்யோதிர்மயி இந்த நான்கு பெண்மணிகளும் தங்கியிருந்தார்கள். வழக்கம் போல் கல்கத்தாவிலேயே தன் ஆசைநாயகி பாலிகாபாலாவுடன் விநயனும் வேறோர் இடத்தில் தங்கியிருந்தான். குடும்ப சொத்தின் பாக பிரிவினையை பற்றி அமரன் தன்*

உறவினர்களோடும் நண்பர்களோடும் விவாதித்து வருவதை விநயன் விவரமாக ஆட்கள் மூலம் அறிந்து வந்தான்.

ஒரு நாள் மாலை ஜ்யோதிர்மயி உள்பட சில உறவினர்களுடன் ஒரு நாடகத்தை காண பூர்ணா தியேட்டருக்கு அமரன் சென்றான். கதருடை தரித்த கட்டை குட்டையான கறுப்பு மனிதன் ஒருவனுடன் விநயன் அப்போது அந்த தியேட்டரின் வாயிலில் உலாவுவதை அமரனும் அவனுடைய உறவினர்களும் தற்செயலாக பார்த்தார்கள். அமரனை ஆள்காட்டி விரலால் விநயன் சுட்டிக் காட்டி தன் கூட்டாளியிடம் ஏதோ கூறியதையும் அமரனின் தமக்கை வனபாலா கவனித்தாள். ஆனால் இதைப்பற்றி அவர்கள் அப்போதே பொருட்படுத்தாமல் இருந்துவிட்டது தான் துர்ப்பாக்கியமாய் முடிந்தது. இந்த கட்டை குட்டையான கறுப்பு மனிதன்தான் பின்னால் அமரனின் கொலையில் முக்கிய பங்கு கொண்டு இன்று வரைக்கும் போலீஸாரின் கண்களில் மண்ணை தூவி தலைமறைவாக இருந்து வருபவன்.

அத்தையுடனும் பிற உறவினர்களுடனும் நவம்பர் 26-இல் கல்கத்தாவை விட்டு பகூருக்கு செல்ல அமரன் தீர்மானித்தான். வழக்கத்துக்கு மாறாக தம்பியை ரெயில்வே ஸ்டேஷனில் சந்திக்க தான் வருவதாக விநயன் தெரிவித்தான். இது அவர்களுக்கு வியப்பை அளித்தது. ஏனென்றால், உள்ளூரிலேயே இருந்த விநயன் அன்று வரையில் ஒரு முறைகூட அமரனின் ஜாகைக்கு வந்ததில்லை. அமரனும் மற்றவர்களும் ஹௌரா ஸ்டேஷனில் டாக்ஸியிலிருந்து இறங்கும் போது, எதிர்ப்புறத்தில் மற்றொரு டாக்ஸியிலிருந்து விநயன் இறங்குவதையும் யாருக்கோ அமரனை சுட்டிக் காட்டி அவன் ஏதோ சைகை செய்வதையும் தற்செயலாக அமரனின் சகோதரி வனபாலா கண்டாள்.

புக்கிங் ஆபீஸ் வழியாக அமரன் முன்னே செல்ல பெண்மணிகள் பின்னே தொடர்ந்தார்கள். கடைசியில் விநயன் வந்து கொண்டிருந்தான். எதிர்பாராதவிதமாக அப்போது பிளாட்ஃபாரத்துக்கு அருகில் அந்த கதருடை தரித்த கட்டை குட்டையான கறுப்பு மனிதன் நெருங்கி வந்து அமரனின் வலது புஜத்தில் பலமாக மோதிவிட்டு மறைந்தான். அவனைப் பார்த்தால் காலித்தனமுள்ளவனைப் போல் தோன்றியதாக அமரன் குறிப்பிட்டான். அவன் மோதிச் சென்ற உடனேயே வலது புஜத்தில் அமரனுக்கு நூதனமான ஒரு வலி உண்டாயிற்று. அதை தாளாமல் அவன் ஐயோ! என்னை யாரோ ஊசியால் குத்திவிட்டார்களே! என்று அலறினான். உடனே விநயன் நெருங்கி வந்து அமரனின் புஜத்தை தடவிக் கொடுத்து உப்புப் பெறாத சிறிய விஷயத்தை ஒன்றும் பெரிதாக்கி ஆர்ப்பாட்டம் செய்யாதே! என்று கண்டித்து மேலே நடக்க சொன்னான்.

ஆனால் அமரன் தன் ஷர்ட்டை விலக்கிப் புஜத்தை எல்லோருக்கும் காட்டினான். அதை மிகவும் கூர்மையான ஊசி துளைத்திருந்தது. அந்த இடத்திலிருந்து ஏதோ ஒரு திரவம் வழிந்து அவனுடைய ஷர்ட்டையும் ஓரளவு நனைத்திருந்தது. தவிர, இஞ்செக்ஷன் குத்தியதும் உண்டாவது போன்ற சிவந்த வடு ஒன்றையும் அமரனின் புஜத்தில் உறவினர்கள் கண்டார்கள். அனைவருக்கும் விநயன் மீது சந்தேகம் ஏற்பட்டது. பயணத்தை ஒத்திப் போட்டு ஒரு வைத்திய நிபுணரிடம் உடனே சென்று பரிசோதனை செய்து கொள் என்று அமரனை உறவினர்கள் வற்புறுத்தினார்கள். ஆனால் விநயனோ அவர்களை கண்டபடி திட்டினான். அமரனை நீ ஒரு பயங்கொள்ளி. ஒரு சின்ன விஷயத்தை பெரிதுபடுத்துகிறாயே! உலகில் எப்படித்தான் வாழப் போகிறாயோ? என்று இடித்துரைத்தான். விநயனின் கேலிப் பேச்சால் வெட்கமடைந்த அமரனுக்கு ஒரு வீம்பு

உண்டாயிற்று. உறவினர்கள் என்ன கூறியும் கேளாமல் பயணத்தை தொடர்ந்தான். திருப்தி அடைந்த விநயன் தன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ள ஆசைநாயகி பாலிகாபாலாவிடம் விரைந்தான்.

ரெயிலில் பிரயாணம் செய்யும் போதே அமரனுக்கு ஜுரம் கண்டு விஷம் போல் விறுவிறு என்று ஏறியது. உறவினர்கள் பயந்தார்கள். தேவகரில் நடந்ததை அமரனுக்கு நினைப்பூட்டி, இந்த ஜீரம் சாமானியமானதல்ல. விநயன்தான் ஏதோ விஷமம் செய்திருக்கிறான். காரியம் மிஞ்சிவிடுமுன் கல்கத்தாவுக்கே சென்று வைத்தியம் செய்து கொள்வது நல்லது என்று அவனை வற்புறுத்தினார்கள். உண்மைதான் என்று அமரன் ஒப்புக் கொண்டான். வண்டி பகூரை எட்டியதுமே மறு ரெயிலில் புறப்பட்டு நவம்பர் 20-ஆம் தேதியே கல்கத்தாவுக்கு திரும்பினான். கல்கத்தாவில் அமரனை டாக்டர் நளினிரஞ்சன் ஸேன் குப்தா என்பவர் பரீட்சித்தார். அவனது புஜத்தில் தென்பட்ட அடையாளம் இஞ்செக்ஷன் ஊசியால் ஏற்பட்டதே என்று ஐயத்துக்கு இடமில்லாமல் திட்டவட்டமாக அவர் கூறினார். அவரது யோசனைக்கு இணங்க அமரனின் ரத்தத்தை டாக்டர் சந்தோஷ்குமார் குப்தா என்பவர் பரிசோதனைக்கு எடுத்துக் கொண்டார். ஆனால் ரத்த பரிசோதனை நடைபெறு முன்பே, பல பிரபல டாக்டர்கள் எவ்வளவோ கண்காணித்தும், துர்ப்பாக்கிய பிறவியான அமரேந்திரன் டிசம்பர் 4-ஆம் தேதி மாலை நான்கு மணிக்கு இந்த மண்ணுலக வாழ்வை நீத்துவிட்டான்.

பரிசோதனைக்கு அமரனின் உடலிலிருந்து ரத்தம் எடுத்திருந்தார்கள் என்பது விநயனுக்கு தெரியாது.

தன்னுடன் டாக்டர் சிவபாத பட்டாசார்ஜியை அழைத்து கொண்டு அவன் வந்து சேர்ந்தான். அமரனின்

உயிரற்ற உடலை பலர் முன்னிலையில் பரிசோதித்த சிவபாத பட்டாசார்ஜி, நிமோனியா ஜுரத்தால் அமரன் இறந்தான் என்று அத்தாட்சி எழுதிக் கொடுத்தார். உடனே சற்றும் தாமதியாமல் விநயன் ஓரளவு ஆடம்பரத்துடனேயே அமரனின் இறுதி சடங்குகளை செய்து முடித்தான். முறைப்படி பிரேத பரிசோதனை செய்துவிடுவார்களோ என்று அஞ்சித்தான் இவ்வளவு அவசரப்பட்டிருக்கிறான்.

ஆனால் அமரனின் மரணம் ராணி சூர்யவதிக்கும் மற்ற உறவினர்களுக்கும் பலத்த ஐயத்தை எழுப்பிவிட்டது. அமரன் மரித்துவிட்டாலும் அமரனின் ரத்தத்தைப் பரிசோதனை செய்யும்படி டாக்டர் சந்தோஷ் குப்தாவை அவர்கள் வற்புறுத்தினார்கள். அவரும் அதற்கு இசைந்தார். அந்த பரிசோதனையில் ஒரு மாபெரும் உண்மை புலப்பட்டது. ஒரு பயங்கர கொலைக்கு ஆதாரம் கிடைத்தது. உயிருள்ள பிளேக் கிருமிகளை அமரனின் ரத்தத்தில் கண்டு டாக்டர் குப்தா திகைத்துவிட்டார். அமரன் மரித்தது பிளேக் நோயினால். நிமோனியா ஜுரத்தால் அல்ல.

இதைக் கேட்டதும் அமரனின் உறவினர்கள் வெகுண்டார்கள். அமரனின் மரணத்துக்கு விநயனே காரணம் என்று மனப்பூர்வமாக அவர்கள் நம்பினார்கள். எனவே, போலீஸாரைக் கொண்டு புலன் விசாரணை நடத்த விரும்பினார்கள். அமரனின் புஜத்தில் ஊசியை ஒரு குண்டன் குத்தியபோது அவனுடன் ஹௌரா ஸ்டேஷனில் இருந்த உறவினர்களில் ஒருவரான கமலா பிரஸாத் என்பவர், சகல விவரங்களையும் ஒரு புகார் மனுவில் விரிவாக எழுதினார். அமரனின் மரணத்தைப் பற்றி போலீஸ் விசாரணை தேவை என்று கோரி கல்கத்தா போலீஸ் கமிஷனருக்கு அதை அனுப்பினார்.

போலீஸ் இலாகாவையே இந்த மனு உலுக்கி விட்டது. இறந்த அமரன் எப்படி பிளேக் நோய்க்கு இரையாகியிருக்க முடியும் என்பதை பற்றி அங்கே பலத்த விவாதம் உண்டாயிற்று. ஏனென்றால், நவம்பர் மாதத்தில் சாதாரணமாக பிளேக் நோய் எவருக்கும் வருவதில்லை. மேலும், பிளேக் நோய் பற்றக் கூடிய அசுத்தமான இடத்தில் அமரன் வாழவுமில்லை. வீட்டிலிருந்து ஹௌரா ஸ்டேஷனுக்கு அமரன் சென்ற மார்க்கத்தில் அவனை பிளேக் நோய் பற்றியிருக்கலாமோ என்றால், அவனுடன் இருந்த மற்ற உறவினர்களையும் அது கட்டாயம் பற்றியிருக்குமே. அப்படியும் நேரவில்லை. எனவே, எப்படி அமரனை பிளேக் நோய் பற்றியிருக்க முடியும்?- இப்படியெல்லாம் யோசித்த போது, அனைவரும் ஒரே முடிவுக்குத்தான் வர இயன்றது - இஞ்செக்ஷன் ஊசி மூலந்தான் அமரனின் உடலில் பலவந்தமாக பிளேக் கிருமிகள் செலுத்தப் பெற்றிருக்க வேண்டும்.

இப்போது மற்றோர் ஐயம் எழலாயிற்று. ஊசி மூலம் பிளேக் கிருமிகளை செலுத்தியவனுக்கு, அவை கிடைத்தது எப்படி? அந்த நாளில் போலீஸ் கமிஷனராக இருந்த ஸர் சார்லஸ் டெகார்ட் என்னும் ஆங்கிலேயர் தாமே இதில் அக்கறை எடுத்துக் கொண்டார். பிரபல துப்பறியும் நிபுணர்கள் பலரை தாமே நேரில் கண்டார். எப்பாடுபட்டாவது அமரனின் அசம்பாவித மரணத்தை பற்றிய மர்மத்தை துப்பு துலக்கியே தீர வேண்டும் என்று அவர்களை மன்றாடிக் கேட்டுக் கொண்டார். புலன் விசாரணை நடந்தது. கதருடை தரித்த கட்டை குட்டையான கறுப்பு மனிதன்தான் ஹௌரா ஸ்டேஷனில் அமரன் மீது மோதிக் கொண்ட பாவனையில் பிளேக் கிருமிகளை இஞ்செக்ஷன் ஊசி மூலம் அமரனின் புஜத்தில் செலுத்தியிருக்க வேண்டும் என்று அந்த நிபுணர்கள் ஊகித்தார்கள்.

இந்தியாவிலேயே பிளேக் கிருமிகள் ஒரே ஓர் இடத்தில்- பம்பாய் ஹாஃப்கின் இன்ஸ்டிட்யூட் என்ற நிலையத்தில் - சேகரமாகின்றன. அங்கேயிருந்து கல்கத்தா ட்ராப்பிக்கல் மெடிஷின் ஸ்கூல் என்ற வைத்திய கலாசாலைக்கும், பம்பாயிலேயே ஆர்தர் ரோடிலுள்ள தொற்று நோய் ஆஸ்பத்திரிக்கும், மிகக் குறைந்த அளவில் சில பிரத்தியேக வைத்திய நிபுணர்களுக்கும் மட்டுமே, ஆராய்ச்சிக்காக இந்த விஷக் கிருமிகளை அனுப்புகிறார்கள். இதற்கும், அவ்வப்போது கணக்கு காட்டுகிறார்கள். ஆகவே, இவ்வளவு கடுமையான பாதுகாப்பையும் மீறி எப்படி அந்நிய மனிதன் ஒருவனால் இந்தக் கிருமிகளைப் பெற முடிந்தது? பம்பாய் ஹாஃப்கின் நிலையத்தில் நிபுணர்கள் துப்பு விசாரித்தார்கள். மிகவும் கஷ்டப்பட்டு முயன்றதில் இறுதியில் வெற்றி கிட்டியது.

அமரனின் சொத்து பாதுகாப்பு பவர்-அவ்-அட்டர்னியை பற்றிக் கேள்விப்பட்டு 1932-ஆம் ஆண்டு மே 12-ஆம் தேதி விநயன் வெகுண்டானில்லையா? அதே தினம் அவனுடைய நெருங்கிய நண்பனான டாக்டர் தாராநாத் தன் ஆராய்ச்சிக்கு வேண்டும் என்று சொல்லி பம்பாய் ஹாஃப்கின் நிலையத்தின் அதிகாரிகளை உடனே பிளேக் கிருமிகள் அனுப்ப ஓர் அவசர தந்தி மூலம் கேட்டுக் கொண்டான்.

தன் பெயருடன் தாராநாத் டி.டி.எம். (D.T.M.) என்ற எழுத்துக்களை சேர்த்திருந்தான். கிருமி ஆராய்ச்சி செய்பவன் என்பதைக் குறிக்கும் ட்ராப்பிகல் மெடிஷினில் டிப்ளமா பெற்றதாக காட்டும் அடையாளம் இது. (ஆனால் பின்னால் நடந்த வழக்கில் இது வெறும் பொய்யே, என்றும், தாராநாத் கிருமி ஆராய்ச்சியாளனுமல்ல. சாதாரண நோய் தீர்க்கும் டாக்டருமல்ல. மிகக் குறைந்த வருவாயில் தவித்துக் கொண்டிருந்த ஒரு பல் வைத்தியனே என்றும் தெரிய வந்தது).

டி.டி.எம். என்ற எழுத்துக்களை தாராநாத் சேர்த்துக் கொண்டிருந்தாலும், பம்பாய் ஹாஃப்கின் நிலையத்தின் அதிகாரிகள், கொடிய பிளேக் கிருமிகளை வங்காளத்தின் ஸர்ஜன் ஜெனரலிடமிருந்து எழுத்து மூலம் அனுமதி கிடைக்காமல் கொடுப்பதற்கில்லை என்று திட்டமாக பதில் அளித்துவிட்டார்கள்.

ஏமாற்றம் அடைந்த தாராநாத், அதன் பின்பு கல்கத்தா பிரபல கிருமி ஆராய்ச்சி நிபுணரான டாக்டர் உகில் என்பவரிடம் சென்றான். நான் பிளேக் நோய்க்கு ஒரு மருந்தைக் கண்டுபிடித்திருக்கிறேன். அதைப் பரீட்சை செய்து பார்க்க விரும்புகிறேன். எனவே, உங்கள் லாபரேட்டரியில் என் பரிசோதனையை செய்ய எனக்கு அனுமதி அளியுங்கள் என்று வேண்டினான். டாக்டர் உகில் அதற்கு இணங்கினார். ஆயினும், என் கண் முன்னால்தான் பரிசோதனையை செய்ய வேண்டும் என்று ஒரு ஷரத்தை விதித்தார். பம்பாய் ஹாஃப்கின் நிலையத்திலிருந்து பிளேக் கிருமிகளை தமது பெயரில் டாக்டர் உகில் தருவித்தார். ஆனால், தாராநாத்திடம் அவற்றைக் கொடுக்க மறுத்துவிட்டு தாமே அவன் கூறியபடி பரிசோதனையை தம் கையாலேயே செய்யலானார். தாராநாத் இதை எதிர்பார்க்கவில்லை.

மருந்து கண்டுபிடித்திருப்பதாக தாராநாத் கூறியது வெறும் பொய்யே என்று டாக்டர் உகில் அறிந்து கொண்டார்.

ஆனால் தாராநாத் மறு முயற்சி செய்ய வேண்டும் என்று கூறினான். பலமுறை நச்சரித்து கடைசியில் பம்பாய் ஹாஃப்கின் நிலைய அதிகாரிகளுக்கு ஒரு சிபார்சு கடிதம் தர வேண்டினான். இவன் ஒரு கிருமி ஆராய்ச்சி நிபுணன். பிளேக் நோய்க்கு இவன் ஒரு மருந்து கண்டுபிடித்திருப்பதாக நம்புகிறேன். ஆகவே, தன்

சோதனைகளை இவன் நடத்த இவனை உங்கள் நிலையத்தில் அனுமதிக்க வேண்டும் என்று உகில் எழுதித் தந்தார்.

டாக்டர் உகிலின் இந்த சிபார்சு கடிதத்தை தாராநாத் தானே பம்பாய்க்கு எடுத்துச் செல்லாமல் விநயனிடம் கொடுத்துவிட்டான். விநயன் இந்தக் கடிதத்துடன் 1933 ஏப்ரலில் பம்பாய்க்கு வந்து கிராஃபோர்டு மார்க்கெட் அருகில் உள்ள ஓரியண்ட் ஓட்டலில் தங்கினான். அங்கே வந்த அடுத்த தினமே முதல் வேலையாக ஹாஃப்கின் நிலையம் சென்று, டாக்டர்.பி.வி.பி.நாயுடு அவர்களை சந்தித்தான். தன்னை தாராநாத்தின் நண்பன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டான். அதற்கு டாக்டர் நாயுடு பிளேக் கிருமிகள் மிகவும் தீமையானவை. ஹாஃப்கின் நிலைய டைரக்டர்களின் அனுமதி இல்லாமல் என்னால் ஏதும் செய்வதற்கில்லை என்று கூறிவிட்டார். விரைவிலேயே விநயன் கல்கத்தாவுக்கு பயணமானான்.

இரண்டு மாதங்கள் சென்றன. ஜூலை மாதம் முதல் தேதி விநயன் மீண்டும் பம்பாய்க்கு வந்து இந்த தடவை ஸீ-வ்யூ ஓட்டலில் தங்கினான். ஹாஃப்கின் நிலையத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மிருக வைத்தியர்களிடமிருந்து எப்பாடுபட்டாவது கொஞ்சம் பிளேக் கிருமிகளை பெற்றுவிட முயன்றான். அவர்களுள் டாக்டர்.நாகராஜன், டாக்டர் ஸாத்தே இருவருக்கும் பெருந்தொகையை லஞ்சமாய் கொடுக்க விநயன் சித்தமாயிருந்தும், கொடிய ஆட்கொல்லியான விஷக் கிருமிகளை அவனுக்கு அவர்கள் கொடுக்க மறுத்துவிட்டார்கள்.

பின்பு ஆர்தர் ரோடு தொற்று நோய் ஆஸ்பத்திரிக்கு விநயன் சென்றான். அதன் மேலதிகாரியான டாக்டர் பட்டேலைப் பேட்டி கண்டான். பெரிய மனித தோரணையில் நடந்து கொண்ட விநயனை டாக்டர் பட்டேல் நம்பிவிட்டார்.

அவனுடைய நண்பனான டாக்டர் தாராநாத்துக்கு கட்டாயம் உதவுவதாக வாக்களித்தார். விநயனைத் தம் உதவியாளரான டாக்டர் மேத்தாவுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அவனுடைய நண்பனான டாக்டர் தாராநாத் வந்ததும், பிளேக் நோயைப் பற்றிய பரிசோதனைகளை நடத்திக் கொள்ள அவனுக்கு வசதிகள் செய்து தரும்படி உதவியாளரிடம் கூறினார்.

டாக்டர் தாராநாத் வந்ததுமே தாமதியாமல் உடனே தன் ஆராய்ச்சிகளை நடத்த சௌகரியமாக இருக்கும் பொருட்டு, ஒரு குழாய் பிளேக் கிருமிகளை என்னிடம் இப்போதே கொடுங்கள் என்று டாக்டர் பட்டேலை விநயன் வற்புறுத்தினான். தனியாக ஒரு குழாய் கிருமிகளை லாபரேட்டரியில் இதற்காக டாக்டர் பட்டேல் ஒதுக்கி வைத்தார். ஆனால், தாராநாத் வந்ததும் ஆராய்ச்சிக்கு தருவதாக கூறினார்.

தாராநாத் ஜூலை 7-ஆம் தேதி பம்பாய்க்கு வந்தான். தன் சோதனைக்கு எல்லாம் தயாராகவே இருக்கக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான். விநயனுடன் அதே ஓட்டலில் தங்கினான். ஆர்தர் ரோடு ஆஸ்பத்திரியில் அவனை டாக்டர் பட்டேல் அன்புடன் வரவேற்று டாக்டர் மேத்தாவுக்கு அறிமுகப்படுத்தினார். அவன் அங்கே சோதனை நடத் தேவையான கருவிகளும் பிளேக் கிருமிகள் அடைபட்டிருந்த குழாயும் சித்தமாயிருந்தன.

தாராநாத்தும் விநயனும் கிராஃபோர்டு மார்க்கெட்டிலிருந்து எலிகளை விலைக்கு வாங்கி வந்தார்கள். அவற்றின் மீது தாராநாத் தன் சோதனைகளை நடத்தி வந்தான். அவை ஒன்றன் பின் ஒன்றாக பிளேக் நோய்க்கு இரையாகி மாண்டு வந்தன. ஜூலை 12-ஆம் தேதி ஓர் எலியின் மீது அரைகுறையாக சோதனை நடந்து கொண்டிருந்த போதே,

டாக்டர் மேத்தாவிடம் தாராநாத் சென்றான். தன்னை உடனே கல்கத்தாவுக்கு வரச் சொல்லி வீட்டிலிருந்து தந்தி வந்திருப்பதாகவும், தான் போயே தீர வேண்டும் என்றும், பின்னால் திரும்பி வந்து தன் சோதனைகளை தொடர்ந்து நடத்துவதாகவும் கூறி விடைபெற்றுச் சென்றான். ஆனால் டாக்டர் பட்டேலைக் கண்டு அவன் விடைபெறவில்லை. பின்னால் பம்பாய்க்கு வரவும் இல்லை. இவ்வளவு தூரம் தனக்கு உதவி அளித்த டாக்டர் பட்டேல், டாக்டர் மேத்தா இருவருக்கும் நன்றி செலுத்தி ஒரு கடிதங் கூட எழுதவில்லை. தாராநாத்தும் விநயனும் அன்றிரவே பம்பாயை விட்டுச் சென்றார்கள். அப்போது தங்களுடன் கொஞ்சம் பிளேக் கிருமிகளையும் எடுத்துச் சென்றிருக்கிறார்கள்.

பம்பாயில் புலன் விசாரணை நடத்திய போது, போலீஸாருக்கு வேறொரு முக்கியமான தகவலும் கிடைத்தது. பம்பாயில் 1933 ஜூலையில் தங்கியிருந்த போது, விநயன் பம்பாய் ம்யூச்சுவல் லைஃப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனில் அமரனின் ஆயுளை 51,000 ரூபாய்க்கு இன்ஷ்யூர் செய்ய முயன்றான். ஆனால் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் அவன், அமரன் துர்ப்பாக்கிய வசமாக எக்காரணங் கொண்டோ இறந்துவிட்டான். அவனது மரணத்தை பற்றி விசாரணை ஏதும் செய்யக் கூடாது என்று ஒரு நிபந்தனை போட்டான். இதைக் கேட்டு அவர்களுக்கு ஐயம் உண்டாகவே, இன்ஷ்யூர் செய்ய அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

இந்த விவரங்கள் அனைத்தும் போலீஸூக்குத் தெரிந்துவிட்டன என்று அறிந்த விநயன் தப்பி தலைமறைவாக ஓடிவிட முயன்றான். அவனை பின்பற்றி 1934 பிப்ரவரி 16-ஆம் தேதி அஸன்ஸால் ஜங்ஷனில் கைது செய்தார்கள். இரண்டு தினங்கள் சென்றதும் தாராநாத்தும் கைதானான். இவர்களுடன்

டாக்டர் சிவபாத பட்டாசார்ஜியும், டாக்டர் துர்க்காரதன் தருங் கூட கைதானார்கள். அமரனை திட்டமிட்டுக் கொலை செய்ததாக இந்த நாலு பேர் மீதும் குற்றம் சாட்டி அலிப்பூர் செஷன்ஸ் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்தார்கள்.

இந்த வழக்கில் பிராஸிக்யூஷன் தரப்பில் டாக்டர் உகில், டாக்டர் நாயுடு, டாக்டர் பட்டேல், டாக்டர் மேத்தா ஆகியவர்கள் கூறிய சாட்சியங்கள் வலுவாயிருந்தன. விநயன், தாராநாத் இந்த இருவரின் வாதங்களையும் நிர்மூலமாக்க அந்த சாட்சியங்கள் பெரிதும் உதவின. ஆயினும், அமரனின் தமக்கையான வனபாலா, அமரனைக் கடைசியாக பரிசோதித்த டாக்டர் நளினிரஞ்சன் ஸேன்குப்தா, அமரனின் ரத்தத்தைப் பரிசோதித்த டாக்டர் சந்தோஷ்குமார் குப்தா இந்த மூவருந்தான் மிக முக்கியமான சாட்சிகள்.

பூர்ணா தியேட்டரில் கதருடை தரித்த கட்டை குட்டையான கறுப்பு மனிதன் ஒருவனுடன் விநயனை நான் கண்டேன். பின்னால் ஹௌரா ஸ்டேஷனில் அமரன் மீது அதே மனிதன் பலவந்தமாக வந்து மோதிக் கொண்டான். அமரன் அலறினான் என்றெல்லாம் வனபாலா விவரமாக கூறினாள். திறமை வாய்ந்த வழக்கறிஞர்களின் குறுக்கு விசாரணை எதுவும் அவளை அசைக்கவே முடியவில்லை.

டாக்டர் நளினிரஞ்சன் ஸேன்குப்தாவோ, அமரனின் புஜத்தில் நான் கண்டது இஞ்செக்ஷன் ஊசியால் ஏற்பட்ட புண்தான். எதிர்தரப்பாளர் கூறுவது போல் பூச்சிக்கடி அல்ல என்று திட்டமாய் கூறினார். டாக்டர் சந்தோஷ்குமார் குப்தாவும், நான் பரிசோதித்தது ஐயந்திரிபற அமரேந்திரனின் ரத்தமேதான். எதிரிகள் கூறுவது போல் ஒன்றும் பிழையினால் ரத்தம் மாறிவிடவில்லை என்று அடித்து கூறினார். இந்த மூவரையும் எந்தவிதமான குறுக்கு விசாரணைகளும் வெல்லவே

முடியவில்லை. ஆனால் நான்கு எதிரிகளும் தாங்கள் குற்றவாளிகள் அல்ல என்றே வாதாடினார்கள். டாக்டர் தரும், டாக்டர் சிவபாத பட்டாசார்ஜியும், நாங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை. விநயன் மீது அமரனின் உறவினர்கள் கொண்டிருந்த துவேஷத்தால், எங்களை குற்றம் சாட்டுகிறார்கள். அவனுடைய அழைப்பின் பேரில் நாங்கள் வந்தது பற்றியே எங்களை அமரனின் கொலையில் சம்பந்தப்பட்டவர்கள் என்று தவறாக கருதுகிறார்கள் என்று வாதித்தார்கள்.

டாக்டர் தாராநாத் செய்த வாதம் இது : அமரனின் மரணத்தால் எனக்கு ஏதும் பயன் இல்லை. நான் உண்மையிலேயே பிளேக் நோய்க்கு ஒரு மருந்து கண்டுபிடித்துவிட்டதாக நம்பினேன். விநயன் என் நண்பன். எனவே, அவன் பம்பாய் சென்றபோது எனக்கு உதவி செய்ய கேட்டுக் கொண்டேன். நான் ஒருபோதும் பிளேக் கிருமிகளை கள்வாடவோ, விற்கவோ முயலவில்லை. இப்படி அவன் சொன்னாலும், 1932 ஜூலை முதல் 1934 ஜனவரி வரையில் விநயனிடமிருந்து தாராநாத் பல தொகைகளை செக்குகள் (Cheques) மூலம் பெற்றுக் கொண்டதற்கு திருப்திகரமான பதில் ஏதும் அவனால் சொல்ல முடியவில்லை.

எல்லாவற்றையும் விட விநயனின் வாக்குமூலந்தான் மிகவும் வேடிக்கையாக இருந்தது. முழு பூசணிக்காயை சோற்றில் மறைப்பது போல் விநயன் வாதித்தான். அமரன் பிளேக்கினால் மரிக்கவேயில்லை. பரிசோதனை செய்தது அமரனின் ரத்தமே இல்லை. அவனுடைய புஜத்தில் தென்பட்டது இஞ்செக்ஷன் ஊசியின் அடையாளமே அல்ல. அது பூச்சிக்கடிதான். அமரன் இறக்க இரண்டு மாதங்களுக்கு முன்பு என் சொந்த தங்கையான கானன் பாலா என்பவள்

பொன்னுக்கு வீங்கி என்ற நோயால் இறந்தாள். அமரனே அவளுக்கு சுசுருஷை செய்து வந்தான். ஆகவே பொன்னுக்கு வீங்கி நோய்க்குத்தான் அமரன் இரையாகி இறந்திருக்க வேண்டும். பம்பாய்க்கு ஒரு படத்தொழில் நிமித்தந்தான் நான் சென்று வந்தேன். தாராநாத்துக்கு நண்பன் என்ற முறையிலேயே உதவினேன் என்றெல்லாம் கூறினான்.

ஆனால், பம்பாயில் விநயன் தங்கியிருந்த நாட்களில் ரத்தன் ஸலேரியா என்பவனையே வழிகாட்டியாக அமர்த்திக் கொண்டிருந்தான். ரத்தன் ஸலேரியாவிடம் விநயன் தன் நண்பனின் ஆராய்ச்சிக்கு உதவ்வுவதற்காக பிளேக் கிருமிகளை பெறவே பம்பாய்க்கு வந்ததாக கூறியிருந்தான். ரத்தன் ஸலேரியாவின் சாட்சியம் விநயனை காட்டிக் கொடுக்க உதவியது.

இறுதியில் நீதிபதி தம் தீர்ப்பில் விநயன், தாராநாத் இருவரும் அமரனை பிளேக் கிருமிகள் மூலம் கொலை செய்ததாக குற்றஞ் சாட்டி, இருவருக்கும் தூக்கு தண்டனை விதித்தார். குற்றவாளிகள் என்று ஐயத்துக்கிடமில்லாமல் நிரூபிக்கப் போதுமான ருசுக்கள் இல்லாத காரணத்தால் டாக்டர் சிவபாத பட்டாசார்ஜியும், டாக்டர் துர்க்காரதன் தரும் விடுதலை அடைந்தார்கள்.

தூக்கு தண்டனை பெற்ற விநயனும், தாராநாத்தும் மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொண்டார்கள். ஆனால், இவர்களின் அப்பீலை கேட்ட நீதிபதி லார்ட் வில்லியம்ஸ் இவர்கள் குற்றவாளிகள் என்றே தீர்ப்பளித்தார். என்றாலும், அமரனின் உடலில் பிளேக் கிருமிகளை செலுத்தியது விநயனோ, தாராநாத்தோ அல்ல. மூன்றாவது மனிதனே. எனவே இவர்களுடைய தூக்கு தண்டனையை ரத்து செய்துவிட்டு, இருவருக்கும் ஆயுள் தண்டனை விதித்தார். உண்மை

குற்றவாளிகளான கதருடை தரித்த கட்டை குட்டையான கறுப்பு மனிதனும், தேவகரில் அமரன் நோய்வாய்ப்படக் காரணமாயிருந்த கம்பவுண்டரும் பிடிபட்டால், தூக்கு தண்டனை பெறுவார்கள் என்று தம் தீர்ப்பில் கூறினார்.

ஆனால், பாவம், நீதிபதியின் விருப்பம் ஈடேறவேயில்லை. ஏனென்றால், இன்று வரையில் அந்த கம்பவுண்டரும், கதருடுத்த கட்டை குட்டையான கறுப்பு மனிதனும் பிடிபடவே இல்லை.



# 11. பவால் சந்நியாசி மாயம்

கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் பவால் சந்நியாசி வழக்கின் அப்பீலைக் கேட்ட மூன்று நீதிபதிகளில் ஒருவரான ஜஸ்டிஸ் கோஸ்டெல்லோ தமது தீர்ப்பின்போது இந்த வழக்கு இந்திய நாட்டுக்கு மட்டும் அல்ல, உலகத்துக்கே முற்றும் புதுமையானது என்று குறிப்பிட்டார். இந்த வழக்கில் வாதியான சந்நியாசியின் சார்பில் ப்ரிவு கவுன்சிலில் வழக்காடிய வழக்கறிஞர் டி.என்.ப்ரீட்டோ இந்த மாதிரி அற்புதங்கள் பாரத நாட்டில் மட்டுமே நிகழக் கூடியவை என்று கூறினார். அத்தகைய ஆச்சரியமான வழக்கின் வரலாறு இது.

பவால் ராஜ் என்பது கிழக்கு வங்காளத்தில் பெரும் பணம் படைத்த ஜமீன். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பவால் ஸம்ஸ்தானத்தின் ஜமீன்தாரராக இருந்தவர் ராஜா ராஜேந்திர நாராயண்ராய் சௌதுரி. ராணி விலாசமணி தேவியிடம் இவருக்கு மூன்று பிள்ளைகளும், மூன்று பெண்களும் பிறந்தார்கள். பிள்ளைகளின் பெயர் படோ குமார் (தலைச்சன்), ரணேந்திர நாராயண்ராய் மஜோ குமார் (இடைச்சன்), ராமேந்திர நாராயண்ராய் சோடோ குமார் (கடைச்சன்), ரவீந்திர

நாராயண் ராய். பெண்களின் பெயர்கள் இந்துமயி, ஜ்யோதிர்மயி, தருண்மயி. ராஜா ராஜேந்திர நாராயண் சௌதுரியின் தாய் ராணி ஸத்யபாமா தேவி. ராஜா இறந்த பின் பல வருஷ காலம் ராணி உயிருடன் இருந்து வந்தாள்.

இந்த பணக்கார குடும்பம் டாக்காவிலிருந்து சுமார் இருபது மைல் தூரத்தில் ஜயதேவபுரி என்ற சிறிய ஊரில் பிரம்மாண்டமான மாளிகையில் சகல போகங்களுடனும் வசித்து வந்தது. பங்களாவுக்கு உள்ளேயே நடன கூடங்கள், இசை அரங்குகள், நாடக மேடைகள், யானையுங் குதிரையும், மாடும் கட்ட வசதியான கொட்டில்கள், இவை தவிர ஒரு சிறிய மிருகக் காட்சி சாலை இந்த அனைத்தும் இருந்தன. மாளிகையில் ஒரு டாக்டரும் இந்த குடும்பத்தோடு வசித்து வந்தார். பெரிய வேலைக்கார பட்டாளம் இங்கே எப்போதும் நடமாடிக் கொண்டேயிருக்கும். முதல் மகா யுத்தத்துக்கு முன்பே ஆண்டு ஒன்றுக்கு பத்து லட்சம் ரூபாய்க்கு குறையாமல் இந்த குடும்பத்துக்கு வருமானம் வந்து கொண்டிருந்தது.

பிள்ளைகளுக்கு படிப்பு சொல்லிக் கொடுக்க கொழுத்த ஊதியம் கொடுத்து எத்தனையோ ஆசிரியர்களை பிரத்தியேகமாய் நியமித்தும் மூவரில் எவருக்கும் படிப்பு வாசனை ஏறவில்லை. ஆங்கிலத்திலும் வங்காளியிலும் தங்கள் பெயர்களை கையொப்பமிடுவதை தவிர, உருப்படியாக வேறு ஒன்றும் இவர்களுக்கு தெரியாது.

1904-ஆம் ஆண்டு ராஜா ராஜேந்திர நாராயண்ராய் காலமானார். அப்போது மஜோ குமார் ராமேந்திரனுக்கு வயசு பதினேழு. ஏற்கனவேயே பல துர்ப்பழக்கங்களுக்கு அடிமையாகியிருந்தவன். இப்போது கட்டவிழ்த்த

காளையாகவே மாறிவிட்டான். தான்தோன்றித்தனமாக திரிந்த இந்த வாலிபனுக்கு ஒரு கால்கட்டை கட்டி இவனை வழிக்கு கொண்டு வர பாட்டி ஸத்யபாமா விரும்பினாள். பதின்மூன்றே வயசாகியிருந்த மிகவும் அழகு வாய்ந்த விபாவதிதேவி என்ற ஏழை பெண்ணை 1902-ஆம் ஆண்டு இவனுக்கு மணம் முடித்து வைத்தார்கள். பிறகும் ராமேந்திரன் சீரடையவில்லை. இன்னமும் மதுவையும், மாதையும் தேடித் திரிந்த சிற்றின்ப பிரியனாகவேதான் இருந்தான். அதனால் கொடிய மேக நோய்க்கும் ஆளானான்.

1907-ஆம் ஆண்டில் தாய் ராணி விலாசமணி தேவியும் காலமானாள். ராமேந்திரன், அவனுடைய அண்ணன் தம்பி மூவருமே தனிக்காட்டு ராஜாக்கள் ஆனார்கள்.

1908-ஆம் ஆண்டு ராமேந்திரனின் நோய் கடுமையாகிவிடவே, அவன் தன் சிகிச்சைக்காக கல்கத்தாவுக்கு பயணமானான். கல்கத்தாவில் இருந்த மைத்துனனும் மனைவி விபாவதியின் தமையனுமான ஸத்யேந்திரநாத் பானர்ஜியின் வீட்டிலேயே ராமேந்திரன் தங்கினான். அப்போது சட்டக் கல்லூரியில் ஸத்யேந்திரநாத் படித்துக் கொண்டிருந்தான். வயசு 23. உதவாக்கரை வாலிபன். கல்லூரிக்கு சரிவர போகாமல் திரிந்து கொண்டிருந்தான். உழைக்காமல் எப்படி பொருள் தேடலாம் என்று அந்த நாளிலேயே ஸத்யேந்திரன் எண்ணமிடுவது உண்டாம். ஏராளமான சொத்துக்காரனான ராமேந்திரன் வந்து சேர்ந்தது, ஸத்யேந்திரனின் இந்த யோசனை நிறைவேற பெரிய வாய்ப்பாயிற்று. தன் வீட்டில் தங்கிய ராமேந்திரனுக்கு பணிவிடை செய்து வந்த ஸத்யன், உன் உடம்பு தேற டார்ஜீலிங்குக்கு போவது அவசியம் என்று அவனுக்கு யோசனை

கூறினான். ராமேந்திரன் ஒப்புக் கொள்ளவே, ராமேந்திரனின் காரியதரிசியான முகுந்த குண்டு என்பவனை அழைத்துக் கொண்டு ஸத்யன் முன்னதாய் புறப்பட்டு டார்ஜீலிங் போய் சேர்ந்தான். அங்கே ஸ்டெப் அஸைடு (Step aside) என்ற அழகிய பங்களாவை ராமேந்திரன் தங்குவதற்கு இருவருமாக அமர்த்தினார்கள். (இதே பங்களாவில்தான் பின்னாளில் தேசபந்து சித்தரஞ்சன்தாஸ் காலமானார். மகாத்மா காந்தியும், அனிபெஸண்ட் அம்மையாரும் தேசபந்துவுடன் இந்த பங்களாவில்தான் தங்கி அளவளாவி வந்தார்கள்.) 1909 ஏப்ரல் 18-ஆம் தேதி ராமேந்திரன் தன் மனைவி விபாவதி, குடும்ப வைத்தியர் டாக்டர் ஆசுதோஷ் தாஸ் குப்த, பல வேலைக்காரர்கள் இவர்களுடன் டார்ஜீலிங்குக்கு பயணமானான்.

டார்ஜீலிங்கில் மே 6-ஆம் தேதி ராமேந்திரனின் நோய் மிகவும் கடுமையாயிற்று. அப்போது டார்ஜீலிங் ஸிவில் ஸர்ஜனான டாக்டர் கால்வர்ட் என்பவரை வைத்தியம் செய்ய அழைத்தார்கள். ஜயதேவ்புரியில் இருந்த படோ குமார் ரணேந்திர நாராயணனுக்கும் ஒரு தந்தி கொடுத்தார்கள். ஏதோ அசௌகரியம் காரணமாக ரணேந்திரனால் உடனே வர இயலவில்லை. சோடோ குமார் ரவீந்திர நாராயணன் மட்டும் மே 9-ஆம் தேதி காலை 8 மணி வண்டியில் டார்ஜீலிங்குக் வருவதாக பதில் கிடைத்தது. ஆனால் 8-ஆம் தேதி இரவே ராமேந்திரன் மரித்துவிட்டதாக மற்றொரு தந்தி போகவே, ரவீந்திரனும் தனது வருகையை ஒத்தி போட்டுவிட்டான்.

மே 10-ஆம் தேதி விபாவதி தேவியும் ஸத்யேந்திரனும் பிறரும் டார்ஜீலிங்கை விட்டுக் கிளம்பி ஜயதேவபுரிக்கு வந்து சேர்ந்தார்கள். இதயம் வெடிக்கும் போல் அழுது கொண்டிருந்த

விபாவதி, தன் மங்கலச் சின்னங்களை உறவினர்கள் அகற்றிய போது ஏதேதோ புலம்பினாள். பல உறவினர்கள் இருப்பதையும் மறந்து ஒரு சமயம் சகோதரன் ஸத்யேந்திரனை நோக்கி கடுமையாக, அண்ணா, ஐசுவரியம் மிகுந்த இந்த குடும்பத்தில் என்னை கொடுத்து ராணியாக்கியதும் நீதான், ஆனால் ஏனோ நீயே என்னை இன்று பிக்ஷுணியும் ஆக்கிவிட்டாய் என்றாள். (25 ஆண்டுகளுக்கு பிந்தி நடந்த வழக்கில், விபாவதியின் இந்த வாக்கியம் பற்றிக் கோர்ட்டில் பெரிய வாதம் நடந்தது.)

உறவினர்களிடம் விபாவதி கூறிய செய்திகள் எல்லாமே புதுமையாக இருந்தன. நோய்வாய்ப்பட்டிருந்த கணவருக்கு பணிவிடை செய்ய என்னை அனுமதிக்கவேயில்லை. கணவர் இறக்கும் தருவாயில் கூட அவரைக் காண எனக்கு இடம் தரவில்லை என்று அவள் கூறினாள். (விபாவதி கூறி இது போன்ற விவரங்கள் பற்றியும் வழக்கு விசாரணையின் போது விவாதம் நடந்தது.)

ராமேந்திரனின் சகோதரர்களிடமும், பிற உறவினர்களிடமும் ஸத்யேந்திரன் கூறியது இது : 6-ஆம் தேதி ராமேந்திரனின் நோய் மிகவும் கடுமையாயிற்று. பலத்த சிகிச்சை செய்தும் பலன் இல்லை. 8-ஆம் தேதி நடுநிசியில் அவன் மரித்துவிட்டான். இரவு முழுவதும் பிணத்தை வீட்டிலேயே வைத்திருந்தோம். 9-ஆம் தேதி காலை மயானத்துக்கு கொண்டு சென்று ஈமச்சடங்குகளை நிறைவேற்றினோம்.

ராமேந்திரனின் சிராத்தச் சடங்குகள் மே 18 ஆம் தேதி நடந்தன. டார்ஜீலிங்கில் மஜோ குமாரின் சடலத்தை எரிக்கவேயில்லை என்று ஒரு புரளி எப்படியோ அன்று கிளம்பியது. இதனால் ஹிந்து ஆசாரப்படி தர்ப்பைப் புல்லால்

ஓர் உருவம் (குச புத்தலிகா) அமைத்துப் பிராயசித்தம் செய்ய குடும்பத்தினர் விரும்பினார்கள். ஆனால் ஸத்யேந்திரன், ராமேந்திரனின் உடல் எரிந்துவிட்டது உண்மையே என்று சாதித்து பிரா்யச்சித்த யோசனையை தீவிரமாக எதிர்த்தான். ஆகவே, அவர்கள் இந்த யோசனையை கைவிட்டார்கள். ஆனாலும், பாட்டி ஸத்யபாமாதேவி மட்டும், ராமேந்திரனின் சடலத்தை இவர்கள் எரிக்கவே இல்லை என்று எனக்கு யாரோ கூறுவது போல் அடிக்கடி பிரமை உண்டாகிறது என்று சொல்லி வந்தாள்.

இளம் விதவையான விபாவதியின் கார்டியன் (Guardian) என்ற பொறுப்பை ஸத்யேந்திரனே ஏற்றான். தனக்கு நேர்ந்த பல எதிர்ப்புகளையும் சமாளிப்பதற்காக தன் தாயையும் டாக்காவிலிருந்து அழைத்துக் கொண்டான். தன் எண்ணங்கள், செய்கைகள், தான் எதிர்பார்த்த பலாபலன்கள் அனைத்தையும் ஸத்யேந்திரன் தன் டயரி ஒன்றில் எழுதி வைத்திருந்தான். பவால் குடும்பத்தினரின் கையில் இது எப்படியோ அகப்பட்டுவிட்டது. (பின்னாளில் நடந்த வழக்கில் இந்த டயரியே பெரிதும் ஸத்யேந்திரனைக் காட்டிக் கொடுத்தது.)

1909 நவம்பர் 4-ஆம் தேதி ஸத்யேந்திரனை தன் ஏஜண்டாக விபாவதி நியமித்துக் கொண்டாள். ஸ்காட்டிஷ் யூனியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் ராமேந்திரன் மீது இருந்த பாலிஸி ஒன்றின் தொகையான முப்பதாயிரம் ரூபாயை விபாவதியின் சார்பில் தானே பெற நவம்பர் 5-ஆம் தேதியே முயற்சி எடுத்து, அதில் ஸத்யேந்திரன் வெற்றி பெற்றான். மேலும், ராமேந்திரன் இறந்து இரண்டாண்டு ஆகுமுன்பே, விபாவதியின் பங்காக இரண்டு லட்சம் ரூபாய் பவால் ஸம்ஸ்தான வருஷ வருமானத்திலிருந்து ஸத்யேந்திரனுக்கு முதல் தவணையாக வந்து சேர்ந்தது.

விப்ராவதி 1911 ஏப்ரல் 11-ஆம் தேதி ஜயதேவபுரியை விட்டு புறப்பட்டு, நிரந்தரமாக தன் அண்ணனுடன் தங்கியிருக்க கல்கத்தாவுக்கே போய்விட்டாள். 1910 அக்டோபரில் ராஜேந்திரனும், 1913-ஆம் ஆண்டில் ரவீந்திரனும் அற்பாயுளிலேயே குழந்தை குட்டிகள் ஒன்றும் இல்லாமல் பரலோகப் பிராப்தி ஆனார்கள். ஆகவே, பவால் ஸம்ஸ்தானத்தின் நிர்வாகத்தைக் கோர்ட் அவ் வார்ட்ஸ் (Court of Wards) ஏற்றுக் கொண்டது. ராஜேந்திரனின் மனைவியான ஸரோஜ பாலா என்பவளும் ஜயதேவபுரியை விட்டு வெளியேறி கல்கத்தாவுக்கு போய் அங்கே தன் பிறந்த வீட்டிலேயே வசித்து வந்தாள். ஆனால் ரவீந்திரனின் மனைவியான ஆனந்தகுமாரி மட்டும் தன் சகோதரனின் மகனான ராம்நாராயணனை தத்து எடுத்துக் கொண்டு டாக்காவிலேயே இருந்து வந்தாள்.

இதற்கிடையில், ராமேந்திரன் இறக்கவேயில்லை. உயிருடனே இருக்கிறான் என்று டாக்காவிலும் ஜயதேவபுரியிலும் ஒரு வதந்தி கிளம்பியது. பாட்டி ஸத்யபாமா தேவியும் கனவில் ராமேந்திரன் தன்னை அழைத்துப் பேசுவதாக அடிக்கடி பிரமை உண்டாவதாகக் கூறி வந்தாள். டார்ஜீலிங்கில் அப்போது இருந்த பர்துவான் மகாராஜாவுக்கு 1917-செப்டம்பர் மாதம் 3-ஆம் தேதி அவள் ஒரு கடிதமும் எழுதினாள். என் பேரன் ராமேந்திரனுக்கு டார்ஜீலிங்கில் சிகிச்சை என்ற பாவனையில் விஷம் கொடுத்துவிட்டார்கள். விஷத்தால் தாக்குண்டு அவன் ஸ்மரணையற்றிருந்த போது, அவன் இறந்துவிட்டதாக விஷமிகள் முடிவு கட்டி, அவனை அந்த நிலையிலேயே மயானத்துக்கு எடுத்து சென்றார்கள். ஆனால் ஈமக்கிரியைகள் தொடங்கு முன்பு பலமாக புயலும், மழையும் சீறிக் கொண்டு வரவே, பாடையில் கிடத்திய சடலத்தை அப்படியே

விட்டுவிட்டு மழைக்கு தப்ப அவர்கள் ஓடி ஒளிந்து கொண்டார்கள். அந்த சமயத்தில் பாடைக்கு அருகிலே குகை ஒன்றில் ஒண்டியிருந்த சில நாகசந்நி யாசிகளுக்கு ஏதோ முனகல் சப்தம் கேட்கவே, அவர்கள் வெளியே வந்தார்கள். பாடையில் இருந்த சடலம் சற்றே அசைந்ததைக் கண்டு அந்த சந்நியாசிகள் அது பிணம் அல்ல என்று உணர்ந்து அதை தங்களுடன் எடுத்து சென்று விட்டார்கள். தங்கள் மூலிகைகளின் உதவியால் ராமேந்திரனை அவர்கள் காப்பாற்றினார்கள். இப்போது சந்நியாசிகளோடு சந்நியாசியாக ராமேந்திரன் சுற்றி வருவதாக நான் அறிகிறேன். அவன் இறந்ததாக இவர்கள் கூறும் சம்பவம் நிகழ்ந்த போது, டார்ஜீலிங்கில் தாங்கள் இருந்ததாக தெரிகிறது. என் பேரனின் சடலத்தை லௌகிக முறைப்படி நிச்சயமாக எரித்தார்களா? தாங்கள் ஐயத்துக்கு இடமில்லாமல் இதை சொல்ல முடியுமா? என்று அந்த கடிதத்தில் பர்துவான் மகாராஜாவை ஸத்தியபாமா விசாரித்தாள்.

மூன்று வாரத்துக்கு பின்பு பர்துவான் மகாராஜாவின் பதில் வந்தது. தங்கள் பேரனின் சடலத்தை மயானத்துக்கு எடுத்துச் சென்றதை மட்டுமே நான் பார்த்தேன். மயானத்தில் என்ன நடந்தது என்பதைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது என்று அதில் கண்டிருந்தது.

இதற்கிடையில் விபாவதிக்கு ஆண்டுக்கு இரண்டு லட்சம் ரூபாய் வீதம் பவால் ஸம்ஸ்தானத்திலிருந்து வருமானம் வந்து கொண்டிருக்கவே, 1919-ஆம் ஆண்டு இறுதியில் இருபது லட்சம் ரூபாய்க்கு மேல் அவ்ளிடம் பணம் சேர்ந்துவிட்டது. ஆனால், அவள் எழுத்து வாசனை இல்லாதவள். யுவதி. மேலும் அண்ண்ன் ஸத்யேந்திரனின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவள். அவனே அவளுக்கு பாதுகாவலனாக அவளுடைய சொத்துக்களை

நிர்வகித்து வந்தான். ஆயினும், இவ்வளவு பெரிய தொகை இருந்தும் ஸந்ததியில்லாத அவளுடைய பெயரில் பாங்கியிலோ, வேறு எந்த விதத்திலாவதோ ஒரு கணக்கும் இல்லை. அவளுடைய பெயரில் வீடோ, நிலமோ கூட ஒன்றும் கிடையாது.

கல்கத்தாவில் நாகரிகமான பகுதி ஒன்றில் நவீன வசதிகள் கொண்ட பிரம்மாண்டமான பங்களாவை ஸத்யேந்திரன் தன் பெயரில் வாங்கினான். இதைத் தவிர, விலையுயர்ந்த இரண்டு பெரிய மோட்டார் கார்களையும் வாங்கி தன் பெயரிலேயே பதிவு செய்து கொண்டான். மிகவும் டாம்பீகமாக பெரிய மனித தோரணையில் ஸகல போகங்களுடனும் வாழலானான். இவனுக்கு மாட்சிமை தங்கிய மன்னர் பிரானின் அரசாங்கம் ராய்பகதூர் என்ற பட்டத்தை வேறு வழங்கிவிட்டது.

இந்த நிலையில், 1920 டிசம்பர் வாக்கில் டாக்காவில் ஒரு மர்ம சந்நியாசி தோன்றினார். ஜடாமுடியுடனும் உடம்பெல்லாம் சாம்பல் பூச்சுடனும் கோவணாண்டியாக தோன்றிய அந்த சந்நியாசியின் முன்கையில் உருது மொழியில் பாபா தரம் தாஸ்கா சேலாநாகா என்ற வசனம் பச்சை குத்தியிருந்தது. இந்த சந்நியாசியின் முகம், நடை, பாவனை அனைத்திலும் இலைமறை காய்போல் மஜோகுமார் ராமேந்திரனின் ஜாடையைக் கண்ட மக்கள் அளவில்லா வியப்படைந்தார்கள். ஜயதேவபுரிக்கு இந்த சந்நியாசி வந்த போது, பவால் ஸம்ஸ்தானத்தின் பழைய ஊழியர்களும் உறவினர்களுங்கூடத் திடுக்கிட்டார்கள். மூன்று பவால் சகோதரர்களுக்கும் தமக்கையான ஜ்யோதிர்மயி தேவி இதைப் பற்றிக் கேள்விப்பட்டதும், தன் மகனை அனுப்பி இந்த சந்நியாசியை கையோடு தன் வீட்டுக்கு உடனே அழைத்து வரச் செய்தாள்.

ஜ்யோதிர்மயியின் பங்களாவுக்கு சந்நியாசி வந்த போது, ராணி ஸத்யபாமாதேவி உள்பட, ஸகல உறவினர்களும் அங்கே குழுமியிருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள்ளே உரையாடிக் கொள்வது போன்ற பாவனையில், சகோதரி இந்துமயியோ இறந்துவிட்டாள். திருமண பருவத்திலிருக்கும் அவளுடைய பெண்ணை பீடத்தில் இருத்தி தூக்கிச் செல்ல மாமன் எவனும் இல்லை. என்ன செய்வது? என்றெல்லாம் சொல்லி குறைப்பட்டார்கள். அதுவரையில் மௌனமாக இருந்த சந்நியாசி ஏனோ விசித்து விசித்து அழலானார். கூட்டத்தில் இருந்த ஒருவர் இதுதான் தருணம் என்று ஒரு வேலை செய்தார். ரணேந்திரன், ரவீந்திரன் ஆகிய இரண்டு குமாரர்களின் போட்டோவையும் சந்நியாசியிடம் காட்டி பவால் ஸம்ஸ்தானத்தின் வாரிசுகளான அந்த இருவருங் கூட மரித்துவிட்டதாக கூறினார். சந்நியாசி அப்போது மேலும் விம்மி விம்மி அழத் தொடங்கிவிட்டார். அங்கிருந்த இன்னொருவர், ஸ்வாமி, தாங்கள்தான் உலகைத் துறந்தவராச்சே? பின்னே ஏன் மரணத்தைக் கேட்டு அழுகிறீர்கள்? என்று வினவினார். அதற்கு சந்நியாசி என்ன செய்யலாம், அப்பனே. அஞ்ஞானம் இன்னும் என்னை விடமாட்டேன் என்கிறதே. என்றார். உடனே மற்றொருவர், அஞ்ஞானமா. இந்தப் போட்டோக்களை பார்த்ததும் ஏன் உங்களுக்கு அஞ்ஞானம் உண்டாக வேண்டும்? ஒருவேளை நாங்கள் நினைப்பது போல் நீங்கள் உண்மையாகவே மஜோகுமார் ராமேந்திரன்தானோ? என்றார். உடனே சந்நியாசி பரபரப்போடு, இல்லை, இல்லை, அப்படியெல்லாம் தவறாக முடிவு கட்டிவிடாதீர்கள். எனக்கும் உங்களுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை என்றார். இந்த நிகழ்ச்சிக்கு பிறகு, ஜ்யோதிர்மயியின் வற்புறுத்தலுக்கு இணங்கி அவளது இல்லத்திலேயே தனி விடுதி ஒன்றில் சந்நியாசி வாழ

தலைப்பட்டார். சந்நியாசியை அனைவரும் மிக நுணுக்கமாக கவனித்து வந்தார்கள். இப்படிக் கவனித்ததில், ஸகல அம்சங்களிலும் அவரிடம் ராமேந்திரனின் ஜாடை பிரதிபலிக்கக் கண்டார்கள்.

மே 3-ஆம் தேதி வழக்கம் போல் சந்நியாசி தமது உடலில் விபூதி பூசிக் கொள்ளுமுன், சற்று திரண்ட மார்புடன் வெளியிலே வந்து நின்றார். அகஸ்மாத்தாக அப்போது அவரை ஜ்யோதிர்மயி கண்டாள். கண்டதும் சொல்லொணா வியப்பில் ஆழ்ந்தாள். அவருடைய மேனியில் புலப்பட்ட மச்சங்கள், மறுக்கள் அனைத்தும் ராமேந்திரனின் உடம்பில் இருந்த அதே இடங்களிலேயே இருந்தன. அது மட்டுமல்ல. ராமேந்திரன் சிறு பிள்ளையாக இருந்த போது, ஒரு முறை அவன் மீது ஏதோ வண்டி ஏறிவிட்டது. அதனால் அவனுடைய மார்பில் பலத்த காயம் பட்டது. பின்னால் அந்த காயத்தின் வடு மறையவேயில்லை. இன்று ஜ்யோதிர்மயி அதே மாதிரி ஒரு வடுவை சந்நியாசியிடம் அதே மார்பு பகுதியில் கண்டாள். இருந்த கொஞ்ச நஞ்ச சந்தேகமும் இதன்மேல் அடியோடு அகன்றுவிட்டது. சந்நியாசி, தன் உடன் பிறந்த சகோதரன் ராமேந்திரனே அல்லாமல் வேறு யாருமில்லை என்ற முடிவுக்கு ஜ்யோதிர்மயி வந்துவிட்டாள். இதன்பின் சந்நியாசியை ஜ்யோதிர்மயி தனிமையில் கண்டு கல்லும் கரையும் விதம் இதமாகப் பேசி அவரது வாயிலிலிருந்து உண்மையை வரவழைத்தாள். சந்நியாசி தாம்தான் ராமேந்திரன் என்பதை ஒப்புக் கொண்டார்.

அடுத்த நாள் மாலையில் ஜ்யோதிர்மயியின் வீட்டு வாயிலில் ஜனங்கள் குழுமியிருந்த போது, சந்நியாசி தாமே மஜோகுமார் ராமேந்திர நாராயண் ராய் சௌதுரி என்று

பகிரங்கமாக கூறினார். கூட்டத்தினரில் ஒருவர், அப்படியானால் தங்களுடைய பெற்றோர்கள் யார்? என்று கேட்டார். சந்நியாசி தயங்காமல் திருப்திகரமான பதில் அளித்தார். அதற்குள் இன்னொருவர், ராஜா ராஜேந்திர நாராயண் ராய் சௌதுரியும் ராணி விலாசமணிதேவியும் மிகவும் பிரபலமானவர்கள். இந்த சந்நியாசிக்கு அவர்களுடைய பெயர்கள் தெரிந்திருப்பதில் வியப்பென்ன? வேறு ஏதாவது கேளுங்கள் என்றார். உடனே ஒரு கிழவியைக் கூட்டி வந்தார்கள். இந்த மாது யார்? என்று சந்நியாசியைக் கேட்டார்கள். அந்த மூதாட்டியை ஒரு கணம் உற்று நோக்கிய சந்நியாசி மகிழ்ச்சி பொங்க, அம்மா, நீ ஸுலேகா ஆயா இல்லையா? நீதானே என் அறியாப் பருவத்தில் எனக்கு அமுதூட்டி பாதுகாத்து என்னை வளர்த்து வந்தாய். உன் மஜோகுமாரை உனக்கு அடையாளம் தெரியவில்லையா? என்று கேட்டார். இதோடு நிற்கவில்லை. மஜோகுமாரை வளர்த்த ஸுலேகாவுக்கும் அவனுக்குமிடையே நிகழ்ந்த - மற்றவர் சற்றும் அறிந்திருக்க முடியாத - நுணுக்கமான சில நிகழ்ச்சிகளையும் அவர் கூறினார். மக்களின் சந்தேகம் முற்றும் நீங்கிவிட்டது. அது வரையில் உருது கலந்த ஹிந்தி மொழியிலேயே பேசி வந்த சந்நியாசி, இந்த சம்பவத்துக்கு பின்பு பவால் குடும்பத்து தாய்மொழியான வங்காளியிலேயே பேச தலைப்பட்டார்.

தாம்தான் மஜோகுமார் ராமேந்திரன் என்று சந்நியாசி வெளியிட்டவுடன், அவரை காண திரள் திரளாக மக்கள் வரலானார்கள். தம்மை சந்தித்து அளவளாவிய மக்களுடன் சந்நியாசியும் ஒளிவு மறைவில்லாமல் சிநேக பாவத்துடன் உரையாடினார். (பின்னால் நடந்த வழக்கில் இவரை வேஷதாரி என்று எதிர்க்கட்சிக்காரர்கள் குறிப்பிட்ட போது, இவரது ஒளிவு மறைவற்ற தன்மையைப் பற்றி ஜட்ஜியே குறிப்பிட்டார். ஒரு

மனிதன் மோசம் செய்வதற்காக கூட இப்படியெல்லாம் நடிக்க முடியாது. அப்படி முடியும் என்று கற்பனை செய்யவும் இயலவில்லை என்று ஜட்ஜ் கூறினார்.)

1921-மே 15-ஆம் தேதி பவால் ஸம்ஸ்தானத்தின் குத்தகைதாரர் அனைவரும் கூடி ஒரு பொதுக்கூட்டம் போட்டு, சந்நியாசியே மஜோகுமார் நாராயண் ராய் என்று ஏகமனசாக ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். பிறகு மே 23-ஆம் தேதி ஜ்யோதிர்மயி, தருண்மயி, கோவிந்த முகர்ஜீ மூவரும் டாக்கா ஜில்லா கலெக்டருக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பினார்கள். சட்ட ரீதியாக புலன் விசாரணைகள் நடத்தினால் இந்த சந்நியாசியே ராமேந்திர நாராயண் என்பது நிரூபணமாகும். இவர் இழந்துவிட்ட பதவி ஸம்ஸ்தானத்தில் இவருடைய பங்கு இரண்டையும், அப்படி நிரூபணமாவதன் பேரில், இவர் அடைய உதவி புரிய வேண்டும் என்று அதில் கோரியிருந்தார்கள். ஆனால் இந்த கோரிக்கைக்கு கலெக்டர் செவிசாய்க்கவே இல்லை. ஏதும் நடவடிக்கை எடுக்கவும் இல்லை.

பவால் ஸம்ஸ்தானத்தின் நிர்வாகமோ, கோர்ட் அவ் வார்ட்ஸ் பொறுப்பில் இருந்தது. எனவே, சந்நியாசி தாமே அதன் நியாயமான வாரிசு என்று பிரகடனப்படுத்திக் கொண்டதை கண்டு, வங்காள அரசாங்கமே சற்று திகைத்துவிட்டது. அரசாங்கத்தின் சார்பாக பவால் ஸம்ஸ்தானத்தை நிர்வகித்து வந்த மானேஜர்கள் ஜோகேந்திரநாத் பானர்ஜி, மோஹினி மோஹன் சக்கரவர்த்தி இந்த இருவருந்தான். சந்நியாசியை பற்றிய சகல விவரங்களையும் டாக்கா ஜில்லா கலெக்டருக்கு தெரிவித்து, இந்த இருவரும் நீண்ட கடிதம் ஒன்றை எழுதினார்கள்.

கலெக்டர் பதவி வகித்த ஜே.எச்.லிண்ட்ஸே உடனே ரெவின்யூ போர்டு அதிகாரிகளுடன் இந்த விஷயத்தை பற்றிக் கலந்து ஆலோசிக்க ஆயத்தமானார்.

விபாவதியின் தமையனான ராய் பஹதூர் ஸத்யேந்திரநாத் பானர்ஜிக்கு இதற்கிடையே விஷயம் எட்டியது. தாமே மஜோகுமார் ராமேந்திர நாராயண் என்று சந்நியாசி பிரகடனப்படுத்திக் கொண்ட சங்கதியை அவன் கேள்விப்பட்டான். ரெவின்யூ போர்டு காரியதரிசியான எச்.பி.லேத்பிரிட்ஜ் என்பவரை உடனே தாமதமில்லாமல் பேட்டி கண்டான். ஸ்காட்டிஷ் யூனியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியிலிருந்து பாலிஸித் தொகையை தான் பெற்ற போது, டாக்டர் கால்வர்ட் டெபுடி கமிஷனர் கிராஃபோர்டு இந்த இருவரும் ராமேந்திரன் மரித்துவிட்டதாக தன்னிடம் எழுதிக் கொடுத்திருந்த மரண அத்தாட்சி பத்திரத்தின் நகலை லேத் பிரிட்ஜுக்கு காட்டினான். இதோடு நில்லாமல், இங்கிலீஷ்மான் என்ற பிரபல ஆங்கில பத்திரிகையில் ராமேந்திர நாராயண் ஐயத்துக்கிடமில்லாமல் இறந்துவிட்டான். அவன் இறந்த போதும், பின்னால் ஈமக் கிரியைகள் நடந்த போதும் நான் அருகே இருந்து கண்கூடாக் சகலத்தையும் பார்த்தேன் என்று ஓர் அறிக்கையும் வெளியிட்டான். இதே பத்திரிகையில் இரண்டு நாளைக்கு முன்புதான் பவால் சந்நியாசியை பற்றியும், அவரே ராமேந்திரன் என்று உறவினர்களும் நண்பர்களும் ஏகமனசாக அங்கீகரித்துவிட்டதை பற்றியும் விரிவான விவரங்கள் வெளியாகியிருந்தன. எனவே, எப்பாடு பட்டாவது இந்த சந்நியாசியை ஒரு வேஷதாரி என்பதாக நிரூபித்து விட வேண்டும் என்று ஸத்யேந்திரன் அரும்பாடுபட்டான்.

கலெக்டர் லிண்ட்ஸே விடுத்த கட்டளைப்படி டாக்கா சர்க்கார் வக்கீலான ராய் பகதூர் கசாங்க குமார் கோஷ் என்பவர் மே இரண்டாம் வார வாக்கில் கல்கத்தாவுக்கு பயணமானார். கல்கத்தாவில் அவரை ஸத்யன் பேட்டி கண்டான். புலன் விசாரணை நடத்த டார்ஜீலிங்குக்கு அந்த வக்கீல் சென்ற போது, ஸத்யனும் அவருடனே சென்றான். டார்ஜீலிங்கிலிருந்து திரும்பியதும், சசாங்க குமார் கோஷ் தமது ரிப்போர்ட்டை கலெக்டரிடம் சமர்ப்பித்தார். ஸத்யேந்திரனின் வலையில் அவர் சிக்கிவிட்டார். எனவே, சந்நியாசி ஒரு வேஷதாரியே என்று முடிவு கட்டும் வகையில் பல அம்சங்களை ஆணித்தரமாக தமது ரிப்போர்ட்டில் விளக்கியிருந்தார். இதை தொடர்ந்து மே 27-ஆம் தேதி கலெக்டர் லிண்ட்ஸே ஓர் அறிக்கை வெளியிட்டார். சந்நியாசியை ராமேந்திர நாராயண் என்று யாரும் அங்கீகரிக்கக் கூடாது. தாமே ராமேந்திரன் என்று நீதிமன்றத்தின் மூலம் சந்நியாசி நிரூபித்துக் கொண்டால் அல்லாமல், பணம் சம்பந்தப்பட்ட விவகாரங்களை அவரிடம் வைத்துக் கொள்ளக் கூடாது - இதை மீறி கிஸ்தி பணத்தை அவரிடம் குத்தகைதாரர்கள் கொடுப்பார்களேயானால், அதனால் உண்டாகும் பலாபலன்களுக்கு கோர்ட் அவ் வார்ட்ஸ் பொறுப்பு ஏற்காது என்று அதில் குறிப்பிட்டார். அந்த அறிக்கையில் நகல் ஒன்றை பவால் ஸம்ஸ்தானத்தை சேர்ந்த குடும்பத்தாருக்கும் நிர்வாகிகளுக்குங் கூட மே 23-ஆம் தேதி அவர் அனுப்பிவிட்டார்.

பிரபல வழக்கறிஞர்கள் இருவரை அழைத்துக் கொண்டு கலெக்டர் லிண்ட்ஸே முன்பு அடுத்த நாள் சந்நியாசி ஆஜரானார். அந்த ஆங்கில கனவானுக்கு சந்நியாசிகள், பரதேசிகள் என்றாலே ஒரு வெறுப்பு. இது போதாதென்று

ஸத்யேந்திரனிடமும் சசாங்க குமாரிடமும் அவர் கொண்டிருந்த நட்பு வேறு அவரது உள்ளத்தில் பவால் சந்நியாசி மீது ஒரு தப்பபிப்ராயத்தை உண்டாக்கியிருந்தது. ஆகவே, தம்மை அண்டுவதில் பயன் ஏதும் கிடையாது என்று சந்நியாசியிடம் நிர்த்தாட்சிண்யமாக அவர் கூறிவிட்டார்.

இதற்கிடையில் பஞ்சாபில் புலன் விசாரணை நடத்தியதில் வேறொரு விஷயம் தெரிய வந்தது. தம் குருநாதர் என்று சந்நியாசி குறிப்பிட்ட பாபா தரம்தாஸ் என்பவரிடம் சந்நியாசியின் போட்டோவை எதிரிகள் காட்டியிருக்கிறார்கள். போட்டோவில் உள்ள இவன் என் சீடன்தான். பெயர் சுந்தரதாஸ். லாகூரை சேர்ந்தவன் என்று பாபா தரம்தாஸ் கூறினாராம். உடனே அவரை டாக்காவுக்கு கூட்டி வந்து கபட சந்நியாசியின் வண்டவாளத்தை அம்பலப்படுத்த வேண்டும் என்று பர்துவான் மகாராஜா துடித்தார். ஆனால், அதைக் கலெக்டர் விரும்பவில்லை. இதனால் அந்த யோசனையை ராஜா கைவிட்டுவிட்டார்.

ஆயினும், கலெக்டர் லிண்ட்ஸேயின் சிபார்சை ஒட்டி ரெவின்யூ போர்டு 1921-ஜூன் 3-ஆம் தேதி ஒரு நோட்டீஸை வெளியிட்டது. அதன் வாசகம் இது : பவால் ஸம்ஸ்தானத்தின் வாரிசுகளில் ஒருவரான மஜோகுமார் ராமேந்திர நாராயண் ராய் என்பவர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பே மரித்துவிட்டார் என்றும், அவரது சடலம் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தீக்கிரையாயிற் றென்றும் தகுந்த நம்பகமான ருசுக்கள் மூலம் ரெவின்யூ போர்டுக்கு தெளிவாகியிருக்கிறது. தானே ராமேந்திரன் என்று கூறிக் கொண்டு இப்போது பவால் ஸம்ஸ்தானத்தின் பணத்தை சூறையாடி வரும் சந்நியாசி ஒரு போலி மனிதன். அவனை யாரும் நம்ப வேண்டாம் என்று

கேட்டுக் கொள்ளுகிறோம். எங்கள் அறிக்கையை மீறி அந்த கபட சந்நியாசியிடம் பண விவகாரத்தில் ஈடுபடுகிறவர்கள் தம் கஷ்ட நஷ்டங்களுக்குத் தாமே பொறுப்பாளி ஆவார்கள். இந்த அறிக்கையை முரசொலி சகிதம் 10-ஆம் தேதி ஜயதேவபுரி வீதிகளில் பரப்பினார்கள். இதைக் கேட்டு மக்களிடையே குழப்பமும் கலவரமும் ஏற்பட்டன. போலீஸ்காரர்கள் தடியடியும் துப்பாக்கிப் பிரயோகமுங்கூட செய்ய நேர்ந்தது. அதில் ஒரு மனிதன் மரித்தான். பலர் காயமடைந்தார்கள். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கலெக்டர் லிண்ட்ஸே தமது கெடுபிடியை மேலும் தீவிரமாக்கினார். சந்நியாசியை ஆதரிப்பவர்களுக்கு மறைமுகமாய் பல தொல்லைகள் கொடுக்கலானார்.

ஜூன் மாதத் தொடக்கத்திலிருந்து ஜ்யோதிர்மயியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவராகவே சந்நியாசி வசிக்கத் தொடங்கி சிறிது சிறிதாக தம் துறவுக் கோலத்தை களைந்து விட்டார். ஆகஸ்ட் மாத இறுதிக்குள் மற்றவரைப் போல் சாதாரண மனிதராகிவிட்டார். மோட்டார் காரில் சென்று வரலானார். நாகரிக மனிதராக மாறி வியாபார கம்பெனிகள் நடத்தினார். வைஸிராய், கவர்னர் இவர்களுடைய விருந்துகளில் கலந்து கொண்டார். ஆயினும், சிற்றின்பத்தை சற்றும் நாடாமல் ஒதுங்கிப் பண்புடனே வாழ்ந்தார். இந்த நிலையில் சந்நியாசி தம் குருவான பாபா தரம்தாஸை ஜயதேவபுரிக்கு அழைத்தார். பாபாவும் தம் சீடரின் அழைப்பை ஏற்றுக் கொண்டு டாக்காவுக்கு ஆகஸ்ட் மாதத்தில் வந்து சேர்ந்தார். தம்மை சந்தித்து அளவளாவியர்களிடம் தமக்கும் சந்நியாசிக்கும் இடையே இருந்து வந்த உறவை பற்றியெல்லாம் பாபா தரம்தாஸ் விவரமாகக் கூறிப் பிறகு சென்றுவிட்டார். அவர் கூறிய

விவரங்களைக் கேட்டு மக்களுக்கு சந்நியாசியிடம் மேலும் அதிக அபிமானமே ஏற்பட்டது.

ராணி ஸத்யபாமாதேவி 1922 ஜுலை 14-ஆம் தேதி டாக்காவில் தங்க வந்தாள். ஜ்யோதிர்மயியின் வீட்டிலேயே பத்து நாள் தங்கி சந்நியாசியின் ஒவ்வொரு செயலையும் ஜாடையையும் உன்னிப்பாக கவனித்தாள். அதன் விளைவாக அவர் தன் பேரனான ராமேந்திரன்தான் என்று முடிவு கட்டினாள். உடனே விபாவதிக்கு ஒரு கடிதம் எழுதினாள். ஒரு முறை நேரில் வந்து சந்நியாசியை கண்டு போ என்று அதில் அவளை வேண்டினாள். ஆனால் கடிதத்தை விபாவதி பெற்றுக் கொள்ளாமலே திருப்பி அனுப்பிவிட்டாள். விபாவதியின் செய்கையால் மூதாட்டி ஸத்யபாமா தேவி மனமுடைந்து போனாள். கலெக்டர் லிண்ட்ஸேக்கு பதிலாக அவரது ஸ்தானத்தில் இப்போது நியமனமாகியிருந்த புதிய கலெக்டர் ஜே.ஜி.டிரம்மண்டு என்பவருக்கு தன் குறைகளையெல்லாம் விவரமாக எழுதி தனக்கு உதவும்படி அந்த மூதாட்டி கோரினாள். பலன் காணவில்லை.

1922 டிசம்பர் 15-ஆம் தேதி ராணி ஸத்யபாமாதேவியும் காலமானாள். தன் வம்சத்தினன் என்று தான் பரிபூர்ணமாக நம்பி தன் பேரன் என்று ஏற்றுக் கொண்ட இந்த சந்நியாசியே தனக்கு இறுதி சடங்குகளை செய்ய வேண்டும் என்று மரண தருவாயில் அவள் விரும்பியதால், அப்படியே அவற்றை சந்நியாசி செய்து முடித்தார்.

ஸத்யபாமாதேவியின் மரணத்துக்கு பின் சந்நியாசியும், ஜ்யோதிர்மயியின் மருமகன் சந்திரசேகர் பானர்ஜியும் 1923-ஆம் ஆண்டு கல்கத்தாவுக்கு பயணமானார்கள். கல்கத்தாவை

அடைந்த முதல் நாளே ஸரோஜபாலாவின் வீட்டுக்கு சந்நியாசி சென்றார். ஸரோஜ பாலா உடனே அவரை அடையாளம் கண்டு கொண்டாள். காலஞ்சென்ற தன் கணவன் ரணேந்திர நாராயணின் தம்பி ராமேந்திர நாராயணனே இவர் என்று கூறினாள். கல்கத்தாவில் தங்கியிருந்த நாட்களில் மூன்று முறை விபாவதியும் சந்நியாசியும் நேருக்கு நேர் சந்தித்தார்கள். ஆனால் விபாவதியிடம் பேச சந்நியாசி எவ்வளவு முயன்றும் அவள் ஏனோ அவரை புறக்கணித்தாள். அவரை தன் கணவர் என்று ஒப்புக் கொள்ளவே யில்லை.

கல்கத்தா நகரில் ஐந்து வருஷ காலம் சந்நியாசி தங்கினார். நாகரிக புருஷராகி எல்லாரோடும் சரளமாக பழகினார். பின்பு டாக்காவுக்கு திரும்ப பவால் ஸம்ஸ்தானத்தின் குத்தகைதாரர்களிடமிருந்து கிஸ்தி தொகையை வசூலிக்கலானார். அவரை அநேகம் பேர் நம்பி கிஸ்தியை அவரிடமே செலுத்தினார்கள். என்றாலும், சட்ட ரீதியாக தாமே ராமேந்திரன் என்று நிரூபிக்க சந்நியாசி துடித்தார். எனவே, அதற்கான ருசுக்களை சேகரித்துக் கொண்டார். 1930 ஏப்ரல் 24-ஆம் தேதி டாக்கா ஜில்லா கோர்ட்டில், நான்தான் மஜோகுமார் ராமேந்திர நாராயண்ராய் என்று அங்கீகாரம் செய்ய வேண்டும். பவால் ஸம்ஸ்தானத்தில் என் பங்கான மூன்றிலொரு பாக வருவாயை பெறும் உரிமையை எனக்கு அளிக்க வேண்டும் என்று கோரி ஒரு வழக்கு தொடர்ந்தார்.

தமது பிராது மனுவில் சந்நியாசி எழுதியிருந்த வரலாற்றின் சாரம் இது: 1909 மே 6-ஆம் தேதி டார்ஜீலிங்கிங்கில் நோய்வாய்ப்பட்டேன். அப்போது என் விரோதிகள் என்னை கொல்ல சதியாக விஷம் கொடுத்திருக்கிறார்கள். அனால் நான்

மயக்கமடைந்துவிட்டேன். அதை பார்த்து நான் மாண்டுவிட்டதாக எண்ணி என்னை மயானத்துக்கு 8-ஆம் தேதி இரவு கொண்டு சென்றிருக்கிறார்கள். அப்போது கடுமையான புயல் வீசி மழை பெய்திருக்கிறது. எனவே, பாடையை அங்கேயே போட்டுவிட்டு எல்லாரும் புகலிடம் தேடி ஓடி ஒளிந்திருக்கிறார்கள். புயல் ஓய்ந்து அவர்கள் திரும்பி வந்தபோது, என் உடலைக் காணவில்லை. ஏதோ நாய் நரிகள் இழுத்துப் போயிருக்கும் என்று எண்ணினார்களோ என்னமோ, வெறும் சிதையை எரித்துவிட்டுச் சென்றிருக்கிறார்கள். சிலநாள் கழித்து நான் நினைவெய்தியபோது, சில நாக சந்நியாசிகள் என்னை சூழ்ந்திருப்பதையும் அவர்களுள் ஒருவனாக நானும் மொட்டை தலையுடனும் சாம்பல் பூச்சுடனும் இருப்பதையும் கண்டேன். விரோதிகள் எனக்கு கொடுத்திருந்த விஷம் மிகவும் கடுமையானதாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் துறவி உருவில் என்னை நான் கண்டபோது என் முந்திய வாழ்க்கையை பற்றிய நினைவே எனக்கில்லை, நான் யார் என்று என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. ஆனால், நான் எங்கேயிருந்து வந்தேன், எப்படி அந்த சந்நியாசிகளுள் ஒருவனானேன், என்பதை மட்டும் அந்த நாக சந்நியாசிகள் மூலம் தெரிந்து கொண்டேன். சில ஆண்டுகளுக்கு பிறகு டாக்காவுக்கு வந்தபோது, எப்போதோ நான் அங்கே இருந்திருப்பது போன்ற நினைவு எனக்கு உண்டாயிற்று. முந்தி பழகித் தெரிந்த இடங்கள், தெரிந்த முகங்கள் இவற்றையெல்லாம் காணக் காண என்னைப் பற்றிச் சிறிது சிறிதாக ஓரளவு அறிந்து கொண்டேன். அதுவரையில் நான் மறந்திருந்த என் தாய்மொழியும் எனக்கு சரளமாக வரத் தொடங்கியது.

இப்படியெல்லாம் விவரித்துவிட்டு சந்நியாசி தமது பிராதில் கண்ட கோரிக்கையை, விபாவதியும் ஸத்யனும் எதிர்த்தார்கள். பவால் சந்நியாசியை விபாவதி தன் கணவன் என்று ஒப்புக் கொள்ளவேயில்லை. அவளுடைய தமையன் ஸத்யேந்திரனோ, கோர்ட் அவ் வார்ட்ஸ் மீது பவால் குடும்பத்தினர் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள். அதன் பிடியிலிருந்து நிர்வாகத்தை விடுவித்துக் கொள்ளும் பொருட்டே இப்படி ஒரு நாடகம் நடத்துகிறார்கள் என்று கூறினான். மேலும் அவன், அப்படியே பவால் சந்நியாசிதான் ராமேந்திரன் என்று வைத்துக் கொண்டாலும், துறவு வாழ்க்கையை அவன் மேற்கொண்டு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டதால் அவனுக்கு சொத்தின் மீது பாத்தியதை கொண்டாட உரிமை இல்லை என்றும் வாதாடினான்.

பிராது 1930 நவம்பர் 27-ஆம் தேதி தாக்கலானாலும் ஜட்ஜ் பன்னாலால் போஸின் முன்பு 1933 நவம்பர் 27-ஆம் தேதிதான் விசாரணை தொடங்கியது. சந்நியாசியின் சார்பில் பிரபல வக்கீலான பி.ஸி.சட்டர்ஜி ஆஜரானார். வழக்கில் மொத்தம் 1069 பேர் சாட்சி கூறினார்கள். தஸ்தாவேஜும் பிற பொருள்களுமாக 2075 சான்றுகளை பரிசீலனை செய்தார்கள். 608 நாள் விசாரணை நடந்தது. விசாரணையின் போது, இந்த விவரத்தை பிரசுரிப்பதற் கென்றே நான்கு புதிய செய்தி பத்திரிகைகள் தொடங்கின. அந்தப் பத்திரிகைகளுள் ஒன்றுக்கு தினசரி பவால் (டெய்லி பவால்) என்றே பெயர் வைத்திருந்தார்கள். குறிப்பிட்ட ஒரு வழக்கின் விவரங்களை வெளியிடுவதற்கென்றே உலகில் தோன்றிய முதல் பத்திரிகை (நாமறிந்த மட்டும்) இதுதான்.

1909 மே 7-ஆம் தேதி இரவு நிகழ்ந்த நிகழ்ச்சிகளை விசாரணையின் போது சந்நியாசி விவரமாக கூறினார். சீர்கேடாயிருந்த என் உடம்பை தேற்றிக் கொள்வதற்காக டார்ஜீலிங்குக்கு நான் போக வேண்டும் என்று ஆலோசனை கூறியவனே என் மைத்துனன் ஸத்யேந்திரன்தான். அவனே முன்னதாக அங்கே போய் ஜாகை வசதியும் பிற ஏற்பாடுகளும் எனக்காகச் செய்து வைத்தான். பிறகு நான் போனேன். டார்ஜீலிங்கில் என் நோய் மிகவும் கடுமையாயிற்று. அப்போது என் குடும்ப வைத்தியனான டாக்டர் ஆசுதோஷ்தாஸ் குப்தாவும் வேறு சில வைத்தியர்களும் எனக்கு சிகிச்சை செய்தார்கள். ஆசுதோஷ்தாஸ் குப்தா என் குடும்ப வைத்திய னேயானாலும் ஸத்யேந்திரனுக்கு மிகவும் வேண்டியவன். குறிப்பிட்ட 7-ஆம் தேதி இரவு எனக்கு குடலில் மிகவும் உபாதை உண்டாயிற்று. தாஸ்குப்தா அப்போது எனக்கு கொடுத்த மருந்தை நான் அருந்தியதும் என் உபாதை பின்னும் அதிகரித்துவிட்டது. நான் துடியாய் துடித்தேன். கண்களில் எரிச்சலெடுத்தது, வயிற்றைக் குமட்டியது, ரத்தம் ரத்தமாக வாந்தியெடுத்தது. ஐயோ ஆசு? நீ எனக்கு எதைத்தான் கொடுத்துவிட்டாய்? என்று அலறினேன். அப்படியே மயங்கி மூர்ச்சை போட்டு விழுந்தேன். அதற்கு பின் அன்று நடந்ததொன்றும் எனக்கு தெரியாது.

பவால் சந்நியாசி இங்கே விட்ட வரலாற்றில் தொடர்ச்சியை தர்சன் தாஸ் என்னும் நாக சந்நியாசியின் சாட்சியம் விவரித்தது ; டார்ஜீலிங்கில் மயானத்துக்கு அருகில் பாறைகளிடையே இருந்த குகை ஒன்றில் எங்கள் குரு பாபா தரம்தாஸ் என்பவருடன் நான், ப்ரிதம் தாஸ், லோக் தாஸ் ஆகிய மூவரும் அந்த 8-ஆம் தேதி இரவு உரையாடிக்

கொண்டிருந்தோம். அப்போது சற்று தொலைவில் ஹரிபோல், ஹரிபோல் என்று கூவிக் கொண்டே மக்கள் கூட்டம் ஒன்று ஊர்வலமாக வந்து கொண்டிருந்ததை பார்த்தோம். அவர்கள் ஒரு பாடையை தாங்கி வந்ததைக் கண்டு அது பிரேத ஊர்வலம் என்று உணர்ந்து கொண்டோம், மயானத்துக்குள் அவர்கள் வந்து பாடையை கீழே கிடத்தியதும் பலமாக புயல் வீசி கடுமையான மழை பெய்யவே, பாடையை அப்படியே போட்டுவிட்டுப் புகலிடம் தேடி அந்த கூட்டத்தினர் ஓடிவிட்டார்கள். அப்போது பாடையிலிருந்து என்னவோ ஒரு முனகல் சப்தம் வந்தது, தற்செயலாக என் காதில் பட்டது. எனக்கு மனசில் என்னவோ ஒரு சந்தேகம் எழுந்தது. லோக் தாஸையும் என்னுடன் அழைத்துக் கொண்டு, மழையையும் புயலையும் பொருட்படுத்தாமல், அங்கே சென்றேன். பிரேதம் என்று கருதி பாடையில் அவர்கள் கிடத்தியிருந்த மனிதனின் மூக்கில் விரலை வைத்து லோக்தாஸ் கவனித்தான். மூச்சு வரக் கண்டான். இந்த மனிதன் உயிரோடு இருக்கிறான் என்று வியப்புடன் கூச்சலிட்டான். உடனே நாங்கள் இருவரும் பாடையின் கயிற்றுக் கட்டை அவிழ்த்து அந்த மனிதனை எங்களுடன் எடுத்து சென்றுவிட்டோம். எங்கள் குகைக்கு வந்ததும், காட்டு மூலிகைகள் சிலவற்றை அவனுக்கு கொடுத்து மயக்கம் தெளிய வைத்தோம். இரண்டு மூன்று நாளைக்கு பின் அந்த மனிதனுக்கு மயக்கம் அடியோடு தெளிந்துவிட்டது. ஆனாலும் அவனது உடலில் கடுமையான விஷம் ஏறியிருக்க வேண்டும் என்று தோன்றியது. ஏனென்றால், அவனுக்கு தன் சுய வாழ்க்கையைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லை. ஆகவே, அவன் எங்களுடனேயே இருக்க விரும்பினான். இதனால் நாங்கள் ஒரு நாவிதனை அழைத்து அந்த மனிதனின் தலையை மழுங்க

சிரைக்கச் செய்து, அவனையும் எங்களில் ஒருவனாக சேர்த்துக் கொண்டோம். ஆனால் நான் யார், எங்கிருந்து வந்தேன் என்பது தெரியவில்லையே என்று சில சமயம் அவன் தவிப்பதை பார்த்தால் பரிதாபமாயிருக்கும். அப்போதெல்லாம் எங்கள் குரு பாபா தரம்தாஸ், வீணாக கவலைப்படாதே, அப்பா. நீ எப்போதும் இப்படியே எங்களுடன் அலைய வேண்டியிருக்காது. தகுந்த வேளை வரும். உனக்கு உன் சுயநினைவு திரும்பும். அந்த தருணத்தில் நான் கட்டாயம் உன்னை உன் வீட்டுக்கு திருப்பி அனுப்பிவிடுகிறேன் என்று அவனை தேற்றுவார். ஒரு முறை நாங்கள் நேபாளத்தில் சுற்றி அலைந்து கொண்டிருந்தோம். தான் டாக்காவை சேர்ந்தவனா யிருக்கக் கூடுமோ என்று ஒரு எண்ணம் அவனுக்கு உதித்திருக்கிறது. அதை குருவிடம் கூறினான். அவர், ஆம், உன் அனுமானம் சரிதான். தகுந்த வேளை வந்துவிட்டது. நீ டாக்காவுக்கு போ. உன் வீட்டையும், குடும்பத்தையும் கண்டுபிடித்துவிடுவாய். உலக மாயை என்றாவது உன்னை விட்டுவிட்டது என்று தோன்றினால், நீ தாராளமாக மீண்டும் எங்களுடன் மீண்டும் வந்து சேர்ந்து கொள்ளலாம் என்று விடையளித்து அவனை அனுப்பினார்.

இப்படி விடைபெற்றுக் கொண்ட பவால் சந்நியாசி, 1920 டிசம்பர் மாதம் டாக்கா வந்து சேர்ந்தார்.

இந்த வரலாற்றை தர்சன் தாஸும், பவால் சந்நியாசியும் ஒருவர் விட்ட இடத்தில் மற்றவர் தொடர்ந்து விவரமாக நீதிமன்றத்தில் கூறினார்கள். மஜோகுமார் ராமேந்திர நாராயண ராயின் உடம்பில் இருந்ததாக எண்ணற்ற சாட்சிகள் கூறிய வடுக்களும் மச்சங்களும் மறுக்களும் அப்படி அப்படியே பவால் சந்நியாசி மீதும் தென்பட்டன. சிற்றின்ப பிரியனான

ராமேந்திரன் திரிந்த நாளில் அவனுடன் தொடர்பு கொண்டிருந்த வேசிகளை சாட்சியம் கூற அழைத்த போது, ராமேந்திரனுக்கும் அந்த வேசிகளுக்கும் இடையில் தனிமையில் நடந்த - அவர்களுக்கு மட்டுமே தெரிந்திருக்கக் கூடிய - நுட்பமான பல விஷயங்களை பவால் சந்நியாசி சற்றும் பிசகாமல் அவர்களிடம் கூறினார். அவர்களும் அவரே மஜோகுமார் என்று அடையாளம் கண்டு கொண்டார்கள். பவால் சந்நியாசியின் கையொப்பமும் ராமேந்திரனின் கையொப்பமும் ஒரே மாதிரி இருந்தன. இரு கையெழுத்தும் ஒரே நபருடையவைதான் என்று கையெழுத்து நிபுணர்கள் சாட்சியம் கூறினார்கள்.

இவையெல்லாம் போக குறுக்கு விசாரணையின் போது பிரதிவாதி ஸத்யேந்திரன் பெரிதும் தத்தளித்து போனான். அவனுடைய டயரி வேறு வாதியிடம் சிக்கிவிட்டதால், அதன் மூலம் அவனுடைய குரூரமான திட்டங்கள் ஓரளவு வெளியாயின.

1936 மே 20-ஆம் தேதி வழக்கு முடிவுற்றது. ஆகஸ்ட் 24-ஆம் தேதி ஜட்ஜி பன்னாலால் தமது நீண்ட தீர்ப்பை வாசித்தார். பவால் சந்நியாசி ஒரு வங்காளியே. காலஞ்சென்ற ராஜா ராஜேந்திர நாராயண் ராய், ராணி விலாசமணி தேவி இந்த இருவருக்கும் பிறந்த இரண்டாவது குமாரனான ராமேந்திர நாராயணனே இவர் என்று தமது தீர்ப்பில் அவர் முடிவு கூறினார்.

நீதிபதியின் தீர்ப்புப்படி பவால் சந்நியாசியே ராஜ்யத்தின் வாரிசு என்று நிலைப்பட்டுவிட்டதால் சொத்தில் தமது பங்கை மீண்டும் பெற அவர் நடவடிக்கை எடுத்தார். மேலும் இந்த வழக்கின் செலவு முழுவதையும் பிரதிவாதியே ஏற்க வேண்டும் என்று ஜட்ஜி தம் தீர்ப்பில் கூறியிருந்ததால், அந்த தொகையையும் வசூல் செய்ய சந்நியாசி முயற்சி செய்தார்.

தீர்ப்பைக் கேட்டு மகிழ்ந்த மக்கள் மிகவும் கோலாகலமாக டாக்காவில் விழா கொண்டாடினார்கள். ராமேந்திரன் என்று நிரூபணமாகிவிட்ட பவால் சந்நியாசி தம் மேனியை அணியணியாய் மாலைகள் மறைக்க நகரிலே வைபவமாக பவனி வந்தார். ஜயதேவபுரியிலோ மூன்று நாள் வரையில் ஜே ஜே என்று ஒரு பெரிய திருவிழாவே நடந்தது. இந்த தீர்ப்புக்கு பிறகு ஜயதேவபுரியில் பவால் குடும்பத்தினரின் பிரம்மாண்டமான மாளிகையில் ராஜா ராமேந்திர நாராயண் ராய் சௌதுரி என்ற பெயர் பூண்டு பவால் சந்நியாசி வாழத் தொடங்கினார்.

டாக்கா ஜட்ஜியின் தீர்ப்பை எதிர்த்து ஸத்யேந்திரனும் விபாவதியும் கல்கத்தா ஹைகோர்ட்டில் 1936 அக்டோபர் 5-ஆம் தேதி அப்பீல் செய்து கொண்டார்கள். அந்த அப்பீல் 1938 நவம்பர் 14-ஆம் தேதிதான் விசாரணைக்கு வந்தது. அவர்களுடைய தரப்பில் பிரபல பாரிஸ்டர் ஏ.என்.சௌதுரி வழக்காடினார். ஸர் கோஸ்டெல்லோ, ஜஸ்டிஸ் விச்வாஸ், ஜஸ்டிஸ் லாட்ஜ் இந்த மூவரும் அப்பீலை விசாரித்த நீதிபதிகள். இரு தரப்பினரும் வழக்கறிஞர்களுக்கு மொத்தம் 25 லட்சம் ரூபாயை வாரி வழங்கியதுதான் பலன். அப்பீலை நீதிபதிகள் நிராகரித்துவிட்டார்கள்.

பவால் வம்சம் சந்ததியற்று அழிந்துவிடக் கூடாது என்று இந்த நாளில் உற்றார் வற்புறுத்தியதால் சந்நியாசி மீண்டும் ஒரு பெண்ணை திருமணமும் செய்து கொண்டார்.

கல்கத்தா மேல்கோர்ட்டில் அப்பீல் தோற்ற பின்னரும் ஸத்யேந்திரனும் விபாவதியும் விடுவதாக இல்லை. இறுதி வரையில் போராடியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு ப்ரிவி கவுன்ஸிலுக்கு மறு அப்பீல் செய்து

கொண்டார்கள். சந்நியாசியும் சளைத்து பின்வாங்காமல், பிரபல வழக்கறிஞரான டி.என்.ப்ரீட், கேஸி, என்பவரை தம் சார்பில் வழக்காட நியமித்தார். பல ஆண்டுகள் கழித்துத்தான் இந்த அப்பீல் விசாரணைக்கு வந்தது. இதிலும் ஸத்யேந்திரனும் விபாவதியும் தோல்வியே அடைந்தார்கள். ப்ரிவி கவுன்ஸில் 1946 ஜூலை 30-ஆம் தேதி அவர்களது அப்பீலை நிராகரித்து, சந்நியாசியே ராமேந்திர நாராயண் ராய் என்று தீர்ப்பளித்தது. இந்த நற்செய்தியை தாங்கிய தந்தி ஏனோ தாமதமாக வந்தது. பத்திரிகை மூலம் மக்களுக்கு விஷயம் தெரிய வந்தது போலவே சந்நியாசிக்கும் முதலில் இந்த செய்தி தெரிய வந்தது.

இதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்பு சந்நியாசியே ராமேந்திரன் என்று ஜில்லா ஜட்ஜி தமது தீர்ப்பில் கூறியபோது, டாக்கா நகர மக்கள் குதூகலத்துடன் விழா கொண்டாடினார்கள். ஆனால், 1946-ஆம் ஆண்டிலோ, பின்னாளில் நிகழ்ந்த பயங்கர மதவெறி கொலைகளின் அறிகுறிகள் ஆகஸ்ட் முதல் வாரத்திலேயே அங்கங்கே தென்பட்டதால், மக்களின் உள்ளம் விழா கொண்டாடும் நிலையில் இல்லை. 62 வயதாகியிருந்த சந்நியாசியும் அத்தகைய ஒரு விழாவை ஏற்கும் நிலையில் இருந்திருக்கமாட்டார்.

இந்த வழக்கு எவ்வளவு அதிசயமாயிருந்ததோ அவ்வளவு அதிசயமான மற்றும் சில சம்பவங்களும் இதையொட்டி நிகழ்ந்தன.

இந்த வழக்கில் சாட்சியம் கூற ஜே.டி.ராங்க் என்னும் பழைய ஐ.ஸி.எஸ். அதிகாரி ஒருவர் பிரத்தியேகமாக வந்திருந்தார். சாட்சியம் கூறிய மறுநாளே வைத்திய விடுதியில் அவர் மரித்துவிட்டார்.

ராய் சாஹுப் மஹதாப் கோஷ் என்ற மற்றொரு சாட்சி தற்கொலை செய்து கொண்டு மாண்டார்.

ப்ரிவி கவுன்ஸிலின் தீர்ப்பை கேட்டதும் காளி கோயிலுக்கு சென்று அம்மனை தரிசித்துவிட்டு சந்நியர்சி திரும்பினார். அன்றே - அந்த 1946 ஆகஸ்ட் 3-ஆம் தேதி இரவே - திடீரென்று அவர் இறந்துவிட்டார். அடுத்த நாள் காலையில் அவரது சடலத்தை மயானத்துக்கு எடுத்து சென்றார்கள். 1909-ஆம் ஆண்டில் டார்ஜீலிங்கில் நிகழ்ந்தது போலவே இப்போதும் பலத்த மழை பெய்து புயல் அடித்தது. முன்பு நடந்தது போலவே சந்நியாசி மீண்டும் உயிர் பெற்று சிதையிலிருந்து எழுந்துவிடுவார் என்று நம்பி மயானத்திலேயே வெகு நேரம் பல்லாயிரக்கணக்கான மக்கள் காத்து கொண்டிருந்தார்கள். ஆனால் அப்படியொன்றும் நிகழவில்லை. அரசகுமாரராக பிறந்து ஆண்டியாக வாழ்ந்து, வழக்கு வரலாற்றிலேயே ஒரு புரட்சியை உண்டாக்கிவிட்டு மறைந்த அந்த அதிசய மனிதரின் சடலம் சில மணி நேரத்துக்குள்ளாகவே உலக இயலுக்கிணங்க தீக்கிரைதான் ஆகிவிட்டது.



